

திருநான்மறைகளின்

# உருத்திரத் திரட்டு

இது,

வேத மொழிபெயர்ப்பாசிரியர்

**காசிவாசி சிவானந்த யதீந்திர சுவாமிகளால்**

தமிழில் மொழி பெயர்த்து திரட்டப்பட்டு


சென்னை

திருவொற்றியூரான் அடிமை என்னும்

திருநான்மறைப் பதிப்பாளராகிய,

**த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களால்**

பதிப்பித்து

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

1940

உருத்திர பரமேசுராய நம:

# உருத்திர மான்மியம்

'एक एव रुद्रो न द्वितीयाय तस्थे' உருத்திரனொருவனே இரண்டிலன் என்பது,

எசுர். கா-1, பிர-8, அநு- 6வது மந்திரம்.

ஈண்டு, உலகைப் படைத்துக் காத்தழிக்கும் மும்மூர்த்திகளையு முண்டாக்கும் மா சங்காரக் கடவுளே உருத்திரன் எனப்படும்.

இப் பொருளையே,

'ब्रह्म विष्णु रुद्रेन्द्रास्ते संप्रसूयन्ते' 'பிரமன் விஷ்ணு உருத்திரன். (இவன் கணதேவன்) என்னுமிவர்கள் பரமேசுரனிடத்திலிருந்து உண்டாகின்றார்கள் எனவும், 'ईशानस्सर्वविद्यानां' எல்லா வித்தைதகட்கும் இறைவன் பரமேசுரன்' எனவும், 'तमीश्वराणां प्रथमं महेश्वरं' 'மும்மூர்த்திகட்கும் ஈசுரனாகிய அப் பரமேசுரனை' எனவும், 'कारणन्तु ध्येयस्सर्वैश्वर्यसंपन्नः सर्वेश्वरश्च शंभुः' 'எல்லா ஐசுவரியங்களையுடையவனும் எல்லாம் வல்ல காரணனாகிய பரமேசுரனே தியானிக்கத் தக்கவன்' எனவும், 'विश्वस्यैकं परिवेष्टितार मीशन्तं' ஒன்றாய் உலகில் நிறைந்துள்ளவனும் இறைவனுமாகிய பரமேசுரனை' எனவும், அதர்வசிகை, சுவேதாசுவதரம் முதலான உபநிடதங்களுங் கூறுகின்றன.

இதுபற்றியன்றே, சிவதத்துவ விவேகமும்,

'அயனை முன்படைத்திடுமொரு கற்பத்
 தரியை முன்படைத்திடுமொரு கற்பத்து
உயருருத்திரன்றனை முனம் படைப்ப னொருகற்பமற்
 றொரு கற்பந் தன்னில்
மூயனுமூவரை யொருங்குடன் படைப்பன்
 முன்பிறந்தவர் மற்றிருவரையும்
செயலினாற் படைக்கவு மருள்புரிவன்
 சிவபிரானெனி லேற்றமிங்கெவனோ'

என்று அதைத்துக் கூறுகின்றது.

மற்றும்,

'द्यावापृथिवी जनयन् देव एकः' வானையும் மண்ணையும் உண்டாக்கினவன் ஒரு தேவன்' என, சுருதியும்;

'कर्ताहं सर्वलोकानां मम कर्ता महेश्वरः ।
तस्य देवादिदेवस्य कर्ता कोऽपि नविद्यते'

என்று, சிவரகசிய கண்டமும்,

'त्रयस्ते कारणात्मानः साक्षाज्जाता महेश्वरात्' என்று வாயவீய சங்கிதையும்,

'वामाङ्गादस्य दक्षिणाङ्गादहं प्रभोः ॥ भवोसौ जगतान्धाता तवापि ममापिच'

என இலிங்க புராணமும்,

'ईश्वरश्चेतन कर्ता पुरुषः कारणं शिवः ।
विष्णु ब्रह्म शशी सूर्यो देवताश्चैव सान्विताः'

என்று, பத்ம புராணமும்,

'सर्वतत्व विधानज्ञ प्रधान पुरुषेश्वर
यो सृजद्दक्षिणादङ्गात् ब्रह्माणं लोकसंभवम्'
'वामपार्श्वात्तथा विष्णुं लोकरक्षार्थ मीश्वरः
युगान्ते तु समापन्ने रुद्र प्रभुस्तथाऽसृजत्'

என்று, மாபாரதச் சாந்தி பருவமும்,

'ब्रह्मविष्णुशिवास्सर्वे स्थावराणि चरिष्णवः
संभूतान्येव भवतो विलीनानि भवन्त्यहो'

என்று, பாரத அநுசாசன பர்வமும்,

'स एव जगतान्धाता महादेवो महेश्वरः'

என்று, கந்தபுராணமும்,

'त्वत्संभूता कृतो' என்பது முதலியதால், பாரதம் துரோண பருவமும்,

மும்மூர்த்திகளையும் படைத்து உலகின் முத்தொழிலை நடாத்துகின்றவன் உருத்திர பரமேசுரனே என்று கூறுகின்றன. மற்றும், இவ்வாறே வரும் எண்ணிறந்த பிரமாண வாக்கியங்களாலும் இதை உய்த்துணர்ந்து கொள்க.

மற்றும், இவ்வாறே வரும் தமிழ் மறை நூல்களின் வாக்கியங்களுள் சிறிதை எடுத்துக் காட்டுவாம் :—

'விரைமலரோன் செங்கண்மால் ஈசனென்னும் மூவராய முதலொருவன்' எனவும்,

'பயந்து காத்தழிக்கு மற்றை மூவர்கோனுய் நின்ற முதல்வன்' எனவும்,

'அரியாகிக் காப்பா னயனாய்ப் படைப்பா னரனாயழிப்பவனுந் தானே' எனவும்,

'படைத்தளித் தழிக்க மும்மூர்த்திகளாயினை' எனவுங் கூறுகின்றன. மேலும், இவ்வாறு வருவனவற்றைக் கண்டு உய்த்துணர்ந்து கொள்க.

இனி, அற்றேலஃதாகுக. 'अहं सर्वस्य प्रभवो मत्तस्सर्वं प्रवर्तते' எனவும்,

'ईश्वरस्सर्वभूतानां' எனவும்,

கீதை முதலிய நூல்களில் விஷ்ணுவினிடத்திலிருந்து படைப்புக் கூறப் பட்டிருத்தலானும்,

பாரதத்திலும், 'அளவில் பேரொளிப் பகவனா முருத்திரற்கு அச்சுதனான்மாவாம்'

என்று, உருத்திர பரமேசுரனுடைய ஆன்மா விஷ்ணுவெனக் கூறப் பட்டிருத்தலானும், விஷ்ணுவே படைப்பு முதலியவற்கு முதற் கடவுள் எனின்? அற்றன்று, 'செயலினாற் படைக்கவு மருள் புரிகுவன்' என்று முன் கூறியவாறே, எல்லாவற்றிற்கு முழுமுதற் கடவுளாகிய பரமேசுரனை உபாசித்து உபாசனை முற்றுமிடத்து அவனோடபேதமாய் படைப்பாதிக ளியற்றுவதற்கு விஷ்ணு உரியார் எனக் கொள்ளக் கிடத்தலின் என்க. மற்றும், விசுவாமித்திரரைப் போல் ஏகதேசப் படைப்பாமெனக் கொள்ளினும் அமைதலுமறிக.

இதுபற்றியே, பாரதம் துரோண பருவத்திலும்,

'ब्रह्मणस्सृष्टिकर्तृत्वं विष्णोर्दानवमर्दनं'

'स्वर्गाधिपत्यमिन्द्रस्य शिवपूजाविधेः फलम्'

மற்றும், கண்ணபிரான் பரமேசுர உபாசனையில் பெரும்பற்றுள்ளான் என்பதை, கீதையில், 'पश्य मे पार्थ दिव्यं परमं योगमैश्वरम्' என்பது முதலிய வாக்கியத்தால் ஈசுரோபாசனை கைவந்த கண்ணபிரான் தனது விசுவரூபத்தைக் காட்டியருளியதைக் கூறியிருத்தலால் இனிதுணர்க.

இவ்வாற்றால் ஈசுரோபாசனை முடிந்து பரசிவனோடு அபேத மடைந்தனலன்றோ, விஷ்ணுமேலணிந்த மலர் மாலை சிவன் திருமேனியிலிருந்ததுமா மென்க.

அற்றாகலினன்றே,

"கண்ணன்மே லணிமலர மாலைத்துங் காயெரி
வண்ணன் மேற் காண்டலும் மகிழ்ந்து மேதினி
யுண்ணு மாதவன் சிவ னுருவ மென்றுணர்ந்து"

எனப் பாரதத்துட் கூறப்பட்டிருக்கின்றது.

இப்பொருளையே,

" தீர்த்த னுலகளந்த சேவடிமேற் பூந்தாமம்
சேர்த்தியவையே சிவன் முடிமேற்றான் கண்டு "

என, நம்மாழ்வாருங் கூறியுள்ளார். விரிக்கிற் பெருகுமென விடுத்தாம்.

இனி, மேற்காட்டியவற்றால் பரமேசுரனே முழுமுதற் கடவுளெனத் துணியப்படுவதில் ஒருவாறு இழுக்கிருக்கினும்,

காயத்திரி மந்திரத்தின் பொருள் பரசிவனே யாதலானும்,
இராமபிரான் சிவலிங்கத்தைத் தாபித்துப் பூசித்ததானும்,
கண்ணபிரான் வேண்டியபடி மகற் பேறளித்தருளியதானும்,
ஆயிரந் தாமரைமலர் கொண்டு சிவனை விஷ்ணு அர்ச்சித்ததானும்,
சிவன் விஷ்ணுவிற்கு சக்கர மளித்தமையானும்,
காமனைக் கண்ணாலெரித்ததானும்,
காளகூட விடத்தைக் கண்டத்தடக்கிக் கொண்டதானும்,
எமனைக் காலால் எற்றியதானும்,
முப்புரத்தைச் சிரிப்பாலெரித்தலானும்,
தக்கனுடைய வேள்வியைத் தகர்த்து ஒழித்ததானும்,
அருச்சுனனுக்குப் பாசுபதத்தை அளித்தருளியதானும்,
நரசிம்மமூர்த்தியை நாசஞ் செய்ததானும்,
மோகினி வடிவெடுத்த மாதவனைப் புணர்ந்து ஐயனாரைப் பெற்றதானும்
அகிலத்தோர்களருச்சித்து வரலானும்,
அன்பர்கட்கு அஷ்ட ஐசுவரியங்களையும் அளித்தருளுவதானும்,
அவதாரம் பத்திலும் அன்போடு அரி அருச்சித்திருத்தலானும்,

விஷ்ணுவும் பிரமனும் அடிமுடியைத் தேடும்போது, சிவன் சோதி வடிவு கொண்டெழுந்ததானும்,

பிறத்தல் இறத்தல் முதலான சீவகுணங்களில்லாமையானும்,

காசியில், விஷ்ணுவே முழுமுதற் கடவுள் எனப் பொய் புகன்ற வியாச முனிவரின் கை தம்பித்து நின்றதானும்,

முப்புரத்தை எரித்தபோது, திருமால் இடமாய் பரசிவனைத் தாங்கியதானும்,

எண்ணில்லாத பிரமர்களுடைய தலைகளை மாலையாக அணிந்திருத்தலானும்,

வேண்டுவார்க்கு, ஞானத்தையும் முத்தியையும் இனிது அளித்தலானும் உருத்திர பரமேசுரனே எல்லாத் தேவர்களினுஞ் சிறந்த முழுமுதற் கடவுளாவன் என்பதை இனிதுணர்க. விரிக்கிற் பெருகுமென விடுத்தாம். இதன் விரிவை, ஹரிஹர தாரதம்மியத்திற் காண்க. உருத்திர பரமேசுரன் திருவருளோங்குக.

**உருத்திர மான்மியம் முற்றிற்று.**

ஓம்

# வித்யாரணிய முனிவர் இயற்றிய

# உருத்திர கல்பம்

---

### மகரிஷிகள் வியாசரை வினவல்.

எல்லா முணர்ந்தவரும், விஷ்ணுவின்கூறாய் அவதரித்தவருமாகிய வியாச முனிவரே! எசுர் வேதத்தின் நான்காங் காண்டத்தில் ஐந்தாம் பிரபாடகமாகிய உருத்திர மந்திரங்கள் நூறாக இருத்தல்பற்றி, 'சத ருத்ரீயம்' என வழங்கப் பெற்று வருகின்றதன்றோ, அதனுடைய திருப்பெயர்களின் வேறுபாடுகளை முறையாய்த் தம்மிடத்து கேட்க விரும்புகின்றோம் என்பது.

### வியாசர், முனிவர்கட்கு விடைகூறல்.

அந்தணர்காள்! யான், முதலில் சதருத்திரீயத்தின் மகிமையைச் சொல்கின்றேன் கேட்பீர்களாக. தேவர்களுள் உருத்திர மகேசுரனைப் போலும், புராணங்களுள் கந்தப்புராணம் போலும், மிருதிகளுள் மநுமிருதியைப் போலும், வேதத்தில் 'சத ருத்ரீயம்' என நூறு மந்திரங்களிருக்கின்றன. அவை, இருடி, சந்தம், தேவதை, விநியோகம் என்பவைகளுடன் கூடியவைகள், உலகில் மிகவும் அரியவைகள் என்றுணர்வீர்களாக.

### பெயர்கள்.

உருத்திரம், உருத்திர ஏகாதசினி, ஸ்ரீ ருத்திரம், மகாருத்ரம், அதிருத்திரம் என ஐவகைப்படும். அவற்றுள்,

ஒரு உருத்திரமும், ஒரு சமகமுஞ் சேர்ந்தது உருத்திரமாம்.

பதினொரு உருத்திரங்களும் ஒரு சமகமுஞ் சேர்ந்தது உருத்திர ஏகாதசினீ எனப்படும்.

நூற்றிருபத்தொரு உருத்திரங்களும் பதினொரு சமகங்களுஞ் சேர்ந்தது ஸ்ரீ ருத்திரமாம்.

ஆயிரத்து முந்நூற்று முப்பத்தொரு உருத்திரங்களும், நூற்றிருபத்தொரு சமகங்களுஞ் சேர்ந்தது மகாருத்திர மெனப்படும்.

14641 உருத்திரங்களும், 1331 சமகங்களுஞ் சேர்ந்தது அதிருத்திரமாம்.

இவைகள், பத்து பத்து முறை மீண்டும் மீண்டும் ஓதுவதால் வருகின்றவைகள்.

## உருத்திர வுபாசனையின் வகைகள்.

பூசை, ஹோமம், தர்ப்பணம், செபம், அபிடேகம் என்றும் ஐவகையாக இச் சதருத்திரீயம் உபாசிக்கப்படுகின்றது. அவற்றுள்,

### (1) சதருத்திரீய அர்ச்சனையின் உபாசனை முறை.

'நமஸ்தே ருத்ர' என்பது முதலாக, 'நமோ ருத்ரேப்ய:' என்பது ஈறாகவுள்ள உருத்திர மந்திரங்களை, நாற்பது மந்திரங்களாகப் பிரித்துக் கொண்டு, ஒவ்வொரு மந்திரத்திற்கும், பீசம், ரிஷி, தேவதை, சந்தம் பயன் என்பவைகளுடன் அச் சிவ நாமங்களால், மண், பொன், கல் முதலான சிவலிங்கங்கட்கு அர்ச்சனை செய்தல். இது முதலாவது உபாசனையாம்.

### (2) ஹோம வுபாசனையின் முறை.

முறைப்படி வளர்த்த தீயில், சந்தம், இருடி, முதலியவைகளுடன் அம்மந்திரங்களை ஸ்வாஹாகாரமாய் ஓதி, 'இது உருத்திர பரமேசுரன் பொருட்டு எனதன்று' என்று தியாகஞ் செய்து ஹோமஞ் செய்தல்; அதாவது நெய்யை தீயில் அர்ப்பணஞ் செய்தல் ஹோமோபாசனையாம். இது, மந்திரங்களின் பிரிவு வேறுபாட்டால் எண்ணிறந்தன. அவற்றுள், பிரித்தல் வகையும், மூன்றால் பெருக்கிப் பிரித்தல், ஆறால் பெருக்கிப் பிரித்தல், பதினாறால் பெருக்கிப் பிரித்தல், நாற்பத்தெட்டால் பெருக்கிப் பிரித்தல், நூற்றறுபத்தொன்பதால் பெருக்கிப் பிரித்தல் என ஐவகைப்படும். இவைகளைக் கொண்டே மேல்வரும் எண்கள் ஒவ்வொன்று ஐந்தைந்து வகைப்படும் என்பதை யுணர்க.

அவ்வாறே, ஸ்ரீருத்திர மந்திரங்களை, நூறு அம்சங்களாகப் பிரிக்கில் ஐந்தாவது வகைக்கு மொத்த ஹோமங்கள், 170 ஆகின்றன.

அதையே பத்து அம்சங்களாகப் பிரிக்கில் 2041 ஹோமங்களாகின்றன,

அதன் சமக்ர ஹோமங்களோ, 20460 ஆகின்றன.

அவ்வாறே மஹா ருத்ரமந்திரங்களை நூறு அம்சங்களாகப் பிரிக்கில் ஐந்தாவது வகைக்கு மொத்த ஹோமங்கள், 2203 ஆகின்றது.

அதையே, பத்து அம்சங்களாய் பிரிக்கில் 22609. ஹோமங்களாகின்றன.

அதன் சமக்ர ஹோமங்களோ, 65219 ஆகின்றன.

இவ்வாறே அதிருத்திரத்தையும், நூறம்சமாக்கிப் பிரிக்கின், மொத்த ஹோமங்கள், 24824 ஆகின்றன.

அதையே பத்து அம்சங்களாகப் பிரிக்கில் 248879, ஹோமங்களாகின்றன.

(3) இனி, தெரிந்து தெரியாமல் களவு செய்ததற்கு, முறையாய் ஏகாதச ருத்திரியைச் செபித்துவிட்டு, முடிவில் இருபத்தெட்டுக் கோதானங்கள் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, பிராசாபத்தியஞ் செய்துவிட்டு, ஏகாதச ருத்திரியை ஆறுமாதஞ் செபித்தல் வேண்டும். முடிவில் நூறு கோதானங்கள் செய்தல் வேண்டும். இன்றெனில், மீண்டும் ஒரு மாதம் ஏகாதச ருத்திரியைச் செபித்தல் வேண்டும் என்பது.

(4) இனி, தெரிந்து தெரியாமல் குரு மனைவியைப் புணர்ந்ததற்கு, நியதமாய் ஏகாதச ருத்திரியைச் செபித்து முடித்து, முடிவில், இருபத்தெட்டுக் கோதானங்கள் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, மூன்று பிராசாபத்தியங்கள் செய்தபின், ஏகாதச ருத்திரியை நாடோறுஞ் செபித்தல் வேண்டும் என்பது.

(5) இனி, ஆண் பெண்களின் மலட்டுத் தன்மைகள் நீங்குவதற்கு, முறைப்படி விரதமிருந்து, மறை யுணர்ந்தவனும், ஆடை ஆபரணங்களால் அழகுடையவனும், ஆகம முறைப்படி அநுட்டான முடையவனுமாகிய ஒரு ஆசிரியனையும், பத்து இருத்துவிக்குக்களையும் வரவழைத்து ஆடைகள், தட்சிணை முதலானவைகளைக் கொடுத்து, உருத்திர பரமேசுரனுக்கு முறையாய் பத்து நாள் ஏகாதச ருத்திர அபிடேகஞ் செய்வித்து, பதினோராம் நாள் அந்தணர்களுக்கு அன்னமளித்து, பன்னிரண்டாநாள் நானூற்று இருபத்தெட்டு சதருத்திரீய ஹோமங்களைச் செய்து வைத்தல் வேண்டும். இதனால், காகமலடு, கதலிமலடு, பெருமலடு, குழந்தை பிறந்து பிறந்து இறக்கும் மலடு என்னும் நால்வகை மலடுகளும் நீங்கும் என்பது.

**உருத்திரகல்பச் சுருக்கம் முடிந்தது.**

---

குறிப்பு :—இது, ஓரியண்டியல் லைபாரியிலிருந்த உருத்திர கல்பம் என்னும் ஓலைச் சுவடியிலிருந்து சங்கிரகிக்கப்பட்டது.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## நான்காங் காண்டத்தில் ஐந்தாம் பிரபாடகம்.

## சதருத்திரீய ஹோமம்.

### ஐந்தாம் பிரபாடகத்தின் உபோற்காதம்.

रुद्रोवह्नि रुमास्वाहा तस्मै तस्यै नमोनमः ।

रुद्रो वेद उमाशास्त्रं तस्मै तस्यै नमोनमः ॥ १ ॥

என்பது உருத்திர இருதய வுபநிடதம்.

ஈண்டு, உருத்திராக்கினியின் உண்மைத் தத்துவத்தைக் கூறுமுன் உருத்திரன் அக்கினி என்னுஞ் சொற்களின் பொருள்களை விரிப்பாம்.

ரோதயதி = அசுரான் இதி ருத்திர: அதாவது அசுரர்களை அழச் செய்கின்றவன் உருத்திரன்.

அல்லது, பிரஜா: ஸம்ஹரன் ரோதயதி இதி ருத்திர: அதாவது பிரளய காலத்தில் உயிர்களைச் சங்கரித்து அழச் செய்கின்றவன் உருத்திரன்.

அல்லது, ரோதயதி இதி ருத்திர:, தேவர்களால் துன்புறுத்தப்பட்டபோது அழுகின்றவன் உருத்திரன்.

அல்லது, சர்வகத ருஜாங் = துக்காங், த்ராவணுத் (நீக்கலின்) உருத்திரன், அதாவது எல்லா வுயிர்களிடத்துமுள்ள துன்பங்களைப் போக்கலின் உருத்திரன்.

அல்லது, ரோதன ஹநநாத் ருத்திர:, அதாவது அழுகையைப் போக்குகின்றவன் உருத்திரன்.

அல்லது, ருதம்—வேதமாகிய ஒலியை, கல்பாதியில் பிரஹ்மணே ராதி = ததாதி இதி உருத்திரன், அதாவது மறையாகிய ஒலியை ஊழிக் காலத்தின் முதலின் பிரமனுக்கு அருளியதால் உருத்திரன்.

அல்லது, ருதா = நாதேன, சகலம் இதம் த்ராவயதி = ரஞ்சயதி இதி ருத்திர:, அதாவது நாதத்தால் உலகை இன்புறச் செய்கின்றவன் உருத்திரன்.

அல்லது, ருதா = பிரணவேன, அல்லது வேதேன, இஷ்டம் அர்த்தம் ராபயதி இதி உருத்திரன், அதாவது மறையால், அல்லது, ஓங்காரத்தால் வேண்டியவற்றை அளிக்கின்றவன் உருத்திரன்.

அல்லது, ருதம் = துக்கம் அல்லது தத்ஹேதும், த்ராவயதி இதி ருத்திர: அதாவது துன்பத்தை அல்லது துன்ப காரணத்தைப் போக்குகின்றவன் உருத்திரன் என்பதாம்.

மற்றும், 'अहमेकः प्रथमासं' என்பது முதலியதும், உருத்திரன் பரமேசுரனெனக் கூறுகின்றது.

அங்ஙனமே, 'प्रयोजनार्थं रुद्रेण मूर्तिरेका त्रिधाकृता' என்பது முதலியதால், உருத்திரனே மும்மூர்த்திகளாயினன் என்கின்றது உருத்திர இருதய வுபநிடதமும்.

மற்றும், 'अस्ति कर्ता स हृत्वैदज्जगृत्यस्मात्प्रभुर्हरः' 'உலகை அழித்து ஆக்குகின்றவன் உருத்திரன்' என்று கூறுகின்றது சிவஞானபோதமும்.

அஃதன்றியும், அஜர், ஏகபாதர், அஹிபுத்னர், விரூபாக்ஷர், ரைவதர், ஹரர், பகுரூபர், திரியம்பகர், அசுரேசர், சாவித்ரர், சயந்தர் என்பவர்களும் உருத்திரர்கள் எனப்படுவர். இவர்களுடைய மனங்களிலுதித்தவர்கள் எண்பத்து நான்கு கோடி பேர்களும் உருத்திரர்களாவர்.

தேவிபாகவதமும், தேவியிடத்திலிருந்து மூலருத்திரர், அம்சருத்திரர் என இரண்டு உருத்திரர்கள் தோன்றினர் என்று கூறுகின்றது.

வெளியில் தமோகுணமும், உள்ளில் சத்துவ குணமும் உடையவன் உருத்திரன் என்றும், 'रुद्रः प्रजापतिर्विष्णुरिति भेदमुपैतिहि' குணங்களால் மும்மூர்த்திகளாயினன் எனவும் சூதசங்கிதையுங் கூறுகின்றது. மற்றும்,

'रुद्रो वा एष यदग्निः'

'एषे ते रुद्र भागः' என்பது முதலாக பல்வகையாக சுருதி மிருதி புராண இதிகாசங்களுங் கூறுகின்றன.

இனி, 'அக்கினி' என்னுஞ் சொற்குப் பொருள் கூறுவாம் :—

தேவசேனும் அக்ரேநயதி, இதி அக்கினி, அதாவது தேவர்களின் சேனைகளை முன்னே கொண்டு செல்கின்றவன் அக்கினியாவன்.

அல்லது தேவாநாம் அக்ரே ஜாயத இதி அக்கினி, அதாவது தேவர்கட்கு முதலில் தோன்றியது அக்கினியாம்.

அல்லது, யக்ஞேஷு அக்ரம் பிரணீயதே இதி அக்கினி, அதாவது வேள்விகளுக்குள் முதலிலுள்ள குண்டங்களில் உண்டாக்கப்படுகின்றது அக்கினி.

அல்லது, ந க்நோபயதி காஷ்டம், ஸ்நிக்து, சுஷ்கயதி இதி அக்கினி, அதாவது விறகை எரிப்பது அக்கினி. இதனால், வேள்வியிற் சென்று, விறகை எரிப்பதும், அவியைச் சமைப்பதும் அக்கினி என்பது பெற்றாம்.

அல்லது, அங்கதி = ஊர்த்வம் கச்சதி, இதி அக்கினி, அதாவது மேலே கிளம்புவது அக்கினியாம்.

அல்லது, அங்கயந்தி = அர்க்யம் ஜென்மம் ப்ராபயந்தி இதி அக்கினி, அதாவது அவியை ஏற்றுக்கொண்டு குண்டங்களில் வளர்வது அக்கினியாம்.

அல்லது, அங்கனதி குணமுடையது அக்கினி, அதாவது ஒளிமுதலிய குணமுடையது அக்கினியாம்.

மற்றும், தேவர்கள், அக்கினியினிடத்தில் வைத்திருந்த தனத்தைக்கவர்ந்து கொண்டமையின், தேவர்கள், வலியால் அதைப் பெற்றுக்கொள்ளும்போது அக்கினி அழுதது என்பது வேதத்திலுள்ள கதை, ஈண்டு நினைவுறுத்தற்பாலது.

இவ் வக்கினி, தூமாக்கினி, தீபாக்கினி, மந்தாக்கினி, மத்திமாக்கினி, கராக்கினி, படாக்கினி என அறுவகைத்தாம்.

மற்றும், காருகபத்தியாக்கினி ஆகவனீயாக்கினி, தக்ஷிணாக்கினி, சப்யயாக்கினி (சபையக்கினி), அவசத்தியாக்கினி, ஔபாசனாக்கினி என இவ்வக்னி அறுவகைப்படும்.

அங்ஙனமே, வசு, ருத்திர, ஆதித்ய, விஸ்வ, தேவ, இந்திர, பிரசாபதி, பிரமா என இவ்வக்கினி எண்வகை பருவப் பெயர்களை யடைந்து எண்வகைப் படுகின்றது. பிரா-கா-2, பிர-1, அநு-10.

கிழக்கில் ஆகவனீயத்தீ, ஆக்கினேய மூலையில் விருத்தாக்கினி, தெற்கில் தட்சிணாக்கினி, நிருதி மூலையில் யௌவனாக்கினி, மேற்கில் காருகபத்தியாக்கினி, வாயுமூலையில் பாலாக்கினி, வடக்கில் கேவலாக்கினி, ஈசான்ய மூலையில் சாமான்யாக்கினி, நடுவில் சிவாக்கினி என ஒன்பது வகைப்படும் என்று கூறுகின்றது சிவாகமம்.

மற்றும் இவ்வாறே, 'बहुधावदन्त्यग्निं यमं' என இருக்குவேதமும், 'तदेवाग्निस्तद्वायुस्तत्सूर्यस्तदुचन्द्रमाः' என எசுர்வேதமும். 'आत्मा वा अग्निः' என, ச-பிராமணமும், 'अयं वा अग्निः प्रजाश्च प्रजापतिश्च' எனவும், 'अग्निर्वै देवानां व्रतपतिः' எனவும், ஏனைய சுருதிகளுங் கூறுகின்றன. மற்றும் வருவனவற்றுற் காண்க.

இவ்வாறு, உருத்திர சொல்லிற்கும் அக்கினி என்னுஞ் சொல்லிற்கும் பொதுவாக இருவகைப் பொருள்கள் வருவதை எடுத்துக் காட்டினும்; இனி எடுத்துக்கொண்ட ஆராய்ச்சியின் மேற் செல்வாம்.

ஈண்டு, உருத்திரன் என்னுஞ் சொல்லிற்குப் பொருள் பல்வகையா யிருத்தலின், இவ்வுருத்திராத்தியாயத்திற் கூறப்படுகின்றது உருத்திரனென்னும் மகாக்கினிசயனத்தி லெழுந்த அக்கினியா? அல்லது, அக்கினி என்னுஞ் சொல்லாற் குறிப்பிக்கப்பெற்ற பரமேசுரனு! அல்லது உலகிலுள்ள தீயா? என்பது முதலிய ஐயப்பாடுகள் நிகழ்தலின் இவ்வாராய்ச்சியும் பயனுடையதா மென்பது உற்று நோக்குவார்க்கு இனிது விளங்கும்.

இவற்றுள், உபநிடதங்களில் அக்கினியைப் பரமான்மாவாகவே கூறியிருத்தலின் மறைகளின் முடிகளான உபநிடத வாக்கியங்களைத்தழுவி பரமான்மாவே எனக் கொள்ளல் வேண்டும். உய்த்து நோக்கின் எல்லாம் ஞானத்திற்கு அங்கமாகவே முடிதலின் இவ்வாறு கொள்வதில் எவ்வாற்றானும் இழுக்கொன்றுமில்லை. பரமான்மாவின் ஏவலுக்குட்பட்ட அக்கினி தேவனைக் கொள்ளில், பசுபதி, உலக காரணம், சிவம் என்பதன் பொருள்கள் எவ்வாறு பொருத்த முடையவைகளாம்? என்பது சிலர்களுடைய கருத்தாகும். அக்கருத்திற்கும் யாம் மாறுபாடு கூறிலம். ஏனெனின்? எல்லா வுலகுமே பரமான்மா வடிவாயிருக்க அட்டமங்கள மூர்த்தங்களுள் ஒன்றாகிய அக்கினியை மாத்திரம் பரமான்மா வென்பது மிக எளிதாமன்றோ? ஆனால் அவர்கட்கு ஒன்று மாத்திரம் நினைப்பூட்ட விருப்புற்றாம். அஃதென்னையோ வெனின்! கருமாங்கமாகிய மகாக்கினி சயனத்தை மிக வருந்தி வலிந்து பரமான்மா என்று கொள்ளும்போது, கண்ணபிரான், 'பிரஹ்மார்ப்பணம் பிரஹ்மஹவிர் பிரஹ்மாக்னௌ பிரஹ்மணாஹுதம், பிரஹ்மைவ தேன கந்தவ்யம் பிரஹ்மகர்ம சமாதினா' என்று வேள்விக்கிரியை எல்லாவற்றையுமே பிரமமென்று திருவாய் மலர்ந்தருளியதை அவர்கள் மறந்தார்கள் போலும் என்பதாம்.

மற்றும், சிற்சில சொற்களுக்குக் கொள்ளும் பொருள்கள் அக்கினி தேவதைக்குப் பொருந்தா தென்னில், அக்கினி அழுதது, அக்கினிக்கு ஏழு நாக்கு இரண்டு தலை, ஆட்டுக்கடா ஊர்தி என்பது முதலான எண்ணிறந்த முரண்பாடுகளும் வரும் என்பதும் நியாயமன்றோ? அஃதாமாறு காட்டுதும், இந்த உருத்திராத்தியாயம் மகாக்கினி சயனத்தை மேற்கொண்டெழுந்த தென்பதை ஆங்காங்குக் காட்டுதும் ஆண்டுக் காண்க. மற்றும், வேதங்களனைத்தும், வேள்விகளனைத்தும், வேள்விகளை வழுவாது ஆசரித்து வந்த யாக்ஞவல்கியர் முதலான மகரிஷிகளனைவரும், அம் மரபு காரணமாய் வந்த அந்தணர் குலங்களனைத்தும் அக்கினியையே மேற்கொண்டவைகளா மென்பதை ஈண்டுச் சுருக்கிக் காட்டுவாம் :—

எல்லா வேதங்கட்கும் பழமையானதும் காரணமுமாகிய இருக்கு வேதமும், 'அக்னிமீளே புரோஹிதம்' என்னும் ஆக்னேய சூக்தத்தையே தொடக்கமாக மேற்கொண்டெழுந்தது.

எசுர் வேதமோ, யாண்டும், மூன்றக்கினிகளையே முதற் காரணங்களாகக் கொண்டுள்ள தென்பது மறுக்க முடியாததாம். துதியையே மேற் கொண்டெழுந்த சாமவேதமும், 'அக்ன ஆயாஹி வீதயே' என்று அக்கினி தேவனைத் துதித்துக் கொண்டே எழுந்தது.

அதர்வண வேதமும், 'யத்ரிஷப்தா: பரியந்தி விஸ்வாரூபாணி விப்ரத:' என்று தொடங்கியதா மெனினும், மூன்றுலகங்களின் அதிட்டான தேவதைகளுக்குள் அக்கினி தேவதையே முதலாவதாகக் கொண்டுள்ள தென்பது சாயண பாடியத்தை உற்று நோக்கில் தெற்றென விளங்கும்.

இதில் 'அக்னிர் தேவோ த்விஜாதீநாம்' என்னும் உண்மை வாக்கும் வெள்ளிடை மலையாம். இவ்வாறு மேற்காட்டிய பிரபல சுருதிகள், ஒருவாறாக உண்மைப் பொருளை மறைத்துக் கூறியுள்ளன எனினும், நேரே, மகாக்கினி சயனப் பிரகரணத்திற்கியைந்த பொருளை விரிக்கும் சத ருத்திரீயப் பிராமண மென்னும், சங்-கா-5, பிர-4, அநுவாகம் 3-வது கூறும் பொருள்களுள் சிலவற்றைத் தெரிப்பாம், அது 'रुद्रोऽग्नि एष यदग्निः स एतर्हि जातो' என்று தொடங்கி, 'भागधेयेनैवेनꣳ शमयति नाऽर्तिमार्छत्यध्वर्युर्नयजमानः' என்று முடித்துள்ள மந்திரங்களால் கூறப்பட்டிருக்கின்றது; அதாவது :—

நான்காங் காண்டத்திற் கூறிய முறைப்படியே மகாக்கினி சிதிகளைத் தும் முடிந்தவுடன், சயனவடிவாய் எவ்வக்கினி தோன்றுகின்றதோ, அவ்வக்கினியே உருத்திரன் எனப்படுகின்றது. இவ்வக்கினி பெருங் கோபத்தோற்றமுடையதாமென்க. இவ்வாறு உருத்திராகாரமா யெழுந்த இவ்வக்கினியானது, குழந்தை பிறந்தவுடன் முலைப்பாலை விரும்புவதுபோன்று தன்னுடைய அவிர்ப்பாகத்தையடைய விரும்புகின்றது. அப்போது, ஒரு ஆகுதியுஞ் செய்யாது விடினோ, வேட்போனையும் வேள்வித்தலைவனையுமே தான் அருந்துவதற்கு என்கின்றது. அதாவது, வேட்போனும் வேள்வித்தலைவனும் இறந்து விடுவார்கள் என்பதாம். அதை நீக்கிக் கொள்வதற்கு, சதருத்திரீய ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பது விதி. இவ்வாறு ஹோமஞ் செய்து அவிர்ப்பாகத்தையளித்தலால் அதை அக்கினி ஏற்றுக் களிப்புற்று தனது கோபந் தணியவே வேட்போனும் வேள்வித்தலைவனும் அதனால் இறக்கமாட்டார்கள் என்பதாம்.

இவ்வுரை நான்கு வேதங்கட்கும் முற்றும் பாடிய மியற்றிய சாயணபாடியத்திற் கண்டது.

சதருத்திரீய ஹோமத்தை விநியோகிக்க வந்த ஆபஸ்தம்பரும்,

शतरुद्रीयं जुहोति जर्तिलयवाग्वा" என்றற்றொடக்கத்து கல்பச் சூத்திரத்தாலும் இம்முறையாகச் செய்யும் ஹோமத்தையே நன்கு எடுத்து விநியோகித்துள்ளார்.

மற்றும், பிரா-கா-3, பிர-11, அநு-2 ல், ' த்வமக்னே ருத்ர: ' என்றற் றொடக்கத்து வேதமாகிய, சதருத்திரீயம் போன்ற உருத்திர மந்திரங்களும் உருத்திராக்கினியையே கூறுகின்றது. இனி, தமிழ் நூல்களுள் ' உருத்திர னென்னு நாமம்—செந்தீப் பண்ணவன் றனக்குமாமால் ' என்று கூறியுள்ளது கந்தப்புராணமும்.

மற்றும், சதருத்திரீயத்தை எடுத்துப் புகழவந்த உபநிடத முதலான நூல்களும் ' சதருத்திரீயம் ஜுஹோதி ' என்று இந்த ஹோமத்தையே குறிப்பிட்டுக் காட்டுகின்றன. இவ்வாற்றால் சதருத்திரீய ஹோமம் உருத்தி ராக்கினியை மேற்கொண்டதா மென்பதைக் காண்க.

அற்றேலஃதாகுக,

' एषतेरुद्रभाग: ' என்றற் றொடக்கத்து மந்திரத்திற் குறித்த உருத்திர னென்னும் திரியம்பகேசுரனுக்குச் செய்யும் இஷ்டிக்கு யாது கதியாமெனின் ? ஆண்டு, அத்தகைய பிரகரணம்பற்றி திரியம்பகேஷ்டியா மென்பதில்யாமும் மாறு கூறிலம் என்பதை யுணர்க.

அற்றேல், எமது கருத்தே கைகூடிற்று எனின்ஞெ ? அற்றன்று, உமது கருத்துக் கைகூடவில்லை; மற்றோ, எமது கருத்தே வலியுறுத்தப் பெற் றது என்க. என்னை ? உபநிடத்ததை முன்னிட்டுப் பிரமஞானத்திற்கு அங் கங்களைக் கூறும்போது பிரம பரமாய்க் கொள்ளுக. ஆமகங்களை முன்னிட்டுச் சிவஞானத்தைக் கூறும்போது சிவபரமாய்க் கொள்ளுக. யோகத்தை முன் னிட்டு மூலாக்கினி பரமாய்க் கொள்ளுக. மற்றும் பல பிரகரணங்களை முன் னிட்டு ஆண்டாண்டு அதற்கு அதற்கு இயைய மற்றும் பல்வேறு வகை யாய்க் கொள்ளுக இதில் இழுக்கொன்றுமில்லை. இதுவே பெருநெறியாம் யாவ ராலும் போற்றத்தக்கதுமாம். இத்தகைய நன்னெறியை விட்டு, புதியதோர் ஞானநெறியைக் கொண்டு வைதிக கருமங்களை ஒருங்கே புறங் கூறித் தள்ளி விட்டு, வாய் ஞானம் பேசிக்கொண்டு வைதிக கருமப்பிர கரணங்களை மேற் கொண்டுள்ள வழி பாட்டு நெறியையுங் கைக்கொள்ளாது எல்லாம் பிரமமெனல் முற்றும் முரணு மென்பதை யுணர்க. இதை, பட்டபாஸ்கரர், மகீதார், உவட்டர் முதலானோர்களின் பாடியத்திற்காண்க. மேலே வரும் இவ்வைந்தாம் பிரபாடக விடயச் சுருக்கத்திற் கூறிய சாயணபாடியத்தானும் இது இனிது உணர்ந்து கொள்ளக்கிடக்கின்றது.

## உருத்திராக்கினி வடிவம்

கோடி யோசனை தூரமாகிய காலாக்கினி உருத்திர புவனத்தில், ஆயிரம் யோசனை உயரமும், இரண்டாயிரம் யோசனை அகலமும் உடைய சிம்மாசனத் தின் மீது, பதினுயிரம் யோசனையுடைய செந்தழல்த் திருமேனி யுடையராய் வலது கரத்தில், வாளும், அம்பும், இடது கரத்தில் கேடகம் வில்லும் உடை

யராய் உருத்திராக்கினி தேவர் எழுந்தருளி யிருப்பர். இவருடைய சுடர்க்கொழுந்து, உருத்திர புவனத்திற்கு மேல் பத்துக்கோடி யோசனை தூரமாம். அதன் புகைப் படலமோ, அதற்கு மேல் ஐந்துகோடி யோசனை தூரமுடையதாம் என்று ஆகமங்கள் கூறுவதையு முணர்க.

இவ்வாற்றால், புண்ணிய மிகுதியாலும், நற்கருமச் செயலாலும், பரசிவனுடைய வழிபாட்டாலும், நன்கு மனந்தூயராஞேர் அக்கினி முதலியவைகளைப் பரமான்மாவாகப் பாவித்து உண்மை யுணர்வு வாயிலாய் முத்தியடைகின்ற அவர்களுக்கும் முடிவுவரை ஈசுர வழிபாடு வேண்டற்பாலதாம். இன்றெனில் செய் நன்றி கொன்றவராவர். முறையாய் நலம்பெற விரும்பும் உண்மை யொழுக்கமுடையார் சதருத்திரீய ஹோமத்தால் உருத்திரனுக்கு வழிபாடுசெய்து அவனுடைய அருளைப்பெற்று நலம் பெற்றுய்வாராக.

சதருத்திரீய மான்மியம்.

நான்கு மறைகட்குள்ளும் எசுர் வேதமே சிறந்த தென்பது முன்னர்க் காட்டினும். அத்தகைய எசுர் வேதத்தில், உருத்திராத்யாய மென்னும் சதருத்திரீயமே எல்லாவற்றுள்ளும் மிகச் சிறந்ததென்பதை, சுருதி மிருதி புராண இதிகாசங்களெல்லாம் இனிது எடுத்துக் காட்டுகின்றன. அவற்றுட் சிலது இங்கு எடுத்துக் காட்டுவாம் :—

கைவல்ய உபநிடதம்,

'किं जप्येनामृतत्वं ब्रूहीति' सहोवाच याज्ञवल्क्यः, 'शतरुद्रीयेण' इति.

எதைச் செபித்தால் முத்தியாம் யாக்ஞவல்கியர் கூறுவாயாக? சதருத்திரியத்தால் முத்தியாம் என்பது. மற்றும்,

'यश्शतरुद्रीयमधीते सोऽग्निपूतो भवति'

எவன் சதருத்திரியத்தை ஓதுகின்றனே அவன் அக்கினி புநிதனுகின்றான், எனவுங் கூறுகின்றது.

மற்றும், 'रुद्रानावृत्य धर्मवित्' என்பது முதலியதால் எல்லாவற்றிற்கும் இதுவே பிராயச்சித்தமுமாகுமென்று அத்திரி ரிஷியுங் கூறுகின்றார்.

அஃதன்றியும், 'यद्यदिच्छन् जपेत्तत्तदाप्नोतिहि न संशयः' என்பதால், எல்லாப் பயன்களையும் இதுவே அளிக்குமென்றுங் கூறுகின்றது உண்மை வாக்கியம்.

அங்ஙனமே,

श्रीरुद्ररुद्रेति यस्तं ब्रूयाद्विचक्षणः ।
कीर्तनात् सर्वदेवस्य सर्वपापैः प्रमुच्यते ॥

என்று கூறுகின்றது உருத்திர இருதய வுபநிடதமும். மற்றும், இவ்வாறே

சாபாலம், உருத்திர வுபநிடதம் முதலான எல்லா நூல்களுங் கூறுமாற்றுனும் உணர்க.

இனி நண்ணு சீருத்திரத்தை, என்றற்றொடக்கத்திய சேதுப்புராணமும் இப்பொருளையே யுணர்த்துகின்றது.

மற்றும், அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய, தலையூரில் அவதரித்த உருத்திர பசுபதி நாயனாரும் இவ்வுருத்திரத்தையே இடையறாது ஓதி இறைவன் திருவடி நீழலை யடைந்தாரென்று நமது பெரிய புராணமுங் கூறுகின்றது,

அச்சரித்திரத்தின் சாரம் வருமாறு :—செய்யுள்,

பங்கமில் வண் புகழ் நிலவு தலையூர் வாழும்
பசுபதியார் எனும் மறையோர் பணிந்து செங்தேன்
அங்கமல மடுவினிடை அல்லும் எல்லும்
அகலாதே யாகளமாய் அமர்ந்து நின்று
திங்கள் வளர் சடைமுடியான் அடியே போற்றித்
திருவெழுத்தும் உருத்திரமுந் திருந்த ஓதி
மங்கை இடம் உடையபிரான் அருளால் மேலை
வானவர்கள் தொழும் உலகில் மன்னினரே. என்பது.

'जुहोत्यन्ततो रौद्रं निरवदयेत' என்னும் பிராமண மந்திரமும். சதருத்திரீய ஹோமத்தால் உருத்திரனுடைய கோரத் தன்மை தணிந்து விடுகிறது என்று கூறுவதுடன் ' ताभिरेनं सुवर्गं लोकं गमयति ' சுவர்க்கமும் அடையப்படுகின்றது என்றுங் கூறுகின்றது.

சதருத்திரீய மான்மியம் முடிந்தது.

# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## நான்காங் காண்டத்தில் ஐந்தாவது பிரபாடக

## உபோற்காதம்.

---

### சாயணபாடியம்.

इष्टका चितयः सर्वाश्चतुर्थैर्हि समापिताः ।
रुद्राध्याये पञ्चमेतु चित्यग्नौ होम उच्यते ॥ १ ॥
कर्मप्रकरणे पाठात्कर्माङ्गत्वमपीष्यते ।
ज्ञानहेतुत्वमप्यस्य सर्वोपनिषदीरितम् ॥ २ ॥
किं जप्येनामृतत्वं नो ब्रूहीत्युक्तो मुनिर्जगौ ।
शतरुद्रीयकेणेति जाबाला आमनन्ति हि ॥ ३ ॥
स्मृत्यागमपुराणेषु रुद्राध्याय प्रशंसनम् ।
बह्वस्ति तद्विस्तरेण रुद्रकल्पेऽभिधास्यते ॥ ४ ॥
इह कर्माङ्गता यादृग्वर्णिता ब्राह्मणेनताम् ।
बोद्धुं शब्दार्थमात्रस्य विवृतिः क्रियतेस्फुटा ॥ ५ ॥

### சாயணபாடியக் கருத்து.

மகாக்கினிசயனமாகிய செங்கல் அடுக்குக்கள் அனைத்தும் நான்காம் பிரபாடகத்தில் முடிவு பெற்றன. ஐந்தாம் பிரபாடகமாகிய இந்த உருத்திராத்யாயத்தில் செங்கலடுக்காகிய அக்கினியில் சதருத்ரீய ஹோமங் கூறப்படுகின்றது. இது, வேள்வியின் கருமப் பிரகரணத்திற் கூறப்பெற்றிருத்தலின் கருமத்திற்கு அங்கமாம். ஞானத்திற்குங் காரணமாதலின், உபநிடதங்கள் ஞானத்திற்கு அங்கமென்றுங் கூறுகின்றன.

அஃதெங்ஙனமெனின்? 'எதைச் செபித்தால் முத்தி யடையலாம்? சதருத்திரீயத்தைச் செபித்தலால் முத்தி யடையலாம்' என்று, சாபால வுபநிடதங் கூறுகின்றது. மற்றும், சுருதி, மிருதி, ஆகம புராணங்களில் இந்த உருத்திராத்யாயம் புகழ்ந்து கூறப்பட்டிருக்கின்றது. அவையெல்லாம் உருத்திர கல்பம் என்னும் நூலிற் கூறினும். இங்கு, சதருத்திரீயப் பிராமணம் என்னுஞ் சுருதி, இது கருமத்திற்கு அங்கமென்று கூறியிருத்தலின் அதைத் தழுவி கருமத்திற்கு அங்கமாந் தன்மையை உணருவதற்கு வேண்டியவற்றை மாத்திரம் இங்கு விளக்கிக் கூறுவாம் என்பது.

சுக்ல எசுர் உவட்டர் பாடியம்

'शतरुद्रीय होमः, अथातो यः शतरुद्रीयं जुहोति' என்று தொடங்கி, 'सएषोऽत्राग्निश्चितो बुभुक्षमाणो रुद्ररूपेणावतिष्ठते' அதாவது, 'எவன் சதருத்திரியத்தால் ஹோமஞ் செய்கின்றானோ, என்று தொடங்கி, அவன், இந்த மகாக்கினிசயனத்தை அறிய விருப்புடையனாய் உருத்திர வடிவாகப் போற்றுகின்றான்' என்பது.

மகீதர பாடியம்

பதினைந்தாம் அத்தியாயத்தில் மகாக்கினிசயன மந்திரங்களை முடித்துக் கொண்டு பதினாறும் அத்தியாயத்தில் சதருத்திரீய ஹோம மந்திரங்கள் கூறப்படுகின்றன என்பது.

மற்றும் 'சதருத்திரீயம் சுஹோதி' என்பது முதலிய ஆபத்தம்ப சூத்திரத்தையுங் காண்க.

ஈண்டு, மேற்காட்டிய பிரமாணங்களால், சதருத்திரீயம் என்பது கருமத்திற்கு அங்கமன்று; மற்றோ, கேவலம் ஞானத்திற்கே அங்கமாம் என்பது பொருந்தாதெனல் கொள்ளக் கிடந்தமை காண்க. மற்றும், அவ்வாறு கொள்ளினும் உருத்திர பரமேசுரனுடைய வழிபாடே இதன் பயனா மென்பதும் உய்த்துணரற்பாலது. இதை, 'आवोवैराजा' என்று தொடங்கி, 'वैषारौद्री नाम संहिता तैतां प्रयुञ्जन् रुद्रं प्रीणाति' என்று முடிக்கும் சாமவேதப் பிராமணத்திற்கு உரை கூறப்புகுந்து 'இவ்வுருத்திர சங்கிதையை ஓதுவதால் உருத்திரனுடைய அன்பை யுண்டாக்குக' என்னுமிடத்து, சாமவேத உருத்திரியின் உபோற்காதத்திற் கூறினும் ஆண்டுக் காண்க.

அவதாரிகை.

பதினொரு அநுவாகங்களையுடைய இந்தச் சதருத்திரீய மந்திரங்கள், 1234 பதங்களைக் கொண்டது. அவற்றுள் முதல் மூன்று ஹோமங்களுக்குரிய மந்திரங்கள் ஆயிரத்து நூற்றுத் தொண்ணூற்று நான்கு பதங்களைக் கொண்டவைகள். அவைகளாற் செய்யப்படுவன மூன்று ஹோமங்களாம் ஆதலின், முன்னூற்றுத் தொண்ணூற்றெட்டுப் பதங்களாக, மூன்றாய்ப் பகுத்துக் கொண்டு, கருடசயனத்தில், முழந்தாள், நாபி, தலை என்னுமிடங்களில் பாலின் தாரையைப் பிடித்துக்கொண்டு அம் மூன்று ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

முதல் ஹோமம்

இங்கு வேட்போன், 'अग्निरसि वैश्वानरोसि' என்பது முதலிய அருண மந்திரத்தால், முதலில், மகாக்கினி சயனத்தைத் தொடுதல் வேண்டும்.

வேட்போனுடைய இடமென்னும், ஐந்தாவது செங்கலடுக்கிற்கு அருகில் வடக்கு முகமாய் நின்றுகொண்டு, ஒரு மூங்கிற் கழியின் நுனியில் ஒரு எருக்கம் இலையை, சுருவைப்போல் வளைத்துக் கட்டிக்கொண்டு, அம் மூங்

ஹோமம்)

கிற் கொம்பின் அடியை வேட்போன் தனது முழந்தாளுக்குச் சரியாய் இருக்கும்படி வலக் கையாற் பிடித்துக்கொண்டு நிற்றல் வேண்டும்; அப்போது, மற்றொருவன், அந்த எருக்கம் இலை வழியாய்ச் சென்று, வடபக்கச் சிறகின் முதலாவது நுனிச் செங்கலின் மீது விழும்படி வெள்ளாட்டுப் பாலை இடைவிடாது வார்த்துக் கொண்டிருத்தல் வேண்டும். அப்போது வேட்போன், மேல் வரும் முந்நூற்றுத் தொண்ணூற்றெட்டுப் பதங்களால் ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும்; அவற்றுள், இருநூற்று இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது இம் முதலநுவாகமாகும்.

---

விடயச் சுருக்கம்

प्रश्नेतु पञ्चमे प्रोक्तः शतरुद्रीय होमकः ।
सभापतिभ्य इत्यन्त एकोमन्त्रः प्रकीर्तितः ॥ १ ॥
अवार्यायेत्यन्त एकस्तन्मसीत्यन्त उत्तरः ।
नमो रुद्रेभ्य इत्येष पृथिव्यादिविभेदतः ॥ २ ॥
त्रिधा भिन्नस्ततो होमे षण्मन्त्रा इह कीर्तिताः ।

இவ் வைந்தாம் பிரபாடகத்தில் சதருத்திரீய ஹோமஞ் சொல்லப்படுகிறது. அதில், 'சபாபதிப்ய:' என்னும் வரை ஒரு மந்திரமாம். அதிலிருந்து 'அவார்யாய' என்னும் வரை ஒரு மந்திரமாம். அதிலிருந்து 'தந்மஸீ' என்னும் வரை ஒரு மந்திரமாம். 'நம: ருத்ரேப்ய:' என்பது முதலிய மூவுலக மந்திரங்களாலும் மூன்று உத்தர ஹோமஞ் செய்யப்படுகின்றன. இவ்வாறு ஆறு ஹோமங்கட்குரிய ஆறு மந்திரங்கள் இந்த உருத்திராத்தியாயத்திற் கூறப்படுகின்றன என்பது.

இவற்றுள் முதல் மூன்று ஹோமங்களுக்கும் ஒவ்வொரு ஹோமஞ் செய்து மகாக்கினிசயனத்தை வலம் வந்து இரண்டாவது ஹோமத்தைத் தொடங்கல் வேண்டும். இவ்வாறே மேலுஞ் செய்ய வேண்டும் என்பதையுமுணர்க.

---

## நான்காங் காண்டத்தில் ஐந்தாவது பிரபாடகம்

## முதல் அநுவாகம்.

இது; நான்கு பஞ்சாதிகட்குமேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

---

உருத்திர மகாக்கினி சயனமாகிய அக்கினியில் ஹோமஞ் செய்தற்குரிய மந்திரங்கள்.

नम॑स्ते रुद्रमन्यव॑ उ॒तोत॒ इष॑वे॒नमः॑ । नम॑स्ते अस्तु॒ धन्व॑ने
बा॒हुभ्या॑मु॒तते॒नमः॑ । यात॒ इषुः॒शिव॑तमा शि॒वं ब॑भूव॑ते॒ धनुः॑ ।

शिवाशर व्यायातवतयानो रुद्रमृडय । याते रुद्रशिवातनूरघोराऽपा-
पकाशिनी । तयानस्तनुवाशन्तमया गिरिशन्ताभिचाकशीहि ।
यामिषुङ्गिरिशन्तहस्ते ॥ १ ॥ बिभर्ष्यस्तवे । शिवाङ्गिरित्रतां कुरु
माहिꣳसीः पुरुषञ्जगत् । शिवेन वचसात्वा गिरिशाच्छावदामसि ।
यथानस्सर्वमिज्जगदयक्ष्मꣳसुमना असत् । अध्यवोच दधिवक्ता
प्रथमो दैव्यो भिषक् । अहीꣳश्च सर्वाञ्जम्भयन्त्सर्वाश्चयातुधान्यः ।
असौ यस्ताम्रो अरुण उत बभ्रुस्सुमङ्गलः । येचे माꣳरुद्रा अभितो
दिक्षु ॥ २ ॥ श्रितास्सहस्रशोऽऽवैषाꣳ हेड ईमहे । असौ योऽव-
सर्पति नीलग्रीवो विलोहितः । उतैनङ्गोपा अदृशन्नदृशन्नुदहार्यः ।
उतैनं विश्वाभूतानि सदृष्टो मृडयातिनः । नमो अस्तु नीलग्रीवाय
सहस्राक्षाय मीढुषे । अथोये अस्य सत्वानोऽहन्तेभ्योऽकरन्नमः ।
प्रमुञ्च धन्वनस्त्वमुभयोरार्त्नियोर्ज्याम् । याश्चते हस्त इषवः ॥३॥
पराता भगवोवप । अवतत्य धनुस्त्वꣳ सहस्राक्ष शतेषुधे । निशी-
र्यशल्यानां मुखा शिवोनस्सुमना भव । विज्यन्धनुः कपर्दिनो
विशल्यो बाणवाꣳउत । अनेशन्नस्येषव आभुरस्य निषङ्गथिः ।
याते हेतिर्मीढुष्टमहस्ते बभूवते धनुः । तयाऽस्मान् विश्वतस्त्वम-
यक्ष्मया परिब्भुज । नमस्ते अस्त्वायुधायानाततायधृष्णवे ।
उभाभ्यामुतते नमो बाहुभ्यान्तवधन्वने । परिते धन्वनो हेति-
रस्मान्वृणक्तु विश्वतः । अथोय इषुधिस्तवारे अस्मन्निधेहितम् ॥

———

ஹோமம்)

## முதலாவது ஹோமத் தொடக்கம்.

### முதல் இருக்கு.

அருட்கோபத் திருமேனியைக் கூறல்

*ஆத்ரேயரிஷி, அநுஷ்டுப்ச் சந்தம், உருத்திர தேவதை, அருள் வேண்டல்.*

नमस्ते रुद्रमन्यवं उतोत इषवे नमः ।
नमस्ते अस्तु धन्वने बाहुभ्यामुतते नमः ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| हे रुद्र ! | பெருங் கோபத் தோற்றமுடைய உருத்திர ! |
| ते | உனது |
| मन्यवे | கோபத்திற்கு |
| नमः अस्तु | (எனது) வணக்கம் ஆகுக. |
| उत | மற்றும் |
| ते | உனது |
| इषवे | பாணத்திற்கும் |
| नमः (अस्तु) | (எனது) வணக்கம் ஆகுக. |
| ते | உனது |
| धन्वने | வில்லிற்கும் |
| नमः (अस्तु) | (எனது) வணக்கம் ஆகுக. |
| उत | மற்றும் |
| ते | உனது |
| बाहुभ्यां | வில்லேந்திய இரண்டு கைகட்கும் |
| नमः (अस्तु) | (எனது) வணக்கம் ஆகுக. |

**சாயணபாடியக் கருத்து.**

உருத்திர ! உன்னை வணங்குகின்றேன்; நீ என் மீதெழுந்த முனிவையும், அதனால் என்மீது விடுவதற் கெடுத்த அம்பையும் என்பாற் செலுத்தாமல் எனது பகைவனிடத்திற் செலுத்தி யருள்வாயாக என்பதாம். ஈண்டு, வில், இமயமலை, அம்பு விஷ்ணு என்பர் பௌராணிகர். ஓங்காரம் வில்லென்பர் உபநிடத நூலார். எல்லாவகையாலும் சங்காரகர்த்தாவின் உருவங் கூறப்பட்

டது என்பதையுணர்க. சங்காரத்திற்கு முதலாவது நிமித்தம் கோபமாதலின் அது முன்னர் கூறப்பட்டதென்க. கோபத்தாலெழுந்த நிக்கிரகச் செயலுக்கு முதலாம் நிமித்தம் வில்லாமாதலின் அதன்பின் அது கூறப்பட்டது என்பதாம்.

---

### இரண்டாம் இருக்கு.

ஆயுதந்தாங்கிய சாந்தத்திருமேனியைக் கூறல்.

ஆத்ரேயரிஷி, அநுஷ்டுப்ச் சந்தம், சம்பு தேவதை, சுகத்தை வேண்டுதல்.

याते इषुः शिवतमा शिवं बभूवते धनुः ।

शिवा शरव्या यातव तया नो रुद्र मृडय ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| (हे रुद्र !) | (உருத்திர பரமேசுவர !) |
| ते | உன்னுடைய |
| या इषुः | எந்த அம்பு |
| शिवतमा | மிகச் சாந்தமாக |
| बभूव | ஆயிற்றோ, |
| तया | அதனால் |
| नः | எம்மைச் |
| मृडय | சுகப்படுத்துவாயாக. |
| धनुः | எந்த வில் |
| शिवं बभूव | சாந்தமாயிற்றோ, |
| (तया नः मृडय) | (அதனாலும் எம்மைச் சுகப்படுத்துவாயாக.) |
| या शरव्या | யாதொரு சரக்கூடு |
| शिवा बभूव | சாந்தமாயிற்றோ, |
| (तया) | (அதனாலும்) |
| (नः मृडय) | (எம்மைச் சுகப்படுத்துவாயாக.) |

சாயணபாடியக் கருத்து.

உருத்திர! நீ அன்பர்களிடத்திற் செலுத்தப்படாமையால் பொறுமை வாய்ந்துள்ள, வில், அம்பு, அம்பறாத்தூணிகளால் எமக்குச் சுகத்தைச் செய்தருள்வாயாக என்பதாம்.

ஹோமம்)

ஈண்டு உருத்திரனுடைய வில் ஏனையோருடைய வில்லைப்போன்று கைக்கழகு மாத்திரந் தருவதன்று, மற்றே, அன்பர்கட்கு நலஞ் செய்வதுமாம் என்பது குறிப்பு.

---

## மூன்றும் இருக்கு.

### ஆயுதமின்றிய சாந்தத் திருமேனியைக் கூறல்.

சுவராட் ரிஷி, திரிவிருத் அநுஷ்டுப் சந்தம், சம்பு தேவதை, சுகந்தரும் முறையைக் காட்டி வேண்டல்.

या ते रुद्र शिवा तनूरघोराऽपापकाशिनी ।
तया नस्तनुवा शन्तमया गिरिशन्ताऽभि चाकशीहि ॥ ३ ॥

### பதவுரை.

| | |
|---|---|
| हे गिरिशन्त ! | கைலையங்கிரியிலமர்ந்து சுகத்தை யளித்தருளுகின்ற |
| हे रुद्र ! | உருத்திரனே ! |
| ते | உன்னுடைய |
| अघोरा | துன்புறுத்தாததும் |
| अपापकाशिनी | பாவத்தை விளக்காததுமாகிய |
| या शिवातनूः | யாதொரு அருட்டிருமேனியுண்டோ, |
| तया शन्तमयातनुवा | அத்தகைய பேரின்பத்தருந் திருமேனியால் |
| नः | எம்மை |
| अभिचाकशीहि | நன்கு விளக்கி யருள்வாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

உருத்திர ! உனக்கு, நிக்கிரக அநுக்கிரகத் திருமேனிகள் என்று இரண்டு திருமேனிகள் உள்ளனவன்றே, அவற்றுள், உனது அருட் டிருமேனியை எமக்குக் காட்டியருளி எம்மைச் சுகப்படுத்துவாயாக. அவ்விரண்டு திருமேனிகளும் மேலே அடுத்துக் கூறப்படுவனவாம்.

ஈண்டு, துன்புறுத்தாததும், பாவத்தை விளக்காததும் என்னும் விசேடணங்களால் புண்ணிய பயனையே கொடுப்பது என்பது உணர்த்தப்பட்டது. 'கிரிசந்த' என்பதற்கு, மேகத்திலிருந்து மழை பெய்விக்கின்றவாயிலாக இன்பளிப்பவன், அல்லது வேதத்திலிருந்து அர்த்த வடிவாய்ச்

சுகமளிப்பவன், அல்லது ஓங்காரத்திலிருந்து தியான வாயிலாய்ச் சுகமளிப்ப வன் எனவும், 'அபிசாகசீஹி' என்பதற்கு, எம்மை நோக்கி யருள்வாயாக எனவும் பொருள் கொள்ளினும் அமையும்,



### நான்காம் இருக்கு.

திரிபுர சம்மாரத் திருமேனியைப் போற்றல்.

இம் மந்திரத்திற்கும், ஐந்தாவது மந்திரத்திற்கும் கௌதமர் ரிஷி, காயத்ரிச் சந்தம், உருத்திரன் தேவதை, தன்னைச் சேர்ந்தவர்களுக்குஞ் சுகத்தை வேண்டல்.

यामिषुं गिरिशन्त हस्ते बिभर्ष्यस्तवे ।
शिवां गिरित्र तां कुरु मा हिꣳसीः पुरुषं जगत् ॥ ४ ॥

### பதவுரை.

| | |
|---|---|
| हे गिरशन्त ! | கைலையங்கிரியி லிருந்துகொண்டு இன்பருள்வோய் ! |
| गिरत्र ! | திருக்கைலையைப் பரிபாலித்தருள்வோய் ! |
| अस्तवे | பகைவன் மீது விடுத்தருள |
| यां इषुं | எந்தப் பாணத்தை |
| हस्ते | திருக்கரத்தில் |
| बिभर्षि | தாங்குகின்றனையோ, |
| तां | அந்தப் பாணத்தை |
| शिवां कुरु | எம்மிடத்துத் தணியும்படி செய்தருள் செய்வாயாக. |
| पुरुषं | மற்று, மக்கள் முதலானோரையும் |
| जगत् | பசுக்கள் முதலானவைகளையும் |
| मा हिंसीः | துன்புறுத்தாதருள்வாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

உருத்திர ! நீ, கைலையிங்கிரியில் எழுந்தருளி இன்பப் பெருக்கை அளித்தருள்வோனாதலின், கோபத்தாலேற்ற பாணத்தை என்மீது விடாது அருள் செய்வாயாக. அதாவது, எனது புதல்வன் முதலிய சுற்றத்தையும், எமது பசு மாடு முதலானவைகளையுந் துன்புறுத்தாதே என்பதாம்.

ஹோமம்)

ஈண்டுத் தேவர்களின் முறையீட்டின் பின் எடுத்த வில்லை, திரிபுரத்தை எரிப்பதற்கு மாத்திரம் விடுத்தருள்வாயாக; அன்பர்களிடத்தும், மற்றும் ஏனைய உயிர்களிடத்தும் அதை விடுக்காதருள்வாயாக என்பது குறிப்பு.

---

ஐந்தாவது இருக்கு மந்திரம்.

இதுவுமது.

சந்தம் முதலானவைகள் முன் மந்திரங்கட்குக் கூறியவைகளே.

शिवेन वचसात्वा गिरिशाच्छा वदामसि ।

यथानस्सर्वमिज्जगदयक्ष्मं सुमना असत् ॥ ५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| हे गिरिश ! | கைலையங்கிரியில் வாழ்வோய் ! |
| त्वा | உன்னை |
| अच्छ | அடைவதற்கு |
| शिवेन वचसा | மங்களமாகிய துதியால் |
| वदामसि | வேண்டுகின்றோம். (வேண்டுகோள் யாதெனின் ? |
| नः | எமது |
| सर्वं जगत् इत् | மக்கள், பசு முதலிய சங்கமப் பொருள்களனைத்தையுமே |
| यथा | எவ்வாற்றானும் |
| अयक्ष्मं | பிணிகளற்றவைகளும் |
| सुमनाः | நல்ல மனமுடையவைகளும் |
| असत् (तथा) | ஆகும்படி செய்தருள்வாயாக என்பது. |

சாயணபாடியக் கருத்து.

கைலையங்கிரியில் வாழும் உருத்திர! உன்னை யடைவதன் பொருட்டு இனிய துதியால் யாம் போற்றுகின்றோம். எமது, புதல்வன் முதலான மக்களையும், பசுமாடு முதலானவைகளையும் நோயில்லாதிருக்கும்படி அருள் செய்வாயாக என்பதாம். எவ்வாறு துதித்தலால் இந்நலங்கள் உளவாமோ, அவ்வாறே உன்னைத் துதிக்கின்றோம் எனினுமாம்.

### ஆறுவது இருக்கு மந்திரம்.

கண்ணுவரிஷி, அநுஷ்டுப் சந்தம், சம்பு தேவதை, விடம் முதலிய பீடைகள் விலகும்படி வேண்டல்.

अध्यवोच दधिवक्ता प्रथमो दैव्यो भिषक् ।
अहीꣳश्च सर्वान् जम्भयन्त्सर्वाश्च यातुधान्यः ॥ ६ ॥

### பதவுரை.

| | |
|---|---|
| प्रथमः | தேவர்களுக்குத் தலைவனும் |
| दैव्यः | தேவர்களைப் பரிபாலிக்கத் தக்கவனும் |
| भिषक् | நினைத்தன் மாத்திரத்தால் எல்லாப் பிணிகளையும் போக்கி யருள்கின்றவனும் |
| अधिवक्ता | எம்மைப் பெருமைப்படுத்திப் பேசுகின்றவனுமாகிய உருத்திர பரமேசுரன் |
| अहीꣳश्च सर्वान् | பாம்பு முதலிய கொடிய பிராணிகளனைத்தையும் |
| सर्वाश्च यातुधान्यः | அசுரர்கள் அனைவரையும் (அசுரகுலத்தையே) |
| जम्भयन् | கொன்றுவிட்டு |
| अध्यवोचत् | எம்மைப் பெருமைப்படுத்திக் கூறியருள்வானாக. |

### சாயணபாடியக் கருத்து.

உருத்திரன், எமக்கு இடையூறு விளைவிக்கின்ற பாம்பு புலி முதலிய கொடிய பிராணிகளையும், அசுரர்களையுங் கொன்றுவிட்டு, எங்கும் எம்மைச் சிறப்பித்துக் கூறி எல்லாருக்குள்ளும் எம்மைச் சிறந்தவனாகச் செய்தருள்வானாக என்பதாம்.

ஈண்டு, 'அதிவக்தா' என்பதற்கு, பட்சபாதமாய்ப் பேசுகின்றவன், அதாவது 'உங்கட்கு இடையூறு செய்கின்றவைகளைக் கொன்று உங்கட்கு அபயமளிக்கின்றேன்' என்னுஞ் சொல்லையுடையவன் என்பது குறிப்புப் பொருள்.

---

### ஏழாவது இருக்கு மந்திரம்.

மருத்வான் ரிஷி, ஆஸ்தாரபங்திச் சந்தம், இரவி வடிவ உருத்திரன் தேவதை. உருத்திரனைச் சூரியனாகப் போற்றுதல்.

असौ यस्ताम्रो अरुण उत बभ्रुः सुमङ्गलः ।
येचे ꣳ रुद्रा अभितो दिक्षु श्रितास्सहस्रशोऽवैषाꣳ हेड ईमहे ॥ ७ ॥

பதவுரை.

| | |
|---|---|
| य: असौ | எவ்வுருத்திரன் இந்த இரவி மண்டலமாக இருக்கின்றானோ, |
| ताम्र: | அவன், எழும்போது மிகச்சிவந்த நிறமாயிருக்கின்றான். |
| उत | அவன் எழுந்த பிறகு |
| अरुण: | சிறிது சிவப்பு நிறமுடையனாகின்றான். |
| बभ्रु: | பிறகு, பொன்னிற முடையவனாகின்றான். |
| सुमङ्गल: | மற்றும், இனிய மங்கள வடிவனாகின்றான். |
| येच रुद्रा: | அவனுடைய சுவாலைகளென்னும் எவ்வுருத்திரர்கள் |
| सहस्रश: | ஆயிரக்கணக்காக |
| इमां | இப்பூமியை |
| अभित: | நாற்புறமும் |
| दिक्षु | நான்கு திக்குக்களிலும் |
| श्रिता: | சூழ்ந்து கொண்டிருக்கின்றார்களோ, |
| एषां | இவ்வுருத்திரர்களுடைய |
| हेड: | கோபம் போன்ற இத் தீக்ஷணத்தை |
| अव ईमहे | வழிபாட்டால் நீக்குகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

உதயமுதல் பல்வகை நிறமுடையனும், கிரணங்களென்னுஞ் சுவாலைகளை வீசும் சூரியனாகிய உருத்திரனுடைய கோபத்தை, வழிபாட்டால் தணிக்கின்றேன் என்பதாம்.

எட்டாவது இருக்கு மந்திரம்.

இருக்மந்த்ரம்.

ரிஷி முதலியவைகள் முன் போன்றன.

असौ योऽवसर्पति नीलग्रीवो विलोहित: ।
उतैनं गोपा अदृशन्न दृशन्नुदहार्य: ।
उतैनं विश्वाभूतानि सदृष्टो मृडयातिन: ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| यः | எவ் வுருத்திரன் |
| नीलग्रीवः | கறுத்த கழுத்தை யுடையவனோ, |
| विलोहितः | அவனே, சிவந்த நிறமுடைய சூரியனாய் |
| असौ अवसर्पति | உதித்தொடுங்குகின்றனன். |
| उत | மற்றும், |
| एनं | இத்தகைய உருத்திரனுடைய இரவிமண்டலத்தை |
| गोपाः | பசுக்களைப் பாதுகாக்கின்றவனும் |
| अदृशन् | காண்கின்றான். |
| उदहार्यः | தண்ணீரெடுக்கின்ற பெண்களும் |
| अदृशन् | பார்க்கின்றார்கள். |
| उत | மற்றும், |
| एनं | இரவியாகிய இவ் வுருத்திரனை |
| विश्वाभूतानि | விலங்கு முதலான உயிர்களனைத்தும் பார்க்கின்றன. |
| दृष्टः सः | எல்லா வுயிர்களாலும் நேரில் காணப்பெற்ற அத்தகைய அவ்வுருத்திரன் |
| नः | எம்மைச் |
| मृडयाति | சுகப்படுத்துவானாக. |

சாயணபாடியக் கருத்து.

உருத்திரன், இவ்வுலகில், எல்லா வுயிர்களுந் தரிசித்துச் சுகமடைதற் பொருட்டுச் சூரியனாய் விளங்குகின்றான். கைலையங்கிரியிலுள்ள உருத்திர வடிவனோ, கற்றல் கேட்டலுடையர்களாற் றரிசித்தற்குரியவன் என்பதாம்.

ஈண்டு, இரவி ஒடுங்கு முன், மாடுகளைக் கோசாலையில் அடைப்பதற்கும், தண்ணீரெடுப்பதற்கும், இடையன் முதலானோரும், பெண்கள் முதலானோரும் மாலையிற் சூரியனை எதிர்பார்க்கின்றனர் எனினும் அமையும்.

---

ஒன்பதாவது இருக்கு மந்திரம்.

சம்பு ரிஷி, அநுஷ்டுப் சந்தம், சம்புதேவதை, உருத்திரனையும் பிரமத கணத்தையும் வணங்கல்.

नमो॑ अस्तु॒ नील॑ग्रीवाय सहस्राक्षाय॑ मीढुषे॑ ।
अथो॒ ये अ॑स्य॒ सत्वा॑नो॒ऽहं तेभ्यो॒ऽकरं॒ नमः॑ ॥ ९ ॥

ஹோமம்)

பதவுரை.

| | |
|---|---|
| नीलग्रीवाय | கறுத்த கழுத்தை யுடையவனும், |
| सहस्राक्षाय | இந்திரனாய், ஆயிரங் கண்களை யுடையவனும் |
| मीढुषे | மழை பெய்விப்போனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः अस्तु | எனது வணக்கம் ஆகுக. |
| अथो | மற்றும், |
| अस्य | இவ்வுருத்திரனுக்கு |
| सत्वानः | தொண்டர்கள் |
| ये (सन्ति) | எவர்கள் உள்ளார்களோ, |
| तेभ्यः | அவர்கட்கும் |
| अहं | யான் |
| नमः अकरम् | வணக்கஞ் செய்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து

முற்கூறியபடி காளகண்டனாகிய யாதொரு உருத்திரன் ஆயிரங்கண்களை யுடைய இந்திரனாய் மழையைப் பெய்விக்கின்றானோ, அவனை வணங்குகின்றேன்.

மற்றும், அவ் வுருத்திரனுடைய அண்மைத் தொண்டர்களையும் வணங்குகின்றேன் என்பதாம்.

---

பத்தாவது இருக்கு மந்திரம்.

அநுஷ்டுப்ச் சந்தம், நாரதர் ரிஷி, உருத்திரன் தேவதை, வில்லம்புகளைப் போட்டு விடும்படி வேண்டல்.

प्रमुञ्च धन्वनस्त्वमुभयोरार्त्नियोर्ज्याम् ।

याश्चते हस्त इषवः पराता भगवो वप ॥ १० ॥

பதவுரை.

| | |
|---|---|
| हे भगव ! | ஐசுவரியமுடைய உருத்திர ! |
| त्वं | நீ |
| ते धन्वनः | உனது வில்லின் |
| उभयोः आर्त्नियोः | இரண்டு நுனிகளிலுங் கட்டியிருக்கின்ற |

| | |
|---|---|
| ज्याम् | நாண் கயிற்றை |
| प्रमुञ्च | அவிழ்த்து விடுவாயாக. |
| हस्ते | திருக்கரத்தில் |
| याश्च इषवः | எப் பாணங்களை வைத்திருக்கின்றனையோ, |
| ताः | அவைகளையும் |
| परावप | போட்டுவிடுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

கோபந் தணிந்தும், நாணேற்றியபடியே அம்பும் வில்லு மிருக்கில் ஒரு கால் எம்மீது விட நேரிடும் ஆகையால் அதையும் கீழே போட்டருள்வாயாக என்பதாம்.

---

பதினோராவது இருக்கு மந்திரம்.

சந்தம் முதலியன முன் போன்றன. கோபந் தணிந்து சாந்தமாக வேண்டுதல்.

अवतत्य धनुस्त्वं सहस्राक्ष शतेषुधे ।
निशीर्य शल्यानां मुखा शिवो नस्सुमना भव ॥ ११ ॥

பதவுரை.

| | |
|---|---|
| हे सहस्राक्ष ! | ஆயிரங் கண்களையுடையோய் ! |
| शतेषुधे ! | நூற்றுக்கணக்கான அம்பறாத்தூணிகளையுடையோய் ! |
| (रुद्र ! त्वं) | உருத்திரனே ! நீ |
| धनुः अवतत्य | நாணைத் தளர்த்திவிட்டு |
| शल्यानां | அம்புகளின் |
| मुखा | நுனிகளை |
| निशीर्य | தலைகீழாய்ப் போட்டு மழுங்கும்படி செய்துவிட்டு |
| नः | எமக்கு |
| सुमनाः | அருள்புரியுந் திருவுள்ளத்தனாய் |
| शिवो भव | சாந்தமாகிய திருவுருவ முடையனாகி யருள்வாய். |

சாயணபாடியக் கருத்து.

வில் அம்பு முதலானவைகளையும் எறிந்து விட்டு அருட் டிருமேனி கொண்டு எமக்கு அருள் செய்வாயாக என்பதாம்.

பன்னிரண்டாவது இருக்கு மந்திரம்.

சந்தம் முதலிய முன் போன்றன, வில், அம்பு முதலியன கெட்டுவிடும்படி வேண்டல்.

विज्यं धनुः कपर्दिनो विशल्यो बाणवाँ उत ।

अनेशन्नस्येषव आभुरस्य निषङ्गथिः ॥ १२ ॥

பதவுரை.

| | |
|---|---|
| कपर्दिन. | கற்றைச் சடையுடைய உருத்திரனே! உனது |
| धनुः | வில் |
| विज्यम् | நாண் அறுந்துபோகுக. |
| उत | மற்றும், |
| बाणवान् | அம்பறாத்தூணியும் |
| विशल्यः | அம்பில்லாததாகுக. |
| अस्य | இவ்வுருத்திரனுடைய |
| इषवः | அம்புகள் |
| अनेशन् | பாயாவைகளாகுக. |
| अस्य | இவ்வுருத்திரனுடைய |
| निषङ्गथिः | பாணம் வைக்குமிடமும் |
| आभुः (अस्तु) | பாணத்தை எடுக்க இடங் கொடுக்காததாகுக. |

சாயணபாடியக் கருத்து.

உருத்திரனுடைய, வில், அம்பு, அம்பறாத்தூணி முதலானவைகள் சமயத்தில் உதவி புரியாதன வாகுக என்பதாம்.

---

பதின்மூன்றாவது இருக்கு மந்திரம்.

यो ते हेतिर्मीढुष्टम हस्ते बभूव ते धनुः ।

तयाऽस्मान्विश्वतस्त्वमयक्ष्मया परिब्भुज ॥ १३ ॥

அநுஷ்டுப்சந்தம், ரிஷியும், தேவதையும் உருத்திரனே. கத்தி முதலான ஆயுதங்களாற் காப்பாற்ற வேண்டு மெனல்.

பதவுரை.

| | |
|---|---|
| हे मीढुष्टम ! | விரும்பினவற்றை நிறைய அளித்தருளும் உருத்திர ! |
| ते | உன்னுடைய |
| याहेतिः | ஆயுதமும் |
| धनुः | வில்லும் |
| ते हस्ते | உனது கையில் |
| बभूव | உளதாகின்றதோ, |
| अयक्ष्मया | துன்பைச் செய்யாத |
| तया | அதனால் |
| अस्मान् | எம்மை |
| विश्वतः | எல்லா வகையாலும் |
| परिब्भुज | பரிபாலித்தருள்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

உனது திருக்கரத்திலுள்ள ஆயுதமும், வில்லும், கேட்டை விளைவிக்காததாம்; ஆதலின் அத்தகைய ஆயுதத்தாலும் வில்லாலும், மற்றும், எல்லாவற்றாலும் எம்மைப் பாதுகாத்தருள்வாயாக என்பதாம்.

---

பதினான்காம் இருக்கு மந்திரம்.

சந்தம் முதலியவைகள் முன்போன்றன ஆயுதங்கட்கு வணக்கங்கூறல்.

नमस्ते अस्त्वायुधायानाततय धृष्णवे ।
उभाभ्यामुतते नमो बाहुभ्यां तव धन्वने ॥ १४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| (हे रुद्र !) | (உருத்திரனே !) |
| अनाततय | வில்லில் வைத்து இழுக்க முடியாததும் |
| धृष्णवे | இயற்கையில் வன்மையையுடையதுமாகிய |
| आयुधाय | பாணமாகிய ஆயுதத்தின் பொருட்டு |
| नमः अस्तु | எமது வணக்கம் ஆகுக. |
| ते | (மற்றும்) உன்னுடைய |
| उभाभ्यां बाहुभ्यां | இரண்டு திருக்கரங்களுக்கும், |

ஹோமம்)

| | |
|---|---|
| तव | உன்னுடைய |
| धन्वने | வில்லிற்கும் |
| नमः | (எமது) வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

உருத்திர! உனது, திருக்கரங்கட்கும் அம்பிற்கும் யான் வணக்கஞ் செய்கின்றேன் என்பதாம்.

பதினைந்தாவது இருக்கு மந்திரம்.

சந்தம் முதலியன முன் போன்றன. மீண்டும், வில் அம்பு முதலிய ஆயுதங்களை எடுக்காதிருக்குமாறு வேண்டிக்கொள்ளல்.

परि॑ते धन्व॑नो हे॒तिर॒स्मान् वृ॑णक्तु वि॒श्वतः॑ ।

अथो॒ य इ॑षु॒धिस्तवा॒रे अ॒स्मन्निधे॑हि॒तम् ॥ १५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| (हे रुद्र !) | உருத்திரனே ! |
| ते | உன்னுடைய |
| धन्वनः | வில்லின் |
| हेतिः | பாணமென்னும் ஆயுதமானது |
| अस्मान् | எம்மை |
| विश्वतः | எல்லா வகையாலும் |
| परिवृणक्तु | விட்டு விடுவதாகுக. |
| अथो | மற்றும் |
| तव | உன்னுடைய |
| यः इषुधिः | யாதொரு அம்பறாத்தூணி யுண்டோ, |
| तम् | அதையும் |
| अस्मत्आरे | எம்மில் தூரத்திலுள்ள பகைவர் குழாங்களுக்கு |
| निधेहि | வைத்து விடுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

உருத்திரனே! உன்னுடைய பாணம், எல்லா வகையாலும் எம்மைத் தொடாதபடி எமக்கெதிரில் வைக்காதருள்வாயாக என்பதாம்.

முதல் அநுவாகம் முடிந்தது.

## இரண்டாவது அநுவாகம்.

பரமேஷ்டி ரிஷி, மகா காயத்திரிச் சந்தம், உருத்திரன் தேவதை.

नमो हिरण्यबाहवे सेनान्ये दिशाञ्च पतये नमो नमो वृक्षेभ्यो हरिकेशेभ्यः पशूनां पतये नमोनमः सस्पिञ्जराय त्विषीमते पथीनां पतये नमोनमो बभ्लुशाय विव्याधिनेऽन्नानां पतये नमो नमो हरिकेशायोपवीतिने पुष्टानां पतये नमो नमो भवस्य हेत्यै-जगतां पतये नमो नमो रुद्रायाततताविने क्षेत्राणां पतये नमो नमः सूतायाऽहन्त्यायवनानां पतये नमो नमः ॥ १ ॥ रोहिताय स्थपतये वृक्षाणां पतये नमो नमो मन्त्रिणे वाणिजाय कक्षाणां पतये नमो नमो भुवन्तये वारिवस्कृतायौषधीनां पतये नमोनम उच्चैर्घोषायाऽऽक्रन्दयते पत्तीनां पतये नमोनमः कृत्स्नवीताय धावते सत्वनां पतये नमः ॥ २ ॥

முதல் அநுவாகத்தில் உருத்திரனுடைய முக்கியத் திருமேனியில், பாணம் முதலியவற்றைத் தாங்கியுள்ள திருக்கர முதலியவை வகையான இருக்கு மந்திரங்களாற் புகழ்படுத்திக் கூறிவிட்டு, மேல்வரும் அநுவாகங்களால் உருத்திரனுடைய திருவிளையாட்டுத் திருமேனிகள் கூறப்படுகின்றன. அத்தகைய அநுவாகங்கள் எட்டிலும், உள்ளவை எசுர் மந்திரங்களே; அம்மந்திரங்களும், முதலில் வணக்கச் சொல்லையுடையவைகள், அல்லது முடிவில் வணக்கச் சொல்லையுடையவைகளும், முதலிலும் கடையிலும் வணக்கச் சொல்லையுடையவைகளும் என இரு படுவனவாம் அவற்றுள்ளும், மூன்று அநுவாகங்களுள், வணக்கம் முடையதும், வணக்கம் முடிவிலுடையதுமாகிய ஒவ்வொரு எசுர் மந்திரங்கள் உள்ளன எனைய ஐந்து அநுவாகங்களுள் வணக்கச்சொல்லை முதலிற் கொண்ட ஒவ்வொரு எசுர் மந்திரங்கள் உள்ளன. அவற்றுள்ளும் இவ்விரண்டாம் அநுவாகத்தில் பதின்மூன்று எசுர் மந்திரங்களும் எழுபத்தொன்பது பதங்களும் இருக்கின்றன. அவற்றுள்,

முதலாவது எசுர் மந்திரம்

சேனைக்கும், திக்குக்கட்கும், இறைவர்கட்கும் வணக்கங் கூறல்.

नमो हिरण्यबाहवे सेनान्ये दिशां च पतये नमः ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| हिरण्यबाहवे | பத்தரை மாத்துத் தங்கத்தாற் செய்த அணிகளையணிந்த திருக்கரத்தையுடையவனும் |
| सेनान्ये | போர்களில் சேனைகளைச் செலுத்துகின்றவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம். |
| दिशां | திக்குகளைப் |
| पतये च | பாதுகாக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து

பசும்பொன் அணிகளை யணிந்துள்ள திருக்கரத்தால், போரில் சைன்யங்களை ஏவியருளுந் திருமேனி தாங்கிய உருத்திரனுக்கு வணக்கம். திக்குப் பாலகர்களாய்த் திருமேனிகள் தாங்கிய உருத்திரர்களுக்கும் வணக்கம் என்பதாம்.

ஈண்டு 'ஹிரண்யபாஹு' என்பதற்கு அழகிய திருக்கரமெனவும், 'திக்குக்கட்கு பதி' என்பதற்கு சூரிய வடிவன், அல்லது, திக்குகளைப்பற்றிய பொருள், குண, தர்மம், அதர்மம் தேசம் கால முதலியவைகளைச் செய்தருளுகின்றவன் என பொருள் கொள்ளினும் அமையும்.

இரண்டாவது எசுர் மந்திரம்.

தருக்களாயும், பசுக்கட்குப் பதியாகவுமுள்ள உருத்திரர்கட்கு வணக்கங்கூறல்.

नमो वृक्षेभ्यो हरिकेशेभ्यः पशूनां पतये नमः ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| हरिकेशेभ्यः | பசிய இலைகளென்னுந் தலை மயிர்களையுடைய |
| वृक्षेभ्यः | தருக்களான உருத்திரர்கட்கு |
| नमः | வணக்கம். |
| पशूनां | பசுக்களை |
| पतये | பாதுகாப்பவனு யிருக்கின்ற உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*பச்சிலைகளாற் குளிர் நிழலைத்தரும் தருக்களாகத் திருமேனிகொண்டுள்ள உருத்திரர்கட்கும், பிரமன் முதல் தாவர மீறாகவுள்ள பசுக்களைப் பரிபாலிக்கின்ற உருத்திரனுக்கும் வணக்கம் என்பதாம்.*

*ஈண்டு, விருட்சம் என்பது வெட்டப்படுவது என விரிதலின், பிரமன் முதல், எறும்பீறாகவுள்ள அநித்திய உயிர்வர்க்கங்களாய் நிற்கும் எனவும், 'பசூனாம்பதி' என்பதற்கு அந்நித்திய உயிர்களான பசுக்களைப் பாதுகாக்கின்றவன் எனவும் பொருள் கொள்ளினும் அமையும்.*

*பிரமன் முதல் தாவரமீறானவைகள் பசுக்கள் என்பதற்குப் பிரமாணம்,*

*'பிரஹ்மாத்யா: ஸ்தாவராந்தாஸ்ச*
*பசவ: பரிகீர்த்திதா:' என்னும் பாரத வாக்கியமா மென்க.*

---

மூன்றாவது எசுர் மந்திரம்.

பசும்புல் வடிவ உருத்திரனைப் போற்றல்.

नमः सस्पिञ्जराय त्विषीमते पथीनां पतये नमः ॥ ३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| त्विषीमते | *விளங்குகின்றதும்* |
| सस्पिञ्जराय | *மஞ்சளுஞ் சிவப்புங் கலந்த நிறமுடைய பசும்புல் வடிவிய உருத்திரனுக்கு* |
| नमः | *வணக்கம் ஆகுக.* |
| पथीनां | *வடக்குவழி தெற்குவழி மூன்றாவதுவழி என்னும் புண்ணியவுலக வழிகளைப்* |
| पतये | *பாதுகாக்கின்ற உருத்திரனுக்கு* |
| नमः | *வணக்கம் ஆகுக.* |

சாயணபாடியக் கருத்து

*பசும்புல் வடிவத் திருமேனிதாங்கிய உருத்திரனுக்கும், வடக்கு மார்க்கம் தெற்கு மார்க்கம், மூன்றாவது மார்க்கம் என்னும் நூற்கள் கூறிய மார்க்கங்களைப் பரிபாலிக்கின்ற உருத்திரர்களுக்கும் வணக்கம் ஆகுக என்பதாம்.*

*ஈண்டு, 'சஸ்பிஞ்சரம்' என்பதற்கு, வேள்வியை யழிக்கும் அசுரரை யொழிக்கும் எனவும், 'பதீநாம்' என்பதற்கு இலௌகிக வைதிகமார்க்கங்கள்,*

ஹோமம்)

அல்லது, அர்ச்சிரமார்க்கம் (புண்ணியத்தாற் செல்லுங் தேவமார்க்கம்) எனவும், 'பதி' என்பதற்கு மார்க்கத்தைத் தாண்டுவிப்பவன் எனவும் பொருள் கொள்ளினும் அமையும்.

---

நான்காவது எசுர் மந்திரம்.

இடபவாகன உருத்திரனைப் போற்றல்.

नमो॑ बभ्लुशाय॑ विव्याधिनेऽन्ना॑नां पत॑ये नमः॑ ॥ ४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| बभ्लुशाय | இடபத்தின் மீது எழுந்தருளி யிருக்கின்றவனும் |
| विव्याधिने | பகைவரை யழிக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| अन्नानां | உணவுப் பொருள்களின் |
| पतये | பாதுகாப்பாளனுகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

வெறுப்போரைத் தொலைப்போனும், இடபவாகனத்தின்மீது எழுந்தருளுகின்றவனும், உண்ணத்தக்க பொருள்களைப் பாதுகாக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

ஈண்டு, 'பப்லுமாய' என்பதற்கு, மங்கலாகிய சிவப்பு நிறமுடைய, அல்லது, நிறைக்குந் தன்மையுடைய எனப் பொருள் கொள்ளினும் அமையும்.

---

ஐந்தாவது எசுர் மந்திரம்.

காளைப் பருவ உருத்திரனைப் போற்றல்.

नमो॒ हरि॑केशायोपवीति॒ने॑ पु॒ष्टानां॒ पत॑ये॒ नमः॑ ॥ ५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| हरिकेशाय | கரிய தலை மயிர்களையுடையவனும் |
| उपवीतिने | நற்செயலின் பொருட்டு பூணூலணிந்தவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| पुष्टानां | நிறைந்த குணமுடையவர்களின் |

पतये பாதுகாப்பாளனுமாகிய உருத்திரனுக்கு

नम: வணக்கம் ஆகுக.

சாயணபாடியக் கருத்து.

*கட்டிளமை யுடையவனும், நற்குணங்கள் நிறைந்தவர்களைப் பரிபாலிக்கின்றவனும், நலஞ் செய்தற் பொருட்டுப் பூணூல் அணிந்தவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*ஈண்டு, புஷ்டானாம் என்றதால்—வாக்கு, உடல், வீடு, மனை, தனம், தான்யம், பிரசை, பசு, கிராமம், தர்மம், அணிமாதி என்பவைகளின் நிறைவைப் பாதுகாக்கின்றவன் எனவும் பொருள்படு மென்க.*

---

ஆறாவது எசுர் மந்திரம்.

துன்பைக் கொடுத்துங் கெடுத்தும் அருளும் உருத்திரனைப் போற்றல்.

नमो॑ भ॒वस्य॑ हे॒त्यै जग॑तां॒ पत॑ये॒ नमः॑ ॥ ६ ॥

பதவுரை.

भवस्य பொய்யுலக வாழ்க்கையைக் கெடுப்பதற்கு

हेत्यै ஆயுதமாகிய உருத்திரனுக்கு

नम: வணக்கம் ஆகுக.

जगतां உலகங்களுக்கு

पतये பாதுகாப்பாளனாகிய உருத்திரனுக்கு

नम: வணக்கம் ஆகுக.

சாயணபாடியக் கருத்து.

*குடும்ப வாழ்வைத் தொலைக்கின்றவனும், மண்ணுலக முதலிய உலகங்களைப் பரிபாலிக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*ஈண்டு, 'பவஸ்ய ஹேத்யை' என்பது, குடும்ப வாழ்க்கையின் துன்புருவனுக்கு எனவும் பொருள் படுமாதலின், உலக வாழ்க்கையில் பிராணிகளைத் துன்புறுத்தருளுகின்றவனும், துன்புற்றோரைப் பாதுகாத்தருளுகின்றவனுக்கும் என்பது திரண்ட பொருள்.*

---

ஏழாவது எசுர் மந்திரம்.

வில் வளைத்து இடையூற்றைப் போக்கியருளும் உருத்திரனைப் போற்றல்.

नमो॑ रु॒द्राया॑ऽऽतता॒विने॒ क्षेत्रा॑णां॒ पत॑ये॒ नमः॑ ॥ ७ ॥

பதவுரை

| | |
|---|---|
| आततावि॑ने | நாணேற்றிய வில்லாற் பாதுகாக்கின்றவனும் |
| रु॒द्राय | { தன்னைப் போக்கியருளுகின்றவனுமாகிய உருத்திரனுக்கு |
| नम॑: | வணக்கம் ஆகுக. |
| क्षेत्रा॑णां | புண்ணிய தலங்களை, அல்லது, உடல்களை |
| पत॑ये | பாதுகாக்கின்ற உருத்திரனுக்கு |
| नम॑: | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

வில்லால் இடர்களைந்து நம்மை பரிபாலிக்கின்றவனும், க்ஷேத்திரங்களைப் பாதுகாக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

ஈண்டு, குடும்பத்தை வளர்க்கின்றவனும், தொலைக்கின்றவனுமாகியவன் உருத்திரன் என்பது குறிப்பு.

---

எட்டாவது எசுர் மந்திரம்.

தேரைச் செலுத்துகின்ற உருத்திரனைப் போற்றல்.

नम॑: सू॒ताया॒ऽह॑न्त्याय॒ वना॑नां॒ पत॑ये॒ नम॑: ॥ ८ ॥

பதவுரை

| | |
|---|---|
| सूताय | தேரோட்டுகின்றவனும் |
| अहन्त्याय | { பகைவராற் கொல்ல முடியாதவனுமாகிய உருத்திரனுக்கு |
| नम: | வணக்கம் ஆகுக. |
| वनानां | வனங்களைப் |
| पतये | பாதுகாக்கின்றவனாகிய உருத்திரனுக்கும் |
| नम: | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

தேர்ப்பாகனாகவும் பிறராற் கொல்ல முடியாதவனாகவும், வனங்கட்கு இறைவனாகவு மிருக்கின்ற உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

ஈண்டு, 'சூத:' என்பதற்கு, உலக சக்கரமாகிய இரதத்தை நியமிப்பவன், அல்லது, புராணிகரான சூத முனிவர், அல்லது, சூதமுனியால் அதிட்டிக்கப்

பட்ட யுகம், அல்லது, பிழிந்த சோமரசம் என்பதும், அஹந்தாய, என்பதற்கு, கேடுறாத ஆன்மவொளி, அல்லது, நானே உலகம் என்னும் அகந்தையுடையவன், அல்லது, நான் என்னும் பொருள்பட நிற்பவன் என்பவைகளும் பொருள்களாம்.

---

ஒன்பதாவது எசுர் மந்திரம்.

சிவந்த திருமேனியையுடைய உருத்திரனைப் போற்றல்.

नमो रोहिताय स्थपतये वृक्षाणां पतये नमः ॥ ९ ॥

பதவுரை.

| | |
|---|---|
| रोहिताय | சிவந்த நிறமுடையவனும் |
| स्थपतये | பிரபுத்தன்மையை யுடையவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| वृक्षाणां | தருக்களைப் |
| पतये | பாதுகாக்கின்றவனாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

சிவந்த நிறமுள்ள திருமேனியை யுடையவனும், பெருமையிற் சிறந்தோனும், தருக்கட்குப் பாதுகாப்பாளனாகவுமுள்ள உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

ரோகிதம், என்பதற்கு, 'வாசகம்' என்பதும், 'ஸ்தபதி' என்பதற்கு, இல்லத்தை இயற்றுகின்றவன், அல்லது, யாண்டுமிருந்து பாதுகாக்கின்றவன் என்பதும் பொருளாம்.

---

பத்தாவது எசுர் மந்திரம்.

சூழ்ச்சித்துணைவனாகிய உருத்திரனைப் போற்றுதல்.

नमो मन्त्रिणे वाणिजाय कक्षाणां पतये नमः ॥ १० ॥

பதவுரை.

| | |
|---|---|
| मन्त्रिणे | அரசனுடைய மந்திரியாகவும் |
| वाणिजाय | வணிகர்கட்கு இறைவனாகவுமுள்ள உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

ஹோமம்)

| | |
|---|---|
| कक्षाणां | கொடி செடிகளடர்ந்த புதர்களைப் |
| पतये | பாதுகாக்கின்றவனாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

அரசருடைய சபையில் இரகசிய ஆராய்ச்சி வல்லுநனும், வணிகர் கூட்டத்திற்குத் தலைவனும், மலை, ஆறு, குகை முதலிய இடங்களிலுள்ள புதர்களின் பாதுகாப்பாளனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

மந்திரி என்பதற்கு, ஐந்து மந்திரங்களை யுடையவன், அல்லது, இரகசியமாய்ப் பேசுகின்றவன், அல்லது, இரகசியமாகிய உபநிடதங்களாற் கூறப்படுகின்றவன், அல்லது, சத்த கோடி மகாமந்திர வடிவன் என்பதும், 'வாணிச' என்பதற்கு, வணிகனாகியவன், அல்லது, வணிகனைப் போன்றவன், அல்லது வழக்கில் தோன்றியவன், அல்லது, வாணியில் பொருளாய்த் தோன்றுகின்றவன் என்பதும் பொருளாமென்க.

பதினோராவது எசுர் மந்திரம்.

தோற்றங்கட்கு நிலைக்களமாகிய உருத்திரனைப் போற்றுதல்.

नमो॑ भुव॒न्तये॑ वारिवस्कृ॒ताय॒ौष॑धीनां॒ पत॑ये॒ नमः॑ ॥ ११ ॥

பதவுரை.

| | |
|---|---|
| भुवन्तये | மண் தோற்றத்தை விரிப்போனும் |
| वारिवस्कृताय | தனத்திற்கு இறைவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| ओषधीनां | நாட்டிலும், காட்டிலு முண்டாகிய கொடிசெடிகளை |
| पतये | வளர்ப்பவனாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

மண்ணுலகைத் தோற்றுவிக்கின்றவனும், தனங்கட்கு இறைவனும், கொடி செடிகட்குப் பாதுகாப்பாளனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'புவந்த' என்பதற்கு, உலகிற்கு இருப்பைக் கொடுப்பவன், அல்லது, எங்கும் எப்போது மிருப்பவன், அல்லது, கொடி செடி தருக்களைத் தோற்றுவிப்பவன் என்பதும் 'வாரிவஸ்கிருத' என்பதற்கு, தனமுடையவன், அல்லது

தனத்தைத் தேடுகின்றவனுக்கு உதவி புரிபவன் என்பதும் பொருளாமென்க. மற்றும், சோமவடிவாய்க் கொடி செடிகளைப் பாதுகாப்பவன் எனினுமாம்.

---

## பன்னிரண்டாம் எசுர் மந்திரம்.

போர்க்களத் திருமேனி தாங்கிய உருத்திரனைப் போற்றல்.

नमं उच्चैर्घोषायाऽऽक्रन्दयते पत्तीनां पतयेनमः ॥ १२ ॥

### பதவுரை.

| | |
|---|---|
| उच्चैर्घोषाय | போரிற் பேரொலி செய்கின்றவனும் |
| आक्रन्दयते | பகைவரை அழச் செய்கின்றவனுமாகிய உருத்திர னுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| पत्तीनां | காலாட் படைகளின் |
| पतये | பாதுகாப்பாளனாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

### சாயணபாடியக் கருத்து.

போரில் வெற்றி யொலியை யுடையவனும், பகைவரை அழும்படி செய்கின்றவனும், காலாட்படைகளைப் பாதுகாக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'உச்சைர்க்கோஷம்' என்பதற்கு, அலறிக் கொண்டு செய்யுந் துதி, அல்லது, பேரொலி செய்யும் மேகம் என்பதும், ஆக்ராந்த னென்பதற்கு, போரில் அறைகூவி யழைக்கின்றவன் என்பதும், 'பத்தீநாம்' என்பதற்கு, ஒரு தேர், ஒரு கரி, ஐந்து காலாள், மூன்று குதிரைகள் கொண்டவைகட்கு என்பதும் பொருளாமென்க.

---

## பதின்மூன்றுவது எசுர் மந்திரம்.

இதுவுமது.

नमः कृत्स्नवीताय धावते सत्वनां पतयेनमः ॥ १३ ॥

### பதவுரை.

| | |
|---|---|
| कृत्स्नवीताय | எல்லாச் சைன்யங்களையுஞ் சூழ்ந்து கொண்டிருக்கின்றவனும் |
| धावते | புறங்காட்டியோடும் சைன்யத்தைப் பின்பற்றி ஓடுகின்றவனுமாகிய உருத்திரனுக்கு |

ஹோமம்)

| | |
|---|---|
| नमः | வணக்கம் ஆகுக. |
| सत्वनां | அடைக்கலம் புகுந்தோர்களைப் |
| पतये | பாதுகாக்கின்றவனாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

*சைன்யங்கட்குக் கவசமா யிருக்கின்றவனும், பகைவனுடைய சேனைகளைத் துரத்திக்கொண்டு ஓடுகின்றவனும், சரணடைந்தாரைப் பாதுகாத்தருளுகின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*'கிருத்ஸ்னவீத' என்பதற்கு, எல்லா வுடம்புகட்கும் கவசமாய் இருக்கின்றவன், அல்லது, எல்லா வுலகையும் முடிவில் உண்கின்றவன், அல்லது, உலகங்கள் ஒழிந்தபோதும் தான் நிலைத்து நிற்கின்றவன் என்பதும், 'தாவதே' என்பதற்கு, விரைவில் சேர்பவன், அதாவது (கொள்ளிச் சுழல்போல்) எங்கு நோக்கினும் அவனாய் நிற்கின்றவன் அல்லது, அன்பரின் பாதகங்களைச் சோதிப்பவன் என்பதும் பொருளாமென்க.*

இரண்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஐந்தாவது பிரபாடகம்

## மூன்றும் அநுவாகம்.

இது, இரண்டு பஞ்சாதிகட்குமேல் மூன்று பதங்களைக் கொண்டது.

*மகாதேவர் ரிஷி, பிருகதிச் சந்தம், மகாதேவர் தேவதை.*

**नमस्सहमानाय निव्याधिने आव्याधिनीनां पतये नमोनमः ककुभाय निषङ्गिणे स्तेनानां पतये नमोनमो निषङ्गिण इषुधिमते तस्कराणां पतये नमोनमो वञ्चते परिवञ्चते स्तायूनां पतये नमो नमो निचेरवे परिचरायाऽरण्यानां पतये नमोनमस्सृकाविभ्यो जिघांसद्भ्यो मुष्णतां पतये नमो नमोऽसिमद्भ्यो नक्तञ्चरद्भ्यः प्रकृन्तानां पतये नमोनम उष्णीषिणे गिरिचराय कुलुञ्चानां पतये नमोनमः ॥ १ ॥ इषुमद्भ्यो धन्वाविभ्यश्च वो नमोनम आतन्वा-**

नेभ्यः प्रतिदधानेभ्यश्च वो नमोनम आयच्छद्भ्यो विसृजद्भ्यश्च वो नमोनमोऽस्यद्भ्यो विद्धयद्भ्यश्च वो नमोनम आसीनेभ्यश्शयानेभ्यश्च वो नमोनमस्स्वपद्भ्यो जाग्रद्भ्यश्च वो नमोनमस्तिष्ठद्भ्यो धावद्भ्यश्च वो नमोनमस्सभाभ्यस्सभापतिभ्यश्च वो नमोनमो अश्वेभ्योऽश्वपतिभ्यश्च वो नमः ॥ २ ॥

இரண்டாவது அநுவாகத்தில், முதலிலும் கடையிலும் வணக்கமுள்ள சில எசுர்மந்திரங்கள் கூறப்பட்டன, இதில், அத்தகைய பன்னிரண்டு எசுர் மந்திரங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள்,

முன் அநுவாகத்தில், பொருளைப் பற்றியுள்ள உருத்திரனுடைய மேம்பாடு கூறப்பட்டது. இதில், செயலைப் பற்றிய உருத்திர மேம்பாடு கூறப்படுகின்றது.

---

முதலாவது எசுர் மந்திரம்.

பகைவனைக் கொல்லும் உருத்திரனைப் போற்றல்.

नमः सहमानाय निव्याधिने आव्याधिनीनां पतये नमः ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| **सहमानाय** | பகைவரை மதிக்காதவனும் |
| **निव्याधिने** | பகைவரை யழிக்கும் இயல்பையுடையவனுமாகிய உருத்திரனுக்கு |
| **नमः** | வணக்கம் ஆகுக. |
| **आव्याधिनीनां** | நாற்புறமுஞ் சூழ்ந்து கொண்டு பகைவரைக் கொல்லுஞ் சூரத்தன்மையையுடைய சேனைகளின் |
| **पतये** | பாதுகாப்பாளரா யிருக்கின்ற உருத்திரனுக்கு |
| **नमः** | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

சத்துருவை வெல்லுகின்ற உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'சஹமான' என்பதற்கு, தனையொழிந்த ஏனையவைகள் அனைத்தையும் மதிக்காதவன், மற்றும், குற்றங்களைப் பொறுத்துக் கொள்கின்றவன் என்பதும் பொருளா மென்க.

இரண்டாவது எசுர் மந்திரம்.

தாழ்ந்த செயலையுஞ் செய்யும் உருத்திரனைப் போற்றல்.

नमः ककुभाय निषङ्गिणे स्तेनानां पतये नमः ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| ककुभाय | தலைமை வாய்ந்தவனும் |
| निषङ्गिणे | வாளேந்திய திருக்கையனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| स्तेनानां | மறைந்துள்ள கள்வர்களின் |
| पतये | பாதுகாப்பாளனாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

*எல்லாவற்றிற்குந் தலைமையானவனும், பகைவரை அறுப்பதற்கு வாளைக் கையிலேந்தியவனும், திருடர்களைப் பரிபாலிக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*'ககுபாய' என்பதற்கு, உயர்ந்தவன், அல்லது, இடபத்தின் கொண்டை மீதிருக்கின்றவன் என்பதும், ஸ்தேநாநாம், என்பதற்கு, திருடர்கட்குச் சிறந்தவன் என்பதும் பொருளாமெனக.*

*ஈண்டு, அடைக்கலம் புகுந்தாரைப் பரிபாலித்தல் உருத்திரபரமேசுரனுடைய அருட்கடனாதலின், மறைந்த கள்வர் அடைக்கலம் புகினும் அவர்களைப் பாதுகாத்தல் கிருபையின் இயல்பாமெனல் குறிப்பிடப்பட்டமை காண்க.*

---

மூன்றாவது எசுர் மந்திரம்.

முற்கூறிய செயலில் தெளிவுடைய உருத்திரனைப் போற்றுதல்.

नमो निषङ्गिणे इषुधिमते तस्कराणां पतये नमः ॥ ३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| निषङ्गिणे | { வில்லிற்றொடுக்க எடுத்த அம்பைக் கையில் உடையவனும் |
| इषुधिमते | { அம்பறாத்தூணியை முதுகில் கட்டியுள்ளவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

| | |
|---|---|
| तस्कराणां | வெளிப்படையான கள்வர்களின் |
| पतये | பாதுகாப்பாளனுகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

வில்லில் வைத்து விடுவதற்கு அம்பைக் கையில் எடுக்கின்றவனும், அம் பறுத்தூணியை மறைவாய் வைத்துக் கொண்டிருக்கின்றவனும், வெளிப்படை யாய்த் திருடுவோர்களைப் பாதுகாக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக் கம் என்பதாம்.

நிஷங்கிணே:, என்பதற்கு, அன்பர்களிடத்து இடையறுத அருள் ஆற்ற லுடையவன் என்பதும், தஸ்கராணும், என்பதற்கு, வனத்திலுள்ள கள்வர் களை என்பதும் பொருளா மென்க.

---

நான்காவது எசுர் மந்திரம்.

களவுகளுள் ஒருவகைக் களவினையுடைய உருத்திரனைப் போற்றல்.

नमो वञ्चते परिवञ्चते स्तायूनां पतये नमः ॥ ४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| वञ्चते | வஞ்சகனும் |
| परिवञ्चते | மிகுத்த வஞ்சகனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| स्तायूनां | உள் உளவான கள்வர்களின் |
| पतये | பாதுகாப்பாளனு யிருக்கின்ற உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

தலைவனுக்கு உண்மை யுரைப்போனுயிருந்து கொண்டு அவனுடைய கொடுக்கல் வாங்கல்களிற் சிலவிடத்துச் சிறிது பொருளைக் கவருகின்றவனும், தன்னுடைய ஆளைப்போன் றிருந்துகொண்டு, காணுமல் திருடுகின்றவர் களைப் பாதுகாப்போனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

வஞ்சகன், என்பதற்கு, பிதற்றுகின்றவன் எனவும், பரிவஞ்சகன் என்ப தற்கு, பிதற்றித் திரிகின்றவன் எனவும், ஸ்தாயூநாம், என்பதற்கு, சாதுவே டந் தாங்கிய திருடர்களை எனவும் பொருளா மென்க.

---

ஐந்தாவது எசுர் மந்திரம்.

மற்றொரு வகைக் களவையுடைய உருத்திரனைப் போற்றல்,

नमो निचेरवे परिचरायाऽरण्यानां पतये नमः ॥ ५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| निचेरवे | எவ் வீட்டில் எப்போது திருடுவோம்? என்று திரிகின்றவனும் |
| परिचराय | வெளியில் எப்போது திருடுவோமென்று அலைகின்றவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| अरण्यानां | வனத்திலிருந்து கொண்டு திருடுந் தொழிலையே மேற்கொண்டவர்களைப் |
| पतये | பாதுகாக்கின்ற உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

தனது எஜமானன் வீட்டிலேயே எப்போது திருடலா மென்னும் பெருநோக்கத்துடன் நடந்து கொண்டிருக்கின்றவனும், கடைவீதி முதலிய விடங்களில் திருடுங் கருத்துடையனாய் நடந்து கொண்டிருக்கின்றவனும், வழி நடப்போரின் பொருளைக் கவருதற்கு காட்டில் வாழுகின்றவனுமாகிய கள்ள வடிவ உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'நிசேரவ' என்பதற்கு, இடையறா நடையை யுடையவன் என்பதும், 'பரிசர' என்பதற்கு, எங்குஞ் செல்கின்றவன் என்பதும், ஆரண்யாநாம், என்பதற்கு வனபூமிகட்கு என்பதும் பொருளாமெனக.

---

ஆறாவது எசுர் மந்திரம்.

கொலை பண்ணுந் திருடர் வடிவாய உருத்திரனைப் போற்றல்.

नमः सृकाविभ्यो जिघांसद्भ्यो मुष्णतां पतये नमः ॥ ६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| सृकाविभ्यः | வச்சிரத்தால் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுந் திருடர்களும் |
| जिघांसद्भ्यः | உயிர்களைக் கொல்லுகின்ற திருடர்களுமாக வடிவெடுத்துள்ள உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

| | |
|---|---|
| मुष्णतां | தானியங்களைக் கவர்கின்ற கள்வர்களைப் |
| पतये | பாதுகாக்கின்றவனாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

தம்மை, ஆயுதத்தால் பாதுகாத்துக் கொள்ளுகின்றவர்களும், பிறர்களைக் கொலை செய்ய விரும்புகின்றவர்களுமான கள்வர்களும், வயலில் விளைந்திருக்கின்ற, தமது எசமானனுடைய தானியங்களைத் திருடுகின்றவர்களுமான திருடர்களின் வடிவாயிருக்கின்ற உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

ஸ்ருகாவிப்ய: என்பதற்கு, உருத்திரனுடைய அரசர்களான வச்சிரந் தாங்கியவர்கள், அல்லது, வச்சிரம் முதலான ஆயுதங்களைப் பாதுகாக்கின்றவர்கள் என்பதும், மற்றும், வச்சிரம் முதலிய ஆயுதங்களால் வாழ்கின்ற மனித விசேடர்கள் என்பதும் பொருள் என்பர் சிலர். 'சிகாம்சத்ப்ய:' என்பதற்கு, மக்களையே கொல்லும் ஒருவகை மனித விசேடர்கள் என்பதும் பொருளாமென்க.

---

ஏழாவது எசுர் மந்திரம்.

கொலைத் தொழிலையே மேற்கொண்ட திருடர் வடிவாகிய உருத்திரனைப் போற்றல்.

नमोऽसिमद्भ्यो नक्तं चरद्भ्यः प्रकृन्तानां पतये नमः ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| असिमद्भ्यः | கையில் வாளேந்திக் கொண்டிருக்கின்ற திருடர்களும் |
| नक्तं चरद्भ्यः | இரவில் திரிகின்ற கள்வர்களுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| प्रकृन्तानां | கொன்றுவிட்டுத் திருடுகின்றவர்களைப் |
| पतये | பாதுகாப்பவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

வாளேந்தியவர்களும், கொலை செய்கின்றவர்களுமான திருடர்களும், உயிர்களைக் கொன்று திருடுகின்ற திருடர்களுமான உருத்திரனுக்கு வணக்கம் பதாம்.

ஹோமம்)

அசிமத்ப்ய:, என்பதற்கு, உருத்திரனுடைய அநுசரர்கள் என்பதும், மற்றும், இராத்திரியில் நடப்பவர்களும் உருத்திராநுசரர்கள் என்பதும் அமையுமென்க.

---

எட்டாவது எசுர் மந்திரம்.

தலைப்பாகையுள்ள திருடனாகிய உருத்திரனைப் போற்றுதல்.

नम उष्णीषिणे गिरिचराय कुलुञ्चानां पतये नमः ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| उष्णीषिणे | தலைப்பாகை கட்டிக்கொண்டும் |
| गिरिचराय | மலையில் ஒளிந்து கொண்டுமுள்ள திருடர்களான உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| कुलुञ्चानां | வீடு, மனை முதலானவைகளைத் திருடுகின்றவர்களைப் |
| पतये | பாதுகாக்கின்ற உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

கிராமத்திலுள்ளவன் போன்று தலைப்பாகை கட்டிக்கொண்டு வஞ்சமாய் அவர்களுக்குள் நுழைந்து கொண்டிருக்குந் திருடனும்; விறகுகள் தேட வருகின்றவர்களின் ஆடை முதலியவைகளைக் கவருவதற்கு மலையிலிருக்கின்ற திருடனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'உஷ்ணீஷிண:' என்பதற்கு, தலையைப் பாதுகாக்கின்றவன் எனவும், 'குலுஞ்சர்கள்' என்பதற்கு, வியப்பாகிய செயலைச் செய்து திருடுகின்றவர்கள், அல்லது, குலத்தைக் கெடுக்கின்றவர்கள் என்பதும் பொருளாமென்க.

---

ஒன்பதாவது எசுர் மந்திரம்.

இதிலிருந்து மேல் வரும் மந்திரங்களால் பிரத்தியட்சமாக உருத்திரர்கள் போற்றப் பெறுகின்றார்கள்.

வில்லையும் அம்பையுங் கொண்டு பயங்காட்டும் உருத்திரர்களைப் போற்றுதல்.

नम इषुमद्भ्यो धन्वाविभ्यश्च वो नमः ॥ ९ ॥

பதவுரை.

| | |
|---|---|
| इषुमद्भ्यः | கையில் அம்பை ஏந்திப் பயமுறுத்தி யருளுகின்ற உருத்திரர்களே! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| धन्वाविभ्यः च | கையில் வில்லை ஏந்திப் பயமுறுத்தும் உருத்திரர்களே! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

பயமுறுத்தி யருளுவதன் பொருட்டு திருக்கரங்களில் வில்லையும் அம்பையும் ஏந்தி யிருக்கின்ற உருத்திரர்கட்கு வணக்கம் என்பதாம்.

இனி, நீ என்று கூறப்படுதலால் பிரத்தியட்சம் (முன்னிலை) பற்றிய மந்திரங்கள். முன்னரோ, அவன் என்று கூறப்பட்ட பரோட்சம் (படர்க்கை) பற்றிய இறைவன் என்றது.

ஈண்டு, இருமுறை வணக்கங் கூறியது, பிரகரணத்தை வேறுபடுத்துவதன் பொருட்டென் றுணர்க.

---

பத்தாவது எசுர் மந்திரம்.

வில்லில் நாணேற்றும் உருத்திரர்களைப் போற்றல்.

नम॑ आत॒न्वाने॑भ्यः प्रति॒दधा॑नेभ्यश्च वो॒ नमः॑ ॥ १० ॥

பதவுரை.

| | |
|---|---|
| आतन्वानेभ्यः | வில்லில் நாணேற்றுகின்ற உருத்திரர்களே! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| प्रतिदधानेभ्यश्च | வில்லில் அம்பைத் தொடுக்கின்ற உருத்திரர்களே! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

வில்லில் நாணேற்றி அம்பைத் தொடுத்துப் பயங்காட்டி அருளுகின்ற உருத்திரர்களே! உங்கட்கு வணக்கம் என்பதாம்.

பதினோராவது எசுர் மந்திரம்.

பாணத்தை விடும் உருத்திரர்களைப் போற்றல்.

नम॑ आयच्छद्भ्यो॑ विसृजद्भ्य॑श्च वो॒ नमः॑ ॥ ११ ॥

பதவுரை.

| | |
|---|---|
| आयच्छद्भ्यः | நாண்கயிற்றை இழுக்கின்ற உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| विसृजद्भ्यः च | பாணத்தை விடுகின்ற உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

நாணையிழுத்து அம்பை எய்து பயமுறுத்தியருளும் உருத்திரர்களே ! உங்கட்கு வணக்கம் என்பதாம்.

பகைவரின் மீது பாணத்தை விடுகின்ற உருத்திரர்கள் என்பதுமாம்.

---

பன்னிரண்டாவது எசுர் மந்திரம்.

பாணத்தால் குறியைப் பிளக்கின்ற உருத்திரர்களைப் போற்றுதல்.

नमोऽस्य॑द्भ्यो॒ विध्य॑द्भ्यश्च वो॒ नमः॑ ॥ १५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| अस्यद्भ्यः | குறி வரை பாணத்தை, செலுத்துகின்ற உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| विध्यद्भ्यश्च | குறியைத் துளைக்கின்ற உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

குறிவரை அம்பைச் செலுத்தி, குறியைப் பிளக்கின்ற உருத்திரர்களே ! உங்கட்கு வணக்கம் என்பதாம்.

பகைவர் மீது அம்பை விடுத்து அவர்களுடைய உடலைத் துளைக்கின்ற உருத்திரர்கள் என்பதுமாம்.

பதின்மூன்றாவது எசுர் மந்திரம்.

இருக்கின்ற, படுக்கின்ற உருத்திரர்களைப் போற்றுதல்.

नम आसीनेभ्यः शयानेभ्यश्च वो नमः ॥ १३ ॥

பதவுரை

| | |
|---|---|
| आसीनेभ्यः | உட்கார்ந்து கொண்டிருக்கின்றவர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| शयानेभ्यः | படுத்துக்கொண்டிருக்கின்றவர்களான உருத்திரர்களே ! |
| वः च | உங்கட்கும் |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

பதினான்காவது எசுர் மந்திரம்.

தூங்கியும், விழித்துக் கொண்டுமிருக்கின்ற உருத்திரர்களைப் போற்றுதல்.

नमस्स्वपद्भ्यो जाग्रद्भ्यश्च वो नमः ॥ १४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| स्वपद्भ्यः | தூங்குகின்றவர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| जाग्रद्भ्यश्च | விழித்துக் கொண்டிருக்கின்ற உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

பதினைந்தாவது எசுர் மந்திரம்.

நிற்கின்ற ஓடுகின்ற உருத்திரர்களைப் போற்றுதல்.

नमस्तिष्ठद्भ्यो धावद्भ्यश्च वो नमः ॥ १५ ॥

ஹோமம்)

பதவுரை.

| | |
|---|---|
| तिष्ठद्भ्यः | நிலையாய் நிற்கின்றவர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| धावद्भ्यः च | ஓட்டமாய் ஓடுகின்றவர்களான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

---

பதினாறுவது எசுர் மந்திரம்.

கூட்டமும், கூட்டத் தலைவருமான உருத்திரர்களைப் போற்றுதல்.

नमः॑स्सभाभ्यः॑स्सभाप॑तिभ्यश्च वो नमः॑ ॥ १६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| सभाभ्यः | குழுமியுள்ளவர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| सभापतिभ्यश्च | கூட்டத்திற்குத் தலைவரான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

கூட்டம் என்பது இடங்கட்குத் தலைவன் எனினுமாம்.

இத்துடன் முன்னூற்றுத் தொண்ணூற்றெட்டுப் பதங்கள் முடிந்தன; இதன் முடிவில், 'स्वाहा' என்பதைச் சேர்த்துக்கொண்டு ஹோமம் செய்தல் வேண்டும். இவ்வாறு முதலாவது ஹோமமும் முடிந்தது. இனி இரண்டாம் ஹோம மந்திரத் தொடக்கம்

---

பதினேழாவது எசுர் மந்திரம்.

குதிரைகளும், குதிரைத் தலைவர்களுமான உருத்திரர்களைப் போற்றுதல்.

नमो॒ अश्वे॑भ्योऽश्व॑पतिभ्यश्च वो॒ नमः॑ ॥ १७ ॥

பதவுரை.

| | |
|---|---|
| अश्वेभ्यः | குதிரைகளான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| अश्वपतिभ्यःच | குதிரைகட்குத் தலைவர்களான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

அஶ்வேப்ய: என்பதற்கு, தனமின்றியவர்கள் என்பதும், அஶ்வபதிப்ய: என்பதற்கு தனமுடையவர்கள் என்பதும் பொருளா மென்க.

மூன்றும் அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்.

## நான்காம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக்கொண்டது.

---

மூன்றும் அநுவாகத்தில், இருபக்கமும் வணக்கமுள்ள எசுர் மந்திரங்கள் கூறப்பட்டன. இதில், அவ் வண்ணமான மற்றுஞ் சில மந்திரங்கள் கூறப்படுகின்றன.

தூர்வாசரிஷி, உஷ்ணிக் சந்தம், சம்பு தேவதை.

नम॑ आव्या॒धिनी॑भ्यो वि॒विध्य॑न्तीभ्यश्च वो॒ नमो॒नम॑ उग॑-
णाभ्यस्तृꣳह॒तीभ्य॑श्च वो॒ नमो॒नमो॑ गृ॒त्सेभ्यो॑ गृ॒त्सप॑तिभ्यश्च वो॒ नमो॒
नमो॒ व्रातेभ्यो॒ व्रात॑पतिभ्यश्च वो॒ नमो॒नमो॑ ग॒णेभ्यो॑ ग॒णप॑तिभ्यश्च वो॒
नमो॒नमो॒ विरू॑पेभ्यो वि॒श्वरू॑पेभ्यश्च वो॒ नमो॒नमो॑ मह॒द्भ्यः॑ क्षुल्ल॒के-
भ्य॑श्च वो॒ नमो॒नमो॑ र॒थिभ्योऽर॒थेभ्य॑श्च वो॒ नमो॒नमो॒ रथे॑भ्यः ॥ १ ॥
रथ॑पतिभ्यश्च वो॒ नमो॒नम॒स्सेना॑भ्यस्से॒ना॒निभ्य॑श्च वो॒ नमो॒नमः॑ क्ष॒त्तृ-
भ्य॑स्संग्रही॒तृभ्य॑श्च वो॒ नमो॒नम॒स्तक्ष॑भ्यो रथका॒रेभ्य॑श्च वो॒ नमो॒नमः॒

ஹோமம்).

कुलालेभ्यः कर्मारेभ्यश्चवो नमोनमः पुञ्जिष्टेभ्यो निषादेभ्यश्चवो नमोनमं इषुकृद्भ्यो धन्वकृद्भ्यश्चवो नमोनमो मृगयुभ्यश्श्वनिभ्यश्चवो नमोनमश्श्वभ्यश्श्वपतिभ्यश्चवो नमः ॥ २ ॥

முதலாவது எசுர் மந்திரம்

பெண்கள் வடிவான உருத்திரர்களைப் போற்றல்.

नम आव्याधिनीभ्यो विविध्यन्तीभ्यश्च वो नमः ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| आव्याधिनीभ्यः | நாற்புறமுஞ் சூழ்ந்து கொல்லுகின்ற பெண்கள் வடிவுகொண்ட உருத்திரர்களே! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| विविध्यन्तीभ्यश्च | பல் வேறு வகைகளாகக் கொல்லும் மாதர்களின் உருவுகள் பூண்ட உருத்திரர்களே! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

பெண்பாலார்களாக நின்று கொலைத் தொழில் செய்கின்ற உருத்திரர்களே! உங்கட்கு வணக்கம் என்பதாம்.

இனி, செயல், பொருள் குணங்கட்கு, உருத்திரன் இறைவனாந் தன்மை விளக்கப்படுகின்றது.

நாற்புறமுஞ் சூழ்ந்து கொல்கின்றவர்களும், பல்வேறு வகையாய்க் கொல்கின்றவர்களும் உருத்திரனுடைய சேனைகளாவார்கள். அல்லது, ஒருவகைச் சாதியார்கள் என்பதுமாம்.

இரண்டாவது எசுர் மந்திரம்.

எழு வகை மாதர்கள், துர்க்கை வடிவான உருத்திரர்களைப் போற்றுதல்.

नम उगणाभ्यस्तृꣳहतीभ्यश्च वो नमः ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| (सु)गणाभ्यः | சிறந்த கணங்களையுடைய ஏழு மாதர்களின் உருவுகள் கொண்ட உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| तृंहतीभ्यश्च | கொல்லும் ஆற்றலையுடைய துர்க்கை முதலிய பெண்களின் உருவங்கொண்ட உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

நற்குண நிறைந்த எழுவகை கண மாதர்களும், கொல்லும் ஆற்றல் மிகுந்துள்ள துர்க்கை முதலானவர்களுமாக வுருவுகொண்ட உருத்திரர்களே ! உங்கட்கு வணக்கம் என்பதாம்.

நற்குணமுடைய மாதர்கூட்டமும், சிறந்த கொலைத்தொழிலைச் செய்யு மாதர்களுமான உருத்திரர்கள் என்பதுமாம்.

---

மூன்றுவது எசுர் மந்திரம்.

காமுகர் வடிவான உருத்திரர்களைப் போற்றுதல்.

नमो॑ गृत्सेभ्यो॑ गृत्सप॑तिभ्यश्च वो॒ नमः॑ ॥ ३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| गृत्सेभ्यः | விடயங்களில் பற்றுடையவர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| गृत्सपतिभ्यश्च | காமுகர்களைப் பாதுகாக்கின்ற உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

'க்ருத்ஸேப்ய:' என்பதற்கு அறிவுடன் வாழ்கின்றவர்களின் பொருட்டு என்பதும், 'க்ருத்ஸபதிப்யஸ்ச' என்பதற்கு அத்தகையோர்களின் பாதுகாப்பாளரின் பொருட்டு என்பதும் பொருளாமென்க.

ஹோமம்)

நான்காவது எசுர் மந்திரம்.

பல வகுப்பினராயும் அவர்களின் பாதுகாப்பாளருமான உருத்திரர்களைப் போற்றுதல்

नमो व्रातेभ्यो व्रातपतिभ्यश्च वो नमः ॥ ४ ॥

பதவுரை.

व्रातेभ्यः — பல் வேறு வகைப்பட்ட வகுப்புடையவர்களாயுள்ள உருத்திரர்களே !

(वः) — உங்கட்கு

नमः — வணக்கம் ஆகுக.

व्रातपतिभ्यश्च — பல்வகுப்புக் கூட்டங்கட்குத் தலைவர்களாகவுமுள்ள உருத்திரர்களே !

वः — உங்கட்கு

नमः — வணக்கம் ஆகுக.

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

---

ஐந்தாவது எசுர் மந்திரம்.

नमो गणेभ्यो गणपतिभ्यश्च वो नमः ॥ ५ ॥

பதவுரை.

गणेभ्यः — பூதகணங்களான உருத்திரர்களே !

(वः) — உங்கட்கு

नमः — வணக்கம் ஆகுக.

गणपतिभ्यश्च — பூதகணங்களுக்குப் பாதுகாப்பாளரான உருத்திரர்களே !

वः — உங்கட்கு

नमः — வணக்கம் ஆகுக.

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

---

ஆறாவது எசுர் மந்திரம்.

உருவ வேறுபாடுகளையுடைய உருத்திரர்களைப் போற்றல்.

नमो विरूपेभ्यो विश्वरूपेभ्यश्च वो नमः ॥ ६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| विरूपेभ्यः | கை கால்கள் முதலானவற்றின் அங்கப்பழுதுடைய வர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| विश्वरूपेभ्यः च | பல்வகை உருவங்களை எடுப்பவர்களான உருத்திரர் களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

ஆடையுடுக்காத முண்ட வடிவுகளும், குதிரை முதலான பல்வகை வடிவு களையுமுடைய உருத்திரர்களே ! உங்கட்கு வணக்கம் என்பதாம்.

'விசுவரூப' என்பதற்கு, தனது இச்சையால் பல்வகை வடிவெடுக்கின்ற வர்கள் என்பதும் பொருளாமென்க.

---

ஏழாவது எசுர் மந்திரம்.

பெரியார்களும் சிறியார்களுமான உருத்திரர்களைப் போற்றல்.

नमो महद्भ्यः क्षुल्लकेभ्यश्च वो नमः ॥ ७ ॥

பதவுரை.

| | |
|---|---|
| महद्भ्यः | அணிமா, முதலிய ஐசுவரியங்களைப் பெற்றுள்ள பெரியார்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| क्षुल्लकेभ्यश्च | அத்தகைய ஐசுவரியங்களின்றிய சிறியவர்களான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கும் |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

மகான்களாகவும், சிறியார்களாகவு மிருக்கின்ற உருத்திரர்களே ! உங் கட்கு வணக்கம் என்பதாம்.

ஞானிகளாகவும், அஞ்ஞானிகளாகவுமுள்ள உருத்திரர்களே ! உங்கட்கு வணக்கம் என்பதுமாம்.

ஹோமம்)

எட்டாவது எசுர் மந்திரம்.

தேரை யுடையார்களும் தேர் இலாதவர்களுமான உருத்திரர்களைப் போற்றல்.

नमो रथिभ्योऽरथेभ्यश्च वो नमः ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| रथिभ्यः | இரதத்தின் மீது செல்லுகின்றவர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| अरथेभ्यः च | இரதத்தின் மீது செல்லாதவர்களான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

இதற்கு தேர்மீது செல்கின்றவர்களும், தரையில் நடக்கின்றவர்களும் என்பதும் பொருளாம்.

---

ஒன்பதாவது எசுர் மந்திரம்.

தேர், தேர்த்தலைவர்களான உருத்திரர்களைப் போற்றல்.

नमो रथेभ्यो रथपतिभ्यश्च वो नमः ॥ ९ ॥

பதவுரை.

| | |
|---|---|
| रथेभ्यः | இரதங்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| रथपतिभ्यश्च | இரதங்களின் தலைவர்களான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

'ரதேப்ய:' என்பதற்கு இரதங்களின் அவயவங்கள் என்பதும் பொருளாமென்க.

மறைகள், நான்கும் குதிரைகளாகவும், பிரமன் சாரதியாகவும், விஷ்ணு அம்பாகவும், தேவர்களே இரத வடிவாகவும் அமைந்தது இரதமாம்.

---

பத்தாவது எசுர் மந்திரம்.

சேனை, சேனாபதிகளான உருத்திரர்களைப் போற்றல்.

नमः सेनाभ्यः सेनानिभ्यश्च वो नमः ॥ १० ॥

பதவுரை.

| | |
|---|---|
| सेनाभ्यः | சேனைகளான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |
| सेनानिभ्यश्च | சேனைகளைச் செலுத்துகின்ற தலைவர்களான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

சேனைகளாய் விளையாடுகின்ற உருத்திரர்கள் என்பதுமாம்.

---

பதினோராவது எசுர் மந்திரம்.

இரதத்தை ஓட்டுகின்றவர்களும், நிறுத்துகின்றவர்களுமான உருத்திரர்களைப் போற்றல்.

नमः क्षत्तृभ्यः सङ्ग्रहीतृभ्यश्च वो नमः ॥ ११ ॥

பதவுரை.

| | |
|---|---|
| क्षत्तृभ्यः | தேரைச் செலுத்துகின்ற உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம். |
| संग्रहीतृभ्यश्च | தேரை நிறுத்திக்கொள்ளுகின்றவரான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

'சங்கிரஹீத:' என்பதற்கு குதிரையின் கடிவாளக் கயிறுகளைப் பிடித்துக் கொள்கின்றவர்கள் என்பதுமாம்.

---

பன்னிரண்டாவது எசுர் மந்திரம்.

தச்சர்கள், தேர்ச்செய்வோர்களான உருத்திரர்களைப் போற்றல்.

नमस्तक्षभ्यो रथकारेभ्यश्च वो नमः ॥ १२ ॥

பதவுரை.

| | |
|---|---|
| तक्षभ्यः | தச்சர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம், |
| रथकारेभ्यः च | தேர்ச் செய்கின்றவர்களான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

இங்கு, தேவர்களை யதிட்டித்து நிற்குந் தன்மையால் சில்பிகளுள் ஒரு வகையாரை வணங்கல் என்பதும், அவர்களுட் சிறந்தவன் தேரை நலம் பெறச் செய்கின்றவன் என்பதுமாம்.

---

பதின்மூன்றாவது எசுர் மந்திரம்.

குயவர், கொல்லர்களான உருத்திரர்களைப் போற்றல்.

नमः कुलालेभ्यः कर्मारेभ्यश्च वो नमः ॥ १३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| कुलालेभ्यः | மட்குடம் முதலானவற்றைச் செய்கின்ற குயவர்களான உருத்திரர்களே ! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம். |
| कर्मारेभ्यश्च | இரும்புவேலை செய்கிற கொல்லர்களான உருத்திரர்களே! |

वः உங்கட்கு

नमः வணக்கம்.

### சாயணபாடியக் கருத்து

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

'குலால:' என்பது கு = மண்ணை, லாலயந்தே, அதாவது மண்ணை, குடமுதலிய வடிவாக்குகின்றவன். கர்மார: = பிறரை எதிர்பார்க்காத வேலை செய்கின்றவன். அதாவது இரும்பு வேலை செய்யுங் கொல்லன் என்பதுமாம்.

---

### பதினான்காவது எசுர் மந்திரம்.

வலையர்களான உருத்திரர்களைப் போற்றல்.

नमः पुञ्जिष्टेभ्यो निषादेभ्यश्च वो नमः ॥ १४ ॥

### பதவுரை.

पुञ्जिष्टेभ्यः { பறவைக் கூட்டங்களைக் கொல்கின்ற வலையர்களான உருத்திரர்களே!

(वः) உங்கட்கு

नमः வணக்கம்.

निषादेभ्यः च மீன்களைக் கொல்கின்றவர்களான உருத்திரர்களே!

वः உங்கட்கு

नमः வணக்கம்.

### சாயணபாடியக் கருத்து.

வலை வீசி, பறவைகளையும், மீன்களையும் பிடிக்கின்றவர்களான உருத்திரர்களே! உங்கட்கு வணக்கம் என்பதாம். வேடர், வலையர் என்பவர் இருவகையர்.

---

### பதினைந்தாவது எசுர் மந்திரம்.

அம்பு வில் செய்கின்றவர்களான உருத்திரர்களைப் போற்றல்.

नम इषुकृद्भ्यो धन्वकृद्भ्यश्च वो नमः ॥ १५ ॥

### பதவுரை.

इषुकृद्भ्यः அம்பைச் செய்கின்றவர்களான உருத்திரர்களே!

(वः) உங்கட்கு

नमः வணக்கம்.

| | |
|---|---|
| धन्वकृद्भ्यः च | வில் செய்கின்றவர்களான உருத்திரர்களே! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம். |

**சாயணபாடியக் கருத்து.**

வில்லையும் அம்பையும் நன்கு செய்கின்ற உருத்திரர்களுக்கு வணக்கம் என்பதாம்.

---

### பதினாறுவது எசுர் மந்திரம்.

வேடர், நாய் பிடிப்போர்களான உருத்திரர்களைப் போற்றல்.

नमो मृगयुभ्यः श्वनिभ्यश्च वो नमः ॥ १६ ॥

**பதவுரை.**

| | |
|---|---|
| मृगयुभ्यः | வேட்டையாடுகின்றவர்களான உருத்திரர்களே! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம். |
| श्वनिभ्यश्च | நாய்க்கழுத்தில் கயிற்றைப்போட்டுப் பிடிக்கின்றவர்களான உருத்திரர்களே! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம். |

**சாயணபாடியக் கருத்து.**

வேடர்கள், நாய்க் கழுத்திற் கட்டியுள்ள கயிற்றைப் பிடிக்கின்றவர்கள் என்பவர்களின் வடிவான உருத்திரர்களே! உங்கட்கு வணக்கம் என்பதாம்.

'ம்ருகயு:' என்பவர் = மான் முதலிய விலங்குகளைக் கொல்ல விரும்புகின்றவர். சுவநிகர் = என்பது நாய்களைப் பாதுகாக்கின்றவர் என்பதுமாம்.

---

### பதினேழாவது எசுர் மந்திரம்.

நாய், நாய்த்தலைவர்களான உருத்திரர்களைப் போற்றல்.

नम श्वभ्यः श्वपतिभ्यश्च वो नमः ॥ १७ ॥

**பதவுரை.**

| | |
|---|---|
| श्वभ्यः | நாய்களான உருத்திரர்களே! |
| (वः) | உங்கட்கு |
| नमः | வணக்கம். |

| | |
|---|---|
| श्वपतिभ्यः च | நாய்கட்குத் தலைவரான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம். |

**சாயணபாடியக் கருத்து.**

*நாய்களாகவும், நாய்கட்குப் பாதுகாப்பாளராகவுமுள்ள உருத்திரர்கட்கு வணக்கம் என்பதாம்.*

*ஈண்டு, இரண்டாம் அநுவாகத்தில், திருவிளையாட்டுத் திருமேனி கொண்ட தெய்வம் முக்கியமாகப் போற்றப்பட்டது. மூன்றும் அநுவாகத்தில், கள்வர்களாய்த் திருமேனி கொண்ட உருத்திர பரமேசுரன் முக்கியமாய்த் துதிக்கப் பெற்றுன். நான்காம் அநுவாகத்தில் பல்வேறு வகைப்பட்ட வகுப்பு வடிவை மேற்கொண்ட உருத்திரர்கள் துதிக்கப்பெற்றுர்கள் என்று பகுத்துக் கொள்க என்பதாம்.*

*ஶ்வபதிப்ய:, என்பது, நிலத்தைக் காக்கின்ற என்னும் பொருளையுங் கொண்டதா மென்க.*

*ஈண்டு, மேற் கூறியவைக ளனைத்தும், பல்வேறுவகைகளான அருட் டிரு மேனி கொண்ட உருத்திரர்களை வழிபடும் வெவ்வேறு வகுப்பினர் என்பர் சிலர்.*

நான்காம் அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்.

## ஐந்தாம் அநுவாகம்.

*மகாவிராட்சந்தம், ரிஷி, தேவதை சம்பு.*

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களைக்கொண்டது.

---

வணக்கத்தை முதலிற்கொண்ட எசுர் மந்திரங்கள்.

**नमो भवायच रुद्रायच नमश्शर्वायच पशुपतयेच नमो नील-ग्रीवायच शितिकण्ठायच नमः कपर्दिनेच व्युप्तकेशायच नमस्सहस्राक्षायच शतधन्वनेच नमो गिरिशायच शिपिविष्टायच नमो मीढुष्टमाय चेषुमते च नमो ह्रस्वायच वामनायच नमो बृहतेच वर्षीयसेचनमो वृद्धायच संवृध्वनेच ॥ १ ॥ नमो अग्रि-**

ஹோமம்)

यायच प्रथमायच नमं आशवेचाऽजिरायच नमश्शीघ्रियायच शीभ्यायच नमं ऊर्म्यायचाऽवस्वन्यायच नमस्स्रोतस्यायच द्वीप्यायच ॥ २ ॥

நான்காம் அநுவாகத்தில், முதலிலும் கடையிலும் வணக்கச் சொல்லைக் கொண்ட எசுர் மந்திரங்கள் கூறி முடிந்தன. இதில், முதலிலாவது அல்லது முடிவிலாவது வணக்கச் சொல்லைக் கொண்ட எசுர் மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

முதலாவது எசுர் மந்திரம்.

ஆக்கியழிக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमो भवायच रुद्रायच ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| भवायच | உயிர்களைப் படைக்கும் உருத்திரனுக்கு |
| (नमः) | வணக்கம். |
| रुद्रायच | அழும்படி துன்புறுத்தும் உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

உண்டாக்கித் துடைக்கும் உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

மூன்று அநுவாகங்களால் உலகிற்கு இறைவனாந் தன்மை கொண்டு உருத்திர பரமேசுரன் துதிக்கப் பெற்றனன். இனி, அட்டமூர்த்தங்களின் அதிட்டான வேறுபாடுபற்றி உருத்திர பரமேசுரன் துதிக்கப்படுகின்றான்.

பவ: = என்பது, எப்போதும் உள்ளவன், அல்லது, எல்லாராலும் பாவிக்கப்படுகின்றவன் எனினுமாம். ஈண்டு, பவன் நீரின் அதிட்டானன். உருத்திரன் இரவியின் அதிட்டானன். ஆதலின் அதிட்டானப் பிரகரணம் மீண்டுந் தொடங்கப்படுகின்றதென்பதுமாம்.

---

இரண்டாவது எசுர் மந்திரம்.

பாவத்தைப் போக்கிப் பாதுகாக்கும் உருத்திரனைப் போற்றல்.

नमः शर्वायच पशुपतयेच ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| शर्वाय च | பாவத்தைப் போக்குகின்ற உருத்திரனுக்கு |
| (नमः) | வணக்கம். |
| पशुपतये च | பசுக்கள் போன்ற உயிர்கட்கு இறைவனாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

பாவங்களிலிருந்து பாதுகாக்கின்றவனும், விலங்கொத்த உயிர்களைப் பாதுகாக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

முடிவில் அனைத்தையும் அழிக்கின்றவன் சர்வன், இவனே, திக்கு அதிட்டானன். விலங்குகளைப் பாதுகாக்கின்றவன் பசுபதி, இவனே, நிலத்திற்கு அதிட்டானன் என்பதுமாம்.

மூன்றாவது எசுர் மந்திரம்.

கருமை வெண்மைகளையுடைய கழுத்துள்ள உருத்திரர்களைப் போற்றல்.

नमो नीलग्रीवायच शितिकण्ठायच ॥ ३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| नीलग्रीवाय च | கழுத்திற் கரியநிறமுள்ள உருத்திரனுக்கும் |
| शितिकण्ठायच | கழுத்தில் வெண்மைநிறமுடைய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

காளகூட விடத்தை அடக்கி வைத்ததால் கருநிறத்தையும், அவ் விடம் படாத விடத்தில் வெண்மை நிறமுமுடைய கழுத்தோடுகூடிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

உருத்திரனுடைய கழுத்து, காளகூட விடத்தினால் ஆயிரம் பங்கு கறுத்து விட்டது. அல்லது, அன்பின் பொருட்டு மீண்டும் நீலக்ரீவாய என்பதுமாம்.

நான்காவது எசுர் மந்திரம்

சடாதாரியும் மொட்டையனுமாகிய உருத்திரனைப் போற்றல்.

नमः॑ कप॒र्दिने॑च॒ व्यु॑प्तकेशायच ॥ ४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| कपर्दिनेच | முறுக்கு விழுந்த சடையையுடைய உருத்திரனுக்கும் |
| व्युप्तकेशायच | மொட்டையடித்த உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*பாசுபத முதலிய திருவேடத்தால் சடை முடிச்சையும், எதிவேடத்தால் மொட்டையுமாகிய உருத்திரனுக்கும் வணக்கம் என்பதாம்.*

*வ்யுப்த கேசன் = என்பதற்கு, எசமானன், பாதித்தலையன், மொட்டையன் என்பர் சிலர்.*

---

ஐந்தாவது எசுர் மந்திரம்.

இந்திர வடிவ உருத்திரனைப் போற்றுதல்.

नमः॑ सहस्रा॒क्षाय॑च श॒तध॑न्वनेच ॥ ५ ॥

பதவுரை

| | |
|---|---|
| सहस्राक्षायच | ஆயிரங் கண்களையுடைய உருத்திரனுக்கும் |
| शतधन्वनेच | நூற்றுக்கணக்கான வில்லுகளை யுடைய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*இந்திரத் திருமேனியெடுத்ததால் ஆயிரங் கண்களையும், நூறு கரங்கொண்ட அவதாரத்தில் நூற்றுக் கணக்கான வில்லுகளையுமுடைய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*சஹஸ்ராக்ஷம் = எண்ணிறந்த கண், சததந்வ: = எண்ணிறந்த வில்லுகள் என்பதுமாம்.*

---

ஆறாவது எசுர் மந்திரம்.

மலையில் வாழ்கின்ற விஷ்ணுவாகிய உருத்திரர்களைப் போற்றுதல்,

नमो॑ गि॒रि॒शाय॑च शिपिवि॒ष्टाय॑च ॥ ६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| गिरिशायच | மலையில் வீற்றிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| शिपिविष्टायच | விஷ்ணுவின் திருமேனிதாங்கிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*கைலையங்கிரிவாசனும், திருமாலின் திருமேனி கொண்டவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*சிபிவிஷ்ட: = இரவிவடிவன், அல்லது, உயிர்களிடத்து உள்ளே நின்று இயக்குகின்றவன் என்பதுமாம்.*



ஏழாவது எசுர் மந்திரம்.

மழை பெய்விப்பவனும் அம்பை யேந்தியவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம்.

नमो मीढुष्टमाय चेषुमतेच ॥ ७ ॥

பதவுரை.

| | |
|---|---|
| मीढुष्टमायच | மிகுந்த மழையைப் பொழிவிக்கின்ற உருத்திரனுக்கும் |
| इषुमतेच | அம்பை ஏந்திய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*மேகமாய் மழை பெய்விக்கின்றவனும், பாணத்தைத் தாங்குகின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*இழுமதேச = என்பதற்கு, மிகுந்த சூரன் என்பதும் பொருளாமென்க.*

ஏட்டாவது எசுர் மந்திரம்.

குட்டையனும் கூழையனுமாகிய உருத்திரனைப் போற்றல்.

नमो ह्रस्वायच वामनायच ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| ह्रस्वायच | குறுகிய திருமேனியையுடைய உருத்திரனுக்கும் |
| वामनायच | குறைந்த அவயவங்களையுடைய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

ஹோமம்)

சாயணபாடியக் கருத்து.

குறுகிய திருமேனியுடையவனும், குறைந்த விரல்கள் முதலான அவயவங்களையுடையவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

---

ஒன்பதாவது எசுர் மந்திரம்.

பெருத்தவனும் குணநிறைந்தவனுமாகிய உருத்திரனைப் போற்றுதல்.

नमो॑ बृह॒ते च॒ वर्षी॑यसे च ॥ ९ ॥

பதவுரை.

| | |
|---|---|
| बृहतेच | பருமனாகிய உருத்திரனுக்கும் |
| वर्षीयसेच | நற்குணம் நிறைந்த உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

உருவத்தாற் பருத்தவனும், குணங்களால் நிறைந்தவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

வர்ஷீயஸே, என்பதற்கு, வடிவத்தால் மிகப் பருத்தவன், அல்லது ஞானம் முதலியவைகளாற் பெரியவன் என்பதுமாம்.

---

பத்தாவது எசுர் மந்திரம்.

மூத்தோனாகிய உருத்திரனைப் போற்றல்.

नमो॑ वृ॒द्धाय॑ च सं॒वृध्व॑ने च ॥ १० ॥

பதவுரை.

| | |
|---|---|
| वृद्धायच | மூப்புத்தன்மையுடைய உருத்திரனுக்கும் |
| संवृध्वनेच | துதிகளால் பெரியோனாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

வயதால் முதிர்ந்தவனும், துதியால் பெரியவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'சம்வ்ருத்வனே' என்பதற்கு, அன்பர்களைப் பெரியோராக்குகின்றவன் எனினும் அமையுமென்க.

பதினோராவது எசுர் மந்திரம்.

முந்தி முதலிலிருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमो अग्रियायच प्रथमाय च ॥ ११ ॥

பதவுரை.

| | |
|---|---|
| अग्रियायच | முன்னர் இருக்கின்றவனும் |
| प्रथमायच | முக்கியனு யிருக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

உலகந் தோற்றுமுன் உள்ளவனும், அவையின்கண் தலைவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

---

பன்னிரண்டாவது எசுர் மந்திரம்.

வியாபித்தவனும், விரைவிற் செல்கின்றவனுமாகிய உருத்திரனைப் போற்றல்.

नम आशवेचाऽजिरायच ॥ १२ ॥

பதவுரை.

| | |
|---|---|
| आशवेच | எங்கும் கலந்திருக்கின்ற உருத்திரனுக்கும் |
| अजिरायच | வேகமாய் நடக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

---

பதின்மூன்றாவது எசுர் மந்திரம்.

நீருக்கிறைவனுகிய உருத்திரனைப் போற்றுதல்.

नमश्शीघ्रियायच शीभ्यायच ॥ १३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| शीघ्रियायच | வேகமாய் ஓடும் நீரில் இருக்கிற உருத்திரனுக்கும் |
| शीभ्यायच | மெல்ல ஓடும் நீரிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.*

---

பதினான்காவது எசுர் மந்திரம்.

இதுவுமது.

नम ऊर्म्याय चाऽवस्वन्याय च ॥ १४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| ऊर्म्याय च | *அலைகளில் இருக்கின்ற உருத்திரனுக்கும்* |
| अवस्वन्याय च | *இரைச்சலின்றிக் கிடக்கும் நீரிலுள்ள உருத்திரனுக்கும்* |
| नमः | *வணக்கம்.* |

சாயணபாடியக் கருத்து.

*இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.*

---

பதினைந்தாவது எசுர் மந்திரம்.

இதுவுமது.

नमः स्रोतस्याय च द्वीप्याय च ॥ १५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| स्रोतस्याय च | *நீரோட்டத்திலிருக்கின்ற உருத்திரனுக்கும்* |
| द्वीप्याय च | *நீரின் நடுத்திட்டிலிருக்கின்ற உருத்திரனுக்கும்* |
| नमः | *வணக்கம்.* |

சாயணபாடியக் கருத்து.

*இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.*

*இங்கு, இருபுறத்தும் நீர் ஓடும்போது அதன் நடுவிலுள்ள மேட்டுப்பூமி துவீபம் எனப்படும்.*

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஐந்தாவது பிரபாடகம்

## ஆறும் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

*ஐந்தாம் அநுவாகத்தில், முதலிலாவது முடிவிலாவது வணக்கமுள்ள சில எசுர் மந்திரங்கள் கூறப் பெற்றன. இதில், அத்தகைய ஏனைய சில எசுர் மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

नमो ज्येष्ठायच कनिष्ठायच नमः पूर्वजाय चाऽपरजायच
नमो मध्यमाय चाऽपगल्भायच नमो जघन्यायच बुध्नियायच नम-
स्सोभ्यायच प्रतिसर्यायच नमो याम्याय क्षेम्यायच नम उर्व-
र्यायच खल्यायच नमश्श्लोक्यायच चाऽवसान्यायच नमोवन्यायच
कक्ष्यायच नमश्श्रवायच प्रतिश्रवायच ॥ १ ॥ नम आशुषेणाय-
चाशुरथायच नमश्शूरायचाऽवभिन्दतेच नमो वर्मिणेच वरूथिनेच
नमो बिल्मिनेच कवचिनेच नमश्श्रुतायच श्रुतसेनायच ॥ २ ॥

---

### முதலாவது எசுர் மந்திரம்.

பெரியோனும் சிறியோனுமாகிய உருத்திரனைப் போற்றல்.

नमो ज्येष्ठायच कनिष्ठायच ॥ १ ॥

### பதவுரை.

| | |
|---|---|
| ज्येष्ठायच | உணர்வு திரு மிகுந்தவனாகிய உருத்திரனுக்கும் |
| कनिष्ठायच | உணர்வு முதலியவைகள் இன்றியவனாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

### சாயணபாடியக் கருத்து.

*இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.*

*ஜ்யேஷ்டன் = மிகப் புகழுடையவன், கனிஷ்டன் = சிறிது புகழுடையவன் எனலுமாம்.*

---

இரண்டாவது எசுர் மந்திரம்.

உலக முன்னும் பின்னும் உண்டான உருத்திரனைப் போற்றல்.

नमः पूर्वजाय चाऽपरजायच ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| **पूर्वजायच** | உலக முதலில் உண்டாகிய உருத்திரனுக்கும் |
| **अपरजायच** | உலகின் முடிவில் உண்டாகிய உருத்திரனுக்கும் |
| **नमः** | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*உலகமுதிக்கும்போது முதலில் இரணிய கருப்பன் (பிரமன்) வடிவாய்த் தோன்றியவனும், உலக முடிவில் காலாக்கினி முதலிய வடிவா யுதிக்கின்றவனு மாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*ஈண்டுத் தோற்றம் என்பது முன் இருப்புத் தன்மை ஆதலின், பூர்வ ஜாய, என்பது, உலகந் தோன்றுமுன் உள்ளவன் என்பதும்; அபரஜாய, என்பது உலகந் தோன்றிய பிறகும் உள்ளவன் என்பதும் பொருளா மென்க.*

---

மூன்றாவது எசுர் மந்திரம்.

நடுக் காலத்தில் உண்டாகியநுளும் உருத்திரனைப் போற்றல்.

नमो मध्यमायचाऽपगल्भायच ॥ ३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| **मध्यमायच** | இடைப்போதிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| **अपगल्भायच** | பச்சைக் குழந்தை வடிவாகிய உருத்திரனுக்கும் |
| **नमः** | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*மத்திய காலத்தில், தேவர்களாகவும், பறவை முதலிய உயிர்களாகவும், மிகுந்த இளங் குழந்தையாகவுந் தோன்றும் உருத்திரனுக்கு வணக்கம் என்ப தாம்.*

நான்காவது எசுர் மந்திரம்.

பிறப்பு வடிவாகிய உருத்திரனைப் போற்றல்.

नमो जघन्यायच बुध्नियायच ॥ ४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| जघन्यायच | பின்புறத்திலுதிக்கின்ற உருத்திரனுக்கும் |
| बुध्नियायच | அடிவேரிற் றோன்றுகின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*பசு முதலியவைகளின் பின்பக்கத்திற் பிறக்கின்ற கன்று முதலியவைகளும், வேர் முதலியவைகளில் முளைக்கும் முளை முதலியவைகளுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

---

ஐந்தாவது எசுர் மந்திரம்.

உலகமாகிய உருத்திரனைப் போற்றுதல்.

नमः॑ सो॒भ्या॑यच प्रतिस॒र्या॑यच ॥ ५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| सोभ्यायच | மண்ணுலகாய்த்தோன்றிய உருத்திரனுக்கும் |
| प्रतिसर्यायच | கட்டும், காப்புவடிவாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*புண்ணிய பாவங்கள் என்னும் இரண்டினுலாய மண்ணுலக வடிவும், திருமண முதலியவைகளில் கையிற் கட்டுங் காப்பு வடிவுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*'சோப்யம்' என்பது, கந்தருவ நகரம் 'சல்லியன் சோபத்தை யதிட்டித்து' என்று பாரதங் கூறுதலின் என்க. இதனுல், உபலக்கணமாய் எல்லா நகரமுங் கொள்ளப்படுகின்றன. குளிர் வெய்யில் என்னும் இரண்டுடன் கூடியது சோப்யம் என்பர் சிலர்.*

---

ஆறுவது எசுர் மந்திரம்.

பாவியைத் தண்டிக்கும் உருத்திரனைப் போற்றுதல்.

नमो॒ याम्या॑यच क्षेम्या॑यच ॥ ६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| याम्यायच | பாவஞ் செய்தோரை வாட்டுவோனுகிய உருத்திரனுக்கும் |
| क्षेम्यायच | முத்தியளித்தற் குரியவனுகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

யாம்யம் = உயிர் நீங்கிப் போதல், அல்லது, எமபுரம்; அதில் இருக்கின்றவன் என்பதும். க்ஷேம்யம் = பாதுகாப்பு என்பதுமாம்.

---

ஏழாவது எசுர் மந்திரம்.

பயிர் நிலமாகிய உருத்திரனைப் போற்றல்.

नम॑ उर्व॒र्या॑यच॒ खल्या॑यच ॥ ७ ॥

பதவுரை.

| | |
|---|---|
| उर्वर्यायच | நல்ல பயிருடைய நிலத்தில் விளைந்திருக்கின்ற உருத்திரனுக்கும் |
| खल्यायच | களம், என்னும் இடத்தில் நெற்குவியலாக யிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

தானிய விசேடமாயும், நெல் முதலியவற்றின் குவியல் வடிவாயு மிருக்கின்ற உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

---

எட்டாவது எசுர் மந்திரம்.

சுலோகப் பொருளாகிய உருத்திரனைப் போற்றல்.

नमः॒ श्लोक्या॑यचाऽवसा॒न्या॑यच ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| श्लोक्यायच | வேதமந்திரத்தின் பொருளாயிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| अवसान्यायच | வேதமுடிவிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

வைதிக மந்திரத்தால் எடுத்துக் கூறப்பெற்றவனும், வேதத்தின் முடிவில் (உபநிடதத்தில்) இருக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

எழுத்துக்களின் கூட்டம் சுலோகம், அதில் இருப்பவன் சுலோக்யன். எல்லாப் பொருள்களும் முடியுமிடம் அவசானம், அதிலிருக்கின்றவன் அவ

சானன். அலோகம் வேதமென்றும், அவசானம் உபநிடதமென்றும் பொருள் கொள்வர் சிலர்.

---

ஒன்பதாவது எசுர் மந்திரம்.

தரு கோடி வடிவாகிய உருத்திரனைப் போற்றல்,

नमो वन्याय च कक्ष्याय च ॥ ९ ॥

பதவுரை.

| | |
|---|---|
| वन्यायच | வனத்தின் தருக்களாயிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| कक्ष्यायच | கொடி முதலியவைகளாக இருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

இது பூமியின் அதிட்டானத்தின் வேறுபாடெனலுமாம்.

---

பத்தாவது எசுர் மந்திரம்.

ஒலி வடிவாகிய உருத்திரனைப் போற்றல்.

नमः श्रवाय च प्रतिश्रवाय च ॥ १० ॥

பதவுரை.

| | |
|---|---|
| श्रवायच | சத்தவடிவாகிய உருத்திரனுக்கும் |
| प्रतिश्रवायच | பிரதித்தொனிவடிவாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

ச்ரவாய, என்பதனால், எங்குங் கீர்த்தியுள்ளவன் எனினும் அமையுமென்க.

---

பதினோராவது எசுர் மந்திரம்.

வேகமாகிய சேனை தேர்களையுடைய உருத்திரனைப் போற்றல்.

नम आशुषेणाय चाऽऽशुरथाय च ॥ ११ ॥

ஹோமம்)

பதவுரை.

| | |
|---|---|
| आशुषेणायच | விரைவிற் செல்லும் சேனைகளாகிய உருத்திரனுக்கும் |
| आशुरथायच | வேகமாய் ஓடும் தேராகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

---

பன்னிரண்டாவது எசுர் மந்திரம்.

மிகச்சூரனாகிய உருத்திரனுக்கு வணக்கஞ் செய்தல்.

नमः शूराय चाऽवभिन्दते च ॥ १२ ॥

பதவுரை.

| | |
|---|---|
| शूरायच | போர்வீரனாகிய உருத்திரனுக்கும் |
| अवभिन्दतेच | பகைவரைக் கொல்லுகின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

தனது அன்பரின் பகைவரை அழிக்கின்றவன், அல்லது, தருமத்தைக் கெடுப்போனைத் தொலைக்கின்றவன் 'அபிந்தத்' என்பதன் பொருளாமெனினுமாம்.

---

பதின்மூன்றாவது எசுர் மந்திரம்.

சட்டையையுடைய உருத்திரனைப் போற்றல்.

नमो वर्मिणे च वरूथिने च ॥ १३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| वर्मिणेच | சட்டை (சொக்காய்) உடுத்திருக்கின்ற உருத்திரனுக்கும் |
| वरूथिनेच | வீட்டையுடைய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

'வரூதினே' என்பது தேர்ப்பாகனுடைய இரகசிய வீடாம், அல்லது சிறந்த வீடாம், அதையுடையவன் என்பதுமாம்.

---

பதினான்காவது எசுர் மந்திரம்.

தலைமுடியையும் கவசத்தையுமுடைய உருத்திரனைப் போற்றல்.

नमो बिल्मिने च कवचिने च ॥ १४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| बिल्मिनेच | துளையோடுள்ள தலைமுடியாகிய உருத்திரனுக்கும் |
| कवचिनेच | உடம்பைப் பாதுகாக்குங் கவசமாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

கால்வரையு முடுத்துக் கொள்கின்ற சட்டையுங் கவசமெனப்படுமென்க.

---

பதினைந்தாவது எசுர் மந்திரம்.

வேதப் பிரசித்தனாகிய உருத்திரனைப் போற்றல்.

नमः श्रुताय च श्रुतसेनाय च ॥ १५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| श्रुतायच | வேதங்களில் மிக வெளிப்படையாகிய உருத்திரனுக்கும் |
| श्रुतसेनायच | கீர்த்தியுள்ள சேனையாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

கீர்த்தியுடைய, அல்லது, சுருதியிற் பிரசித்தன் என்பதும் கீர்த்தியுடைய சேனை, அல்லது சுருதியிற் பிரசித்தமாகிய சேனை என்பதும் பொருளாமென்க.

ஆறும் அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்.

## ஏழாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் முப்பது பதங்களைக் கொண்டது.

*மகாபங்க்திச் சந்தம், ஹோமகேசரிஷி, உருத்திரன் தேவதை.*

---

*ஆறுவது அநுவாகத்திற் கூறப்பட்ட, ஒருபாகத்தில் வணக்கச் சொல்லுடைய எசுர் மந்திரங்களுள்எஞ்சிய எசுர் மந்திரங்கள் இதில் கூறப்படுகின்றன,*

नमो दुंदुभ्यायचाऽऽहनन्यायच नमो धृष्णवेच प्रमृशायच नमो दूतायच प्रहितायच नमो निषङ्गिणेचेषुधिमतेच नमस्तीक्ष्णेषवेचाऽऽयुधिनेच नमस्स्वायुधायच सुधन्वनेच नमस्स्रुत्यायच पथ्यायच नमः काट्यायच नीप्यायच नमस्सूद्यायच सरस्यायच नमो नाद्यायच वैशन्तायच ॥ १ ॥ नमः कूप्यायचाऽवट्यायच नमो वर्ष्यायचाऽवर्ष्यायच नमो मेघ्यायच विद्युत्यायच नम ईध्रियायचाऽऽतप्यायच नमो वात्यायच रेष्मियायच नमो वास्तव्यायच वास्तुपायच ॥ २ ॥

---

முதலாவது எசுர் மந்திரம்.

வாத்திய வொலியாகிய உருத்திரனைப் போற்றல்.

नमो दुंदुभ्यायचाऽऽहनन्यायच ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| दुंदुभ्यायच | *பேரிகை ஒலியாகிய உருத்திரனுக்கும்* |
| आहनन्यायच | *பேரிகையை அடிக்கும் மூங்கில் கழியாகிய உருத்திரனுக்கும்* |
| नमः | *வணக்கம்.* |

சாயணபாடியக் கருத்து.

*இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.*

துந்துப்யாய, என்பதற்கு, மிகுந்த வைபவமுடையவன் என்பதும் பொருளாமென்க.

---

இரண்டாவது எசுர் மந்திரம்.

போரிற் புறங்காட்டாத உருத்திரனைப் போற்றல்.

नमो॑ धृष्णवे॑च प्रमृशाय॑च ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| धृष्णवेच | போரில் புறங்காட்டி ஓடாதவனாகிய உருத்திரனுக்கும் |
| प्रमृशायच | பகைவனுடைய சேனையை இனிது ஆராய்ந்துணர்கின்றவனாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

போரிடும்போது பின்வாங்கி ஓடாதவனும், எதிரியின் சைன்யத்திலுள்ள ஆற்றல் ஆற்றலிலாமையை நன்கு யூகித்துணர்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'பிரம்ருஶாய' என்பதற்கு, அனைத்தையும் ஆராய்ந்துணர்கின்றவன் எனவும், 'திருஷ்ணவே' என்பதற்கு, நிலைக்குந் தன்மையுடையவன், அல்லது, உலகைப் பாதுகாப்பதில் வல்லுநன் எனவும் பொருளாமென்க.

---

மூன்றாவது எசுர் மந்திரம்.

ஏவுகின்றவனும் தூதுவனுமாகிய உருத்திரனைப் போற்றல்.

नमो॑ दूताय॑च प्रहि॑तायच ॥ ३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| दूतायच | செய்தியை அறிவுறுத்துகின்றவனாகிய உருத்திரனுக்கும் |
| प्रहितायच | ஏவப்படுகின்றவனாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

ஓரிடத்தில் நடந்த செயலை மற்றோரிடத்தில் தெரிவிக்கின்றவனும், ஒரு தலைவனால் ஏவப் பெற்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

இங்கு விரிப்பதிலென்? தூது சென்றேனும் அன்பர்களைப் பாதுகாத்தருள்வன் எனக் கூறப்படுகின்றது.

ஹோமம்)

தூதுவன் என்பதனால், அக்கினி வடிவாய், தேவர்கட்கு அவியைப்பற்றிச் சொல்லுதல், கொண்டு போதல் முதலிய தூதுவற்றொழில் செய்கின்றவன் என்பதும்; பிரஹித:, என்பதனால், வேள்வித்தலைவனுடைய கருத்தை தேவர்கட்குத் தெரிவிப்பவன், அல்லது மிக நன்மையைச் செய்கின்றவன் என்பதும் பொருளாமென்க.

---

நான்காவது எசுர் மந்திரம்

பாதுகாப்பின் பொருட்டு ஆயுத மேந்திய உருத்திரனைப் போற்றல்,

नमो निषङ्गिणे चेषुधिमतेच ॥ ४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| निषङ्गिणेच | வாளேந்திக்கொண்டிருக்கும் உருத்திரனுக்கும் |
| इषुधिमतेच | அம்பறாத்தூணியையுடைய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

இம் மந்திரத்திற்கு முன், கள்வரைப்பற்றிய பொருள்வகை கூறப்பட்டது; இப்போது, ஆயுதத்தால், அன்பரைப் பாதுகாக்கும் நிமித்தவகை கூறப்படுகின்றது.

---

ஐந்தாவது எசுர் மந்திரம்.

கூரிய அம்பையுடைய உருத்திரனைப் போற்றல்.

नमस्तीक्ष्णेषवे चाऽऽयुधिनेच ॥ ५ ॥

பதவுரை

| | |
|---|---|
| तीक्ष्णेषवेच | கூரிய பாணத்தையுடைய உருத்திரனுக்கும் |
| आयुधिनेच | பல்வேறு வகைப்பட்ட ஆயுதங்களையுடைய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

---

ஆறாவது எசுர் மந்திரம்.

திரிசூல மேந்திய உருத்திரனைப் போற்றல்.

नमः स्वायुधायच सुधन्वनेच ॥ ६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| स्वायुधायच | அழகிய ஆயுதமேந்திய உருத்திரனுக்கும் |
| सुधन्वनेच | அழகிய வில்லையுடைய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

திரிசூலத்தையும், 'பினாகம்' என்னும் வில்லையும் ஏந்திய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'சுவாயுதம்' என்பதற்கு, விஞ்ஞாத ஆயுதம் எனவும், அல்லது அழகிய வடிவுடைய ஆயுதம், அல்லது, பொன்வில் என்பதும் பொருளாமென்க.

---

ஏழாவது எசுர் மந்திரம்.

சிறியவழி பெரியவழிகளிற் செல்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमः स्रुत्यायच पथ्यायच ॥ ७ ॥

பதவுரை.

| | |
|---|---|
| स्रुत्यायच | ஓரடிப்பாதையிற் செல்கின்றவனும் |
| पथ्यायच | பெரும்பாதையிற் செல்கின்றவனுமாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

ஒருவன் அடிவைத்து நடக்கத்தக்க இடங்கொண்ட மார்க்கத்திற் செலகின்றவனும், தேர், குதிரை முதலானவைகள் செல்லுதற்குரிய இடமுடைய மார்க்கத்திற் செல்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

இது ஏவற் செயலாளர்கள் விடயமாய்க் கூறப்படுகின்றதென்பதுமாம்.

---

எட்டாவது எசுர் மந்திரம்.

ஓடு நீர் வடிவாகிய உருத்திரனைப் போற்றல்.

नमः काट्यायच नीप्यायच ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| काट्यायच | சிறிய கால்வாயில் ஓடும் தண்ணீராகிய உருத்திரனுக்கும் |
| नीप्यायच | அருவிநீராகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

ஹோமம்)

சாயணபாடியக் கருத்து.

சிறிய கால்வாயிலும், மலையிலிருந்து தலைகீழாய் விழுமிடத்திலும் உள்ள நீராகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'காட்யாயச' என்பதற்கு, கிணற்றுநீர், அல்லது, சிறிய நீரோட்டத்திலுள்ள சில சாந்நித்தியமுடைய இலிங்கம் என்பதும் பொருளாமென்க.

---

ஒன்பதாவது எசுர் மந்திரம்.

வற்றுதநீர் வடிவாகிய உருத்திரனைப் போற்றல்

नमः सूद्यायच सरस्यायच ॥ ९ ॥

பதவுரை.

| | |
|---|---|
| सूद्यायच | மடுவிலுள்ள நீராகிய உருத்திரனுக்கும் |
| सरस्यायच | வெளிப்படையான நீராகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

---

பத்தாவது எசுர் மந்திரம்.

இதுவுமது.

नमो नाद्यायच वैशन्तायच ॥ १० ॥

பதவுரை.

| | |
|---|---|
| नाद्यायच | ஆற்று நீராகிய உருத்திரனுக்கும் |
| वैशन्तायच | குளத்து நீராகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

'நாத்ய:' என்பதற்கு, நாதத்திலுண்டாகின்றவன் என்வும் பொருளாமென்க.

---

பதினோராவது எசுர் மந்திரம்.

கிணற்று நீர் வடிவாகிய உருத்திரனைப் போற்றல்.

नमः कूप्यायचाऽवट्यायच ॥ ११ ॥

பதவுரை.

| | |
|---|---|
| कूप्यायच | கிணற்று நீராகிய உருத்திரனுக்கும் |
| अवट्यायच | மடு நீர் வடிவாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

பன்னிரண்டாவது எசுர் மந்திரம்.

மழைநீராகிய உருத்திரனைப் போற்றல்.

नमो वर्ष्यायचाऽवर्ष्यायच ॥ १२ ॥

பதவுரை.

| | |
|---|---|
| वर्ष्यायच | மழைநீராகிய உருத்திரனுக்கும் |
| अवर्ष्यायच | மழையின்றியுமுள்ள கடல் நீராகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

மழையில்லாதாறும் கடல் நீராக இருக்கின்ற உருத்திரன் என்பர் சிலர்.

பதின்மூன்றாவது எசுர் மந்திரம்.

மேகங்கள் முதலியவற்றில் இருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमो मेघ्यायच विद्युत्यायच ॥ १३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| मेघ्यायच | மேகங்களில் இருக்கின்ற உருத்திரனுக்கும் |
| विद्युत्यायच | மின்னலுடன்கூட இருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

பதினான்காவது எசுர் மந்திரம்.

மாசிலாத, வானாகிய உருத்திரனைப் போற்றல்.

नमं ईध्रियायचाऽऽतप्यायच ॥ १४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| **ईध्रियायच** | குற்றமின்றி விளங்கும் ஆகாயமாய் ஒளிர்வோனாகிய உருத்திரனுக்கும் |
| **आतप्यायच** | வெயிலிற் பெய்யும் மழையா யிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| **नमः** | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

வெந்நீரில் இருக்கின்ற உருத்திரன் எனினும் அமையுமென்க.

பதினைந்தாவது எசுர் மந்திரம்.

காற்று மழை வடிவாகிப உருத்திரனைப் போற்றல்.

नमो वात्यायच रेष्मियायच ॥ १५ ॥

பதவுரை

| | |
|---|---|
| **वात्यायच** | காற்றுடன் கூடப் பெய்யும் மழையாகிய உருத்திரனுக்கும் |
| **रेष्मियायच** | கல்மாரியாகிய உருத்திரனுக்கும் |
| **नमः** | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

பிரளய காலத்தில் உயிர்களை யழிக்கத்தக்க சுக்கான் கல்லுடன் கூடிய மழையாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

'ரேஷ்மி' என்பதற்கு, மிகுந்த வேனிற்கால மென்பார் சிலர். மற்றுஞ் சிலர், காற்றெடுத்து வீசும் மண்ணென்பர்.

பதினாறாவது எசுர் மந்திரம்.

சில, பொருளாகிய உருத்திரனைப் போற்றல்.

नमो वास्तव्यायच वास्तुपायच ॥ १६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| वास्तव्यायच | பசுமுதலிய பொருள்களின் உண்மைவடிவாகிய உருத்திரனுக்கும் |
| वास्तुपायच | மனைபோடுவதிலுள்ள வாஸ்து புருடனைப் பாது காக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

ஆக்கள் முதலான வத்துக்களின் அவ்வக் காரியங்களில் உண்மை வடிவானவனுக்கும், மனை யமைத்தற்குச் சீர்திருத்தப் பெற்ற நிலத்தின் வாஸ்துவைப் பாதுகாக்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

ஏழாம் அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஐந்தாவது பிரபாடகம்

## எட்டாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் முப்பது பதங்களைக் கொண்டது.

மகாநுஷ்டுப்ச் சந்தம், ரிஷி பரமேசுரனே, தேவதையும் உருத்திர பரமேசுரனே.

---

ஏழாவது அநுவாகத்தில் ஒருபாகத்தில் வணக்கச் சொல்லைக் கொண்ட எசுர் மந்திரங்கள் கூறப்பட்டன. அவைகளின்றும் வேறான அத்தகைய சில எசுர் மந்திரங்கள் இதிற் கூறப்படுகின்றன.

नमस्सोमायच रुद्रायचनमस्ताम्रायचाऽरुणायच नमश्शङ्गायच पशुपतयेच नम उग्रायच भीमायच नमो अग्रे वधायच दूरे वधायच नमो हन्त्रेच हनीयसेच नमो वृक्षेभ्यो हरिकेशेभ्यो नमस्ताराय नमश्शम्भवेच मयो भवेच नमश्शङ्करायच मयस्करायच नमश्शिवायच शिवतरायच ॥ १ ॥ नमस्तीर्थ्यायच कूल्यायच नमः पार्यायचाऽवार्यायच नमः प्रतरणायचोत्तरणायच नम आतार्यायचाऽऽलाद्यायच नमश्शष्प्यायच फेन्यायच नमस्सिकत्यायच प्रवाह्यायच ॥ २ ॥

மேலேயுள்ள பதினேழு எசுர் மந்திரங்களுள்

முதலாவது எசுர் மந்திரம்.

சோமனாகிய உருத்திரனைப் போற்றல்,

नमः सोमा॑यच रु॒द्राय॑च ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| सोमायच | உமையுடன் கூடிய உருத்திரனுக்கும் |
| रुद्रायच | துன்ப காரணத்தை நீக்குகின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம், |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

மீண்டும், உருத்திரன், பசுபதி என்பது முதலிய சொற்களாற் போற்றுதல் உருத்திரனுடைய அருட்டிருமேனியை விளக்கலாம். 'சோமாய' என்பதற்கு, அருள் செய்யுந் தருணம் உமையாளொடு எழுந்தருள்வன் என்பது கருத்து. மற்றும், சந்திரவடிவன், அல்லது, சோமயாக வடிவன் என்பவைகளும் பொருளாம். 'ருத்ர:' என்பதால், உலகை யழித்தலும் ஒருவகை அருள் செய்தலாம், என்னை? குடும்பத் துன்பங்கள் தணிந்து கிடத்தற்கு மகாசங்காரங் காரணமாதலின் என்க.

---

இரண்டாவது எசுர் மந்திரம்.

இரவியாய் அருள்செய்யும் உருத்திரனைப் போற்றல்,

नम॑स्ताम्राय॑चाऽरु॒णाय॑च ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| ताम्रायच | உதயத்தில் மிகச் சிவப்பு நிறமுடைய சூரியனாகிய உருத்திரனுக்கும் |
| अरुणायच | உதிப்பதன் முன் சிறிது சிவப்பு நிறமுடைய சூரிய வடிவ உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

இரவியைப்பற்றி முன் கூறப்பட்டது. ஈண்டு, விழிப்பித்தல் முதலியவைகளால் உலகிற்கு, சூரியன் அருள் செய்கின்றான் என்பது கொள்ளக்கிடந்தமை காண்க.

மூன்றாவது எசுர் மந்திரம்.
இன்பத்தைத் தரும் உருத்திரனைப் போற்றல்.

नमः॑ शंगाय॑च पशुपत॑येच ॥ ३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| शंगायच | சுகத்தை யளிக்கின்ற உருத்திரனுக்கும் |
| पशुपतयेच | பசுக்களைப் பாதுகாக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து

*இன்பமளிக்கும் உருத்திரனுக்கும், கோக்களைப்பாதுகாக்கும் உருத்திரனுக்கும் வணக்கம் என்பதாம்.*

*பசுக்களை, பயகாரணமான பாவம், பிணி, கள்வன் முதலியன வாராமற் காத்தல் என்பதுமாம்.*

---

நான்காவது எசுர் மந்திரம்.
பகைவரை யடக்கி அருளும் உருத்திரனைப் போற்றல்.

नम॑ उग्राय॑च भीमाय॑च ॥ ४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| उग्रायच | கோபத்தோடு கூடிய உருத்திரனுக்கும் |
| भीमायच | பார்த்த மாத்திரத்தில் பயநிமித்தனாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*பகைவரைக் கொல்வதற்கு முனிவுகொண்டவனும், பார்த்த மாத்திரத்தாலேயே பகைவருக்குப் பயங் கொடுக்கின்றவனுவாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*உக்ர:, என்பதற்கு, பாவம் பிணி முதலியவைகளால் கீழ்ப்படாதவன், அல்லது, பாவம் முதலானவைகளை அடக்குகின்றவன், இவன், எசமானனுடைய அதிட்டானன் என்பதும், பீம:, என்பதற்கு உலகத்தைப் பயப்படுத்துகின்றவன் என்பதும் பொருளாமென்க.*

---

ஐந்தாவது எசுர் மந்திரம்
பகைவரைக் கொல்லும் உருத்திரனைப் போற்றல்.

नमो॑ अग्रेवधाय॑च दूरे वधाय॑च ॥ ५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| अग्रेवधायच | அருகாய் நேரில் இருந்துகொண்டு பகைவரைக் கொல்லுகின்ற உருத்திரனுக்கும் |
| दूरेवधायच | தூரத்திலிருந்து கொண்டு பகைவரைக் கொல்லுகின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

'அக்ரேவதாயச' என்பதற்கு, பூர்வத்தில் கொன்றவர்களையே கொல்கின்றவனுக்கு என்பதும், 'தூரேவதாயச' என்பதற்கு, தூரத்திலிருக்கின்ற பகைவரை, அல்லது, நீண்டகாலத்திருக்கின்ற பகைவரையுங் கொல்கின்றவனுக்கு என்பதுமாம்.

ஆறுவது எசுர் மந்திரம்.

எளிதில் சம்மாரம் பண்ணும் உருத்திரனைப் போற்றல்,

नमो॑ ह॒न्त्रेच॑ हनी॑यसेच ॥ ६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| हन्त्रेच | பகைவர், எங்கு எப்போதிருப்பினும் அவரைக் கொல்கின்ற உருத்திரனுக்கும் |
| हनीयसेच | பிரளயகாலத்தில் அதிசயப்படும்படி எல்லாவற்றையுங் கொல்லுகின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

எங்கும், போரில் பகைவரைக் கொல்லுங்கால் உருத்திரனே முன்னின்று கொல்கின்றான் என்பதை, 'मयैवैते निहिताः पूर्वमेव' 'இவர்கள் முன்னால் என்னாலேயே கொல்லப்பட்டவர்கள், என்னும் கண்ணபிரான் வாக்காலும், 'अग्रतोऽक्षयते यान्तं पुरुषं पावकप्रभं' 'கனலொளிபோன்று செல்கின்றானைக் கண்ணால் முன்னில் காண்கின்றேன்' என்னுந் துரோண பருவ வாக்கியத்தாலு முணர்க என்பதாம்.

'ஹந்த்ரே' என்பதற்கு, எவன் கொல்கின்றானோ அவன் வடிவாகிய உருத்திரன் என்பது பொருளாம். விரிப்பதிலென்? கொல்லுகின்றவர்கள் எல்லோரும் உருத்திரனுடைய வலியால் கொல்கின்றனர் என்பது இரண்டாம் பொருள். இவ்வாறு கொல்லுவிக்கு, தானும், மாசங்காரத்தில் அடியோடு எல்லா வுயிர்களையுங் கொல்கின்றான் என்பதுமாம்.

ஏழாவது எசுர் மந்திரம்.

தரு வடிவாகிய உருத்திரனைப் போற்றல்,

नमो॑ वृक्षेभ्यो॒ हरि॑केशेभ्यः ॥ ७ ॥

பதவுரை.

*இதற்கு, முன்னர் உரை கூறப்பட்டுள்ளது.*

சாயணபாடியக் கருத்து

*கல்பதரு முதலிய தருவடிவாகவுமுள்ள உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

---

எட்டாவது எசுர் மந்திரம்.

தாரகமாகிய உருத்திரனைப் போற்றல்.

नम॑स्ताराय॑ ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| ताराय | *ஓங்காரப் பொருளாகிய உருத்திரனுக்கு* |
| नमः | *வணக்கம்.* |

சாயணபாடியக் கருத்து.

*பிரணவத்தாற் கூறப்படுகின்ற உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.*

*பவக்கடனின்று கரையேற்றுகின்ற உருத்திரன் என்பதுமாம். இதை, 'रुद्रस्तारकं ब्रह्मव्याचष्टे' என்று சாபாலோபநிடதமுங் கூறுகின்றது. அல்லது, பிரணவ வடிவனெனினும் அமையுமென்க.*

---

ஒன்பதாவது எசுர் மந்திரம்.

சுக வடிவ உருத்திரனைப் போற்றல்.

नमः॑ शंभवे॑च मयो॒ भवे॑च ॥ ९ ॥

பதவுரை.

| | |
|---|---|
| शंभवेच | *சுகம் வரும்வழியை யுணர்ந்தவன், அல்லது சுகத்தையுண்டாக்குகின்றவனாகிய உருத்திரனுக்கும்* |
| मयोभवेच | *சுகத்தையே கொடுக்கின்றவனாகிய உருத்திரனுக்கும்* |
| नमः | *வணக்கம்.* |

### சாயணபாடியக் கருத்து.

சுகம், அதுவரும்வழி என்பவைகளை யுண்டாக்குகின்றவனாகிய உருத்திர னுக்கு வணக்கம் என்பதாம்.

சுகத்தின் பிறப்பிடம், அல்லது சுகவடிவாகவே யிருத்தல், அல்லது சுகத் தின் நோக்கத்தையே மேற்கொள்ளல் 'சம்பு' என்பதன்பொருளாம். ஈண்டு, சம்பு, என்பதும், 'மய:' என்பதும் சுகத்தையே பொருளாகக் கொண்டவை களாதலின் இவ்வுலகசுகம், பரவுலகசுகம் எனவும், அல்லது, துன்பநீக்கம், சுகமயம் எனவும் பகுத்துக் கொள்ளலும் அமையும்.

---

### பத்தாவது எசுர் மந்திரம்.

இதுவுமது.

नमः शंकरायच मयस्करायच ॥ १० ॥

### பதவுரை.

| | |
|---|---|
| शंकरायच | தந்தை முதலானோர்களால் சுகத்தைச் செய்கின்ற உருத்திரனுக்கும் |
| मयस्करायच | குரு முதலானோர்களால் சுகங்கொடுக்கும் உருத்திர னுக்கும் |
| नमः | வணக்கம். |

### சாயணபாடியக் கருத்து.

பிதா முதலானோர்களால் உலக சுகத்தைக் கொடுக்கின்றவனும், குருநூல் கள் முதலியவைகளால் முத்திச்சுகத்தைக் கொடுக்கின்றவனுமாகிய உருத்திர னுக்கு வணக்கம் என்பதாம்.

ஈண்டு, நேரே சுகங்கொடுத்தல் இவ்விரண்டு பதங்களாலுங் கூறப்பட்டது. இவர்கள் முன்னிலையால் சுகங் கொடுப்பதை, இதற்குமுன் கூறிய இரண்டு பதங்களுங் கூறின என்று உய்த்துணர்க.

எல்லா வுயிர்கட்கும், அவ்வவ் வுயிர்களின் சில வாயிலாகச் சுகத்தைக் கொடுக்கின்றவன், அல்லது, நேரே சுகத்தைக் கொடுக்கின்றவன் சங்கரன் என்பதுமாம்.

---

### பதினோராவது எசுர் மந்திரம்.

மங்கள வடிவ உருத்திரனைப் போற்றல்.

नमः शिवायच शिवतरायच ॥ ११ ॥

பதவுரை.

| | |
|---|---|
| शिवायच | கல்யாண (மங்கள) வடிவனாகிய உருத்திரனுக்கும் |
| शिवतरायच | அதிசயமாகிய கல்யாணவடிவ உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

மங்களவடிவனும், அற்புதமுடைய மங்கள வடிவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம். ஈண்டுச் சிவம் என்பதற்கு, இயற்கையில் அழுக்கிலாதது என்பது திரண்டபொருள் என்பதாம்.

'சிவ:' என்பது, குற்றமற்றவன்; அதாவது முக்குணமிலான், எல்லா வகையாலும் கல்யாண வடிவன் என்பதாம். இதனால், முத்திச் சுகவடிவன் என்பது கொள்ளக் கிடந்தது. அல்லது, சிவம் = சுகம் சுகத்தைக் கொடுக்கின்றவன் எனினும் அமையும்.

இதை,

சிவ ஏகோத்யேய: சிவம் கர:' என்னும் அதர்வசிகை வாக்கியத்தாலும் 'சிவ மிச்சன் மநுஷ்யாணாம் தஸ்மாத்தேவ: சிவ: ஸ்மிருத:, என்னும் பாரத வாக்கியத்தாலும் உணர்க. 'சிவதர:' என்பது, அதிசயமாக சுகத்தைச் செய்கின்றவன், அல்லது, விபரீதமின்றிச் சுகங்கொடுக்கின்றவன் என்பதுமாம்.

ஈண்டு, இப்பஞ்சாக்கரம் எல்லா நூல்களாலும் பெரியாராலும் இனிதெடுத்துப் புகழப்படுவதாமாதலின் இடங் கிடைத்த விடத்து இதைப்பற்றிச் சிறிது கூறுவாம்:—

(1) சிவாய = முத்திப் பேற்றை அடைதற் பொருட்டு, பச்சிலை பூ பழ முதலியவைகளை, நம: = அர்ப்பிக்கின்றேன் என்பதும் ஒரு வகைப் பொருளாம். இதில், நம: = என்பது அர்ப்பணப் பொருளைத் தந்தது என்பதை, 'एतद्वोऽचं सोपकरणं नमः' என்னுங் கருமகாண்ட வாக்கியத்தாலுணர்க.

(2) அல்லது, சிவாய = சிவனுக்கு நம: = அபேதபத்தியின் பொருட்டு வணக்கம் என்பதுமாம்.

(3) அல்லது, ஹே நம: சிவ! = குற்றமற்ற பரமேசுர! அய = என்னை உன்னோடு ஒன்றாக்கிக் கொண்டருள்வாயாக என்பதுமாம். ஈண்டு ம: = விகாரம், ந = அஃதிலாதவன் அதாவது நிர்விகாரி என்க.

(4) அல்லது, சிவாய = சிவத்துடன் ஒன்றுபடுதற் பொருட்டு, நம: = சிந்திக்கின்றேன் என்பதுமாம்.

ஹோமம்)

(5) அல்லது, சிவாய = சிவரூபமாதற் பொருட்டு, நம: = அனைத்தையும் விடுகின்றேன் என்பதுமாம்.

(6) அல்லது, சிவ = சிவனே! நம: = யான் உனது அடிமையே, அய = உன்னுடன் என்னையுஞ் சேர்த்துக் கொள்வாயாக என்பதுமாம்.

அல்லது, சிவ = ஹேசிவ!, நம: = யான் திருவில்லாதவன், அதாவது வறுமை மிகுந்தவன், ஆதலின், அய = செல்வத்தை அருள் செய்வாயாக என்பதுமாம்.

மற்றும் இவ்வாறே வருவனவற்றை உய்த்துணர்ந்து கொள்க. இவ்வைந் தெழுத்தாகிய மந்திரப்பெருமையை,

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக்குய்ப்பதும்
வேத நான்கினும் மெய்ப் பொருளாவதும்
நாதன் நாமம் நமச்சிவாயவே"

என்னுந் தமிழ்த் திருமறைப் பதிகமுதலானவைகளாற் காண்க.

---

பன்னிரண்டாவது எசுர் மந்திரம்.

தீர்த்தமாகிய உருத்திரனைப் போற்றல்.

नमस्तीर्थ्यायच कूल्यायच ॥ १२ ॥

பதவுரை.

| | |
|---|---|
| तीर्थ्यायच | பிரயாகைமுதலிய தீர்த்தங்களில் சாந்நித்தியனாகிய உருத்திரனுக்கும் |
| कूल्यायच | நதிக்கரையிலுள்ள இலிங்கசாந்நித்தியனாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

தன்பால், அன்புள்ளவரைப் புநிதப்படுத்துதலின் தீர்த்தமாம்; அத்தகைய தீர்த்தத்தில் சாந்நித்தியனும், நதிக்கரையில் தாபித்துள்ள இலிங்கத்தில் சாந்நித்தியனுமிருக்கின்ற உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

---

பதின்மூன்றாவது எசுர் மந்திரம்.

பவக் கடற்கரையிலுள்ள உருத்திரனைப் போற்றல்.

नमः पार्यायचाऽवार्यायच ॥ १३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| पार्याय च | பவக்கடலைத் தாண்டிநிற்கின்ற உருத்திரனுக்கும் |
| अवार्याय च | பவக்கடலின் நடுவிலிருந்தருள்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

சம்சாரக் கடலைத் தாண்டிய முத்திவிருப்பாளர்களால் சிந்திக்கத்தக்கவனும், சம்சாரக் கடலில் இருந்து கொண்டு வேண்டியவற்றை அருள் செய்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

பார்யம் = என்பது சுத்தமாகிய சைவசமயமாம்; அதிலிருந்துகொண்டு அருள் செய்கின்றவன். அசுத்தமாகிய பிறவற்றிலிருந்துகொண்டு அருள்வது அவார்யம் என்பர் சிலர்.

இத்துடன் இரண்டாவது ஹோமம் முடிந்தது.

---

மூன்றாவது ஹோமத் தொடக்கம்.

---

பதினான்காவது எசுர் மந்திரம்.

துன்பக் கடலைத் தாண்டுவிக்கும் உருத்திரனைப் போற்றல்.

नमः प्रतरणाय चोत्तरणाय च ॥ १४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| प्रतरणाय च | பாவமுழுதையும் போக்குகின்ற உருத்திரனுக்கும் |
| उत्तरणाय च | பந்தத்தை நீக்குகின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

மந்திரசெபம் முதலியவைகளால் பாவத்தை நன்கு போக்குகின்றவனும், உண்மையுணர்வால் குடும்பத்திலிருந்து விடுபடச் செய்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

---

பதினைந்தாவது எசுர் மந்திரம்.

ஞான நெறியடைந்த பிறகு மாறுகின்றவரான உருத்திரனைப் போற்றல்.

नम आतार्याय चाऽऽलाद्याय च ॥ १५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| आतार्य्यायच | பவக்கடலினின்று கரையேற்றியும் மீண்டும்பாவத்தையடைகின்றவனுகிய உருத்திரனுக்கும் |
| आलाद्यायच | நிறையக் கருமபயன்களையருந்துஞ் சீவனைச்செலுத்துகின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

பவக்கடலை நீந்துதற்குரிய தத்துவ ஞானங் கிடைத்தும், அதை வெறுத்து விட்டு விட்டு, காமிய கருமத்தைச் செய்கின்ற சம்சாரத்தில் மீண்டும் வருதற் குரியானும், கரும பயன்களை நிறைய அருந்தும் சீவனைச் செலுத்துவோனுமாகிய உருத்திரனுக்கும் வணக்கம் என்பதாம்.

பவக்கடலினின்று கரையேறியும் மீண்டும் அக்கடலில் விழுகின்றவனும் பாவத்தில் மறித்தும் மறித்துஞ் சுழல்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பதுமாம்.

---

பதினாறுவது எசுர் மந்திரம்.

பசும் புல்லிலிருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमः शष्प्यायच फेन्यायच ॥ १६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| शष्प्यायच | ஆற்றின் கரையில் முளைக்கும் புல்லில் இருக்கின்ற உருத்திரனுக்கும் |
| फेन्यायच | ஆற்றின் நடுவிலுள்ள நுரையிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

கங்கை முதலிய புண்ணிய நதிக்கரையில் முளைக்கின்ற குசை முதலியவற்றின் முளைகளிலும், ஆற்றின் நுரைகளிலு மிருக்கின்ற உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

---

பதினேழாவது எசுர் மந்திரம்.

மணலிலிருக்கும் உருத்திரனைப் போற்றல்.

नमः सिकत्यायच प्रवाह्यायच ॥ १७ ॥

பதவுரை.

| | |
|---|---|
| सिकत्यायच | ஆற்றுமணலாக இருக்கின்ற உருத்திரனுக்கும் |
| प्रवाह्यायच | ஆற்றோட்டமாகிய உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*அன்புடையனும், நீராடலையே மேற்கொண்டு எப்போதும் நதிக் கரையிலிருக்கின்றவனுகிய உருத்திரனுக்கு வணக்கம் என்பது, 16-17-வது மந்திரங்களின் திரண்ட பொருள் என்பதாம்.*

எட்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்.

## ஒன்பதாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் முப்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

---

*எட்டாம் அநுவாகத்தில் யாதானும் ஒருபக்கத்து வணக்கச் சொல்லையுடைய எசுர் மந்திரங்கள் கூறப்பட்டன. அவைகட்கு வேறான அத்தகைய சில எசுர் மந்திரங்கள் இதில் கூறப்படுகின்றன.*

नम इरिण्याय च प्रपथ्याय च नमः किꣳशिलाय च क्षयणा-
य च नमः कपर्दिने च पुलस्तये च नमो गोष्ठ्याय च गृह्याय च
नमस्तल्प्याय च गेह्याय च नमः काट्याय च गह्वरेष्ठाय च नमो
ह्रदय्याय च निवेष्प्याय च नमः पाꣳसव्याय च रजस्याय च नमश्शु-
ष्क्याय च हरित्याय च नमो लोप्याय चोलप्याय च ॥ १ ॥ नम
ऊर्व्याय च सूर्म्याय च नमः पर्ण्याय च पर्णशद्याय च नमोऽपगुरमा-
णाय चाऽभिघ्नते च नम आक्खिदते च प्रक्खिदते च नमो वः किरि-
केभ्यो देवानाꣳ हृदयेभ्यो नमो विक्षीणकेभ्यो नमो विचिन्वत्केभ्यो
नम आनिर्हतेभ्यो नम आमीवत्केभ्यः ॥ २ ॥

---

இவ் வநுவாகத்திலுள்ள பத்தொன்பது எசுர் மந்திரங்களுள்,

முதலாவது எசுர் மந்திரம்.

உவர் நிலத்திலுள்ள உருத்திரனைப் போற்றல்.

नमं इरिण्यांयच प्रपथ्यांयच ॥ १ ॥

பதவுரை.

| | |
|---|---|
| इरिण्यायच | களர்ப்பூமியிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| प्रपथ्यायच | பல்லோர்கள் நடக்கின்ற பாதையிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

இரண்டாவது எசுர் மந்திரம்.

சுக்கான்கற் பூமியிலுள்ள உருத்திரனைப் போற்றல்.

नमं. किंशिलांयच क्षयंणायच ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| किंशिलायच | சுக்கான் கற்கள் உள்ள நிலத்திலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| क्षयणायच | வசித்தற்குரிய இடத்திலுள்ள உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

படிக முதலான கல்லுகள் உள்ள இடம் என்பதுமாம். மற்றும், இளம் புல், நுரை, மணல்களுக்கொப்பான ஆற்றலற்ற சுக்கான் கல் முதலான சிறிய உயிர்களுக்கும் அநுக்கிரகஞ் செய்யும் உருத்திரன் என்பர் சிலர்.

மூன்றாவது எசுர் மந்திரம்.

சடையையுடையவனும் முன் தோன்றுகின்றவனுமாகிய உருத்திரனைப் போற்றல்.

नमः कपर्दिनेच पुलस्तयेच ॥ ३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| कपर्दिनेच | சடைமுடியையுடைய உருத்திரனுக்கும் |
| पुलस्तयेच | அன்பர்களைப் பாதுகாக்க முன்னிற்பவனாகிய உருத்திரனுக்கும் |
| नम: | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

உருத்திரன், அருள் புரியும்போது ஒருசமயம் கற்றைச் சடையுடையவனாகவும், ஒருபோது தலைமயிரை யுடையனாகவும் வருவான் என்பதுமாம். இத்தகைய மகானாகியிருந்தும் எப்போதும் எளிதில் அன்பர்கட்குத் தோன்றுகின்றவன் என்பர் சிலர்.



நான்காவது எசுர் மந்திரம்.

கோசாலையிலுள்ள உருத்திரனைப் போற்றல்.

नमो गोष्ठ्याय च गृह्याय च ॥ ४ ॥

பதவுரை.

| | |
|---|---|
| गोष्ठ्यायच | பசுக்கள் தங்குமிடத்திலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| गृह्यायच | வீட்டின்கண் ணிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नम: | வணக்கம், |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.



ஐந்தாவது எசுர் மந்திரம்.

படுக்கையிலிருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमस्तल्प्याय च गेह्याय च ॥ ५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| तल्प्यायच | கட்டிலிலுள்ள படுக்கையின் மீதிருக்கும் உருத்திரனுக்கும் |
| गेह्यायच | வீட்டிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नम: | வணக்கம், |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

ஆருவது எசுர் மந்திரம்.

முள் உள்ள புதர்ப்பூமியிலிருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमः काट्याय च गह्वरेष्ठाय च ॥ ६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| काट्यायच | முட்கொடிகள் நிறைந்த விடத்திலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| गह्वरेष्ठायच | பயங்கரமாகிய மலைக்குகை முதலிய விடங்களிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

முட் கொடிகள் அடர்ந்தமையின் செல்ல முடியாத ஒரு காட்டின் விசேடத்திலும், நுழைதற் கொண்ணாத மலைக்குகை முதலியவற்றிலு மிருக்கின்ற உருத்திரனுக்கு வணக்கம் என்பதாம்.

ஈண்டு, கிணற்றுநீர் எனினும் அமையுமென்க.

ஏழாவது எசுர் மந்திரம்.

மிகுந்த ஆழமாகிய தண்ணீரிலுள்ள உருத்திரனைப் போற்றல்.

नमो ह्रद्य्याय च निवेष्प्याय च ॥ ७ ॥

பதவுரை.

| | |
|---|---|
| ह्रदय्यायच | காணமுடியாத ஆழமுள்ள நீரிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| निवेष्प्यायच | பனிநீரில் இருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

எட்டாவது எசுர் மந்திரம்.

தூளியிலிருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमः पांसव्यायच रजस्यायच ॥ ८ ॥

பதவுரை.

| | |
|---|---|
| पांसव्यायच | பரமாணுக்கள் வடிவான தூசுகளிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| रजस्यायच | காணப்படும் தூல அணுக்களில் இருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

ரஜ:, என்பது, குணம், அல்லது உலோகத்தை புணர்த்துவது எனினுமாம்.

ஒன்பதாவது எசுர் மந்திரம்.

விறகிலிருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमः शुष्क्यायच हरित्यायच ॥ ९ ॥

பதவுரை.

| | |
|---|---|
| शुष्क्यायच | காய்ந்து போன கட்டையிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| हरित्यायच | ஈரமாகிய கட்டையிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

பத்தாவது எசுர் மந்திரம்.

புற்கள் முளைக்கின்றதும் முளையாததுமாகிய இடத்திலுள்ள உருத்திரனைப் போற்றல்.

नमो लोप्यायचोलप्यायच ॥ १० ॥

பதவுரை.

| | |
|---|---|
| लोप्यायच | புல் முதலியன முளையாத கடின நிலத்திலுள்ள உருத்திரனுக்கும் |

ஹோமம்)

| | |
|---|---|
| उलप्यायच | நாணல் புல் முளைத்திருக்கின்ற இடத்திலுள்ள உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

புல்லுகள் முளைத்திருக்கும் இடத்தில் இருக்கின்ற உருத்திரன், அல்லது, புல்லுகளிலிருக்கின்ற உருத்திரன் எனலுமாம்.

---

பதினேராவது எசுர் மந்திரம்.

நிலத்திலிருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नम ऊर्व्यायच सूर्म्यायच ॥ ११ ॥

பதவுரை.

| | |
|---|---|
| ऊर्व्यायच | பூமியிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| सूर्म्यायच | அழகிய அலைகளையுடைய நதியிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

நதியிலிருக்கின்றவன் என்பதாம். நீர்ச் சுழலிலிருக்கின்றவன் என்பதுமாம்.

---

பன்னிரண்டாவது எசுர் மந்திரம்.

இலைகளிலிருக்கின்ற உருத்திரனைப் போற்றல்.

नमः पर्ण्यायच पर्णशद्यायच ॥ १२ ॥

பதவுரை.

| | |
|---|---|
| पर्ण्यायच | பச்சிலைகளிலிருக்கின்ற உருத்திரனுக்கும் |
| पर्णशद्यायच | காய்ந்த சருகுக்குவியலில் இருக்கின்ற உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

பதின்மூன்றாவது எசுர் மந்திரம்.

ஆயுத மெடுக்கின்றவனையும், கொல்லுகின்ற உருத்திரனையும் போற்றல்

नमोऽपगुरमाणायचाऽभिघ्नतेच ॥ १३ ॥

பதவுரை.

| | |
|---|---|
| अपगुरमाणायच | ஆயுத மெடுக்கின்றவனாகிய உருத்திரகணத்திற்கும் |
| अभिघ्नतेच | கொல்லத் தக்கோர்களைக் கொல்கின்ற உருத்திர கணத்திற்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இது உருத்திரகணத்தைப் போற்றுதல் என்பதாம்.

---

பதினான்காவது எசுர் மந்திரம்.

துன்புறுத்தும் உருத்திரனைப் போற்றல்.

नम आक्खिदतेच प्रक्खिदतेच ॥ १४ ॥

பதவுரை

| | |
|---|---|
| आक्खिदतेच | சிறிது துன்புறுத்துகின்ற உருத்திரனுக்கும |
| प्रक्खिदतेच | மிகத்துன்புறுத்தும் உருத்திரனுக்கும் |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இவ்வாறு, தண்டிக்கத் தக்கார்களைத் தண்டிக்கின்றான் என்பதாம். இது உருத்திர கணம் என்பதுமுண்டு.

---

பதினைந்தாவது எசுர் மந்திரம்.

சகதிஷட்பதாச்சந்தம், ரிஷியும் தேவதையும் சம்பு, இனி கூட்டமான உருத்திரர்களைத் துதித்தலுள் ஈகையை மேற்கொண்ட உருத்திரர்களைத் துதித்தல்.

नमो वः किरिकेभ्यो देवानाꣳ हृदयेभ्यः ॥ १५ ॥

பதவுரை.

| | |
|---|---|
| किरिकेभ्यः | போதியவளவு தனங்களைக் கொடுக்கின்றவர்களும் |
| देवानां | தேவர்களுடைய |

ஹோமம்)

| | |
|---|---|
| हृदयेभ्यः | உள்ளங்களா யிருக்கின்றவர்களுமான உருத்திரர்களே ! |
| वः | உங்கட்கு |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

கொடையாளர்களும், தேவர்கட்கு மிகப்பிரியருமான உருத்திராவதார விசேடர்களுக்கு வணக்கம் என்பதாம்.

முன், உருத்திரர்களின், குணம் செயல் முதலியவைகளைப்பற்றி தனித் தனி வணக்கங் கூறப்பட்டது; இப்போது கூட்டமாகிய உருத்திரர்கட்கு வணக்கங் கூறப்படுகின்றது.

கிரிகேப்ய:, என்பது, தீயோரைத் துன்புறுத்துபவர்கள் என்னும் பொருளையுந்தரும், தேவாநாம் ஹ்ருதயேப்ய:, என்பதற்கு, தேவர்களின் உள்ளங்களில் வசிக்கின்றவர்கள், அல்லது, அருள் செய்வதற்கு உள்ளங்களில் தோன்றுகின்றவர்கள் என்று பொருள் கொள்ளினும் அமையுமென்க.

---

பதினாறுவது எசுர் மந்திரம்.

கேடுறாத உருத்திரர்களைப் போற்றல்.

नमो॑ विक्षीणके॒भ्यः ॥ १६ ॥

பதவுரை.

| | |
|---|---|
| विक्षीणकेभ्यः | என்றும் நாசமாகாதவர்களான உருத்திரர்களே ! உங்களுக்கு |
| नमः | வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

இதன் பொருள் வெளிப்படை என்பதாம்.

அன்பிலார்களை, பிணி, களவு முதலியவைகளால் மிகத் துன்புறுத்துகின்ற உருத்திரர்கட்கு வணக்கம் எனலுமாம்.

---

பதினேழாவது எசுர் மந்திரம்.

வேண்டும் பொருளையளிக்கும் உருத்திரர்களைப் போற்றல்,

नमो॑ विचिन्वत्के॒भ्यः ॥ १७ ॥

பதவுரை.

विचिन्वत्केभ्यः { விரும்புகின்ற பொருள்களைக் கொடுக்கும் உருத்திரர்களே! உங்கட்கு

नमः வணக்கம்.

சாயணபாடியக் கருத்து.

இச்சித்த பொருள்களைத் தேடி யளிக்கின்ற உருத்திரர்கட்கு வணக்கம் என்பதாம்.

அநுக்கிரகஞ் செய்தற்கும், நிக்கிரகஞ் செய்தற்கும், இவர்கள் பாவிகள் இவர்கள் புண்ணியர்கள் என்று தேடுகின்ற உருத்திரர்கள் என்பதும் அமையும்.

---

பதினெட்டாவது எசுர் மந்திரம்.

பாவங்களைப் போக்கும் உருத்திரர்களைப் போற்றல்.

नम आनिर्हतेभ्यः ॥ १८ ॥

பதவுரை.

आनिर्हतेभ्यः { பாவங்களை அடியோடு போக்குகின்ற உருத்திரர்களே! உங்கட்கு

नमः வணக்கம்.

சாயணபாடியக் கருத்து.

பாவங்கள் முழுமையையுந் தொலைத்தருள்கின்ற உருத்திரர்கட்கு வணக்கம் என்பதாம்.

இவர்கள் பாவிகளே என்று துணிந்து கொண்டு அவர்களைத் துன்புறுத்துகின்ற உருத்திரர்கள் என்பதுமாம்.

---

பத்தொன்பதாவது எசுர் மந்திரம்.

விரிகின்ற உருத்திரர்களைப் போற்றல்.

नम आमीवत्केभ्यः ॥ १९ ॥

பதவுரை.

आमीवत्केभ्यः { நாற்புறத்தும் விரிந்திருக்கின்றவர்களான உருத்திரர்களே! உங்கட்கு

नमः வணக்கம்.

ஹோமம்)

சாயணபாடியக் கருத்து.

*எங்கும் விரிந்திருக்கின்ற உருத்திரர்கட்கு வணக்கம். மூன்று மந்திரங்களிலும், 'தேவாநாம் ஹ்ருதயேப்ய:' என்பதைச் சேர்த்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.*

*ஈண்டு, ஐந்தாம் அநுவாக முதல் ஒன்பதாம் அநுவாக முடிவுவரை, உருத்திரன் எல்லாமா யிருக்கின்றான் என்பதை யுணர்த்துதற் பொருட்டு ஒவ்வொரு மந்திரத்தாலும் ஒவ்வொரு தாவர சங்கம வடிவங் கூறப்பட்டது. அதன் அநுவாக வேறுபாடோ, மந்திர வேறுபாட்டாலாம் என்பதை யுணர்க.*

ஒன்பதாம் அநுவாகம் முடிந்தது.

## நான்காங் காண்டம் ஐந்தாவது பிரபாடகம்

## பத்தாம் அநுவாகம்.

*இரண்டாவது அநுவாகம் முதற் கொண்டு ஒன்பதாவது அநுவாகம் வரை உள்ள அநுவாகங்களில், இருபக்கங்களிலும், அல்லது, இரண்டு பக்கத்துள் ஒரு பக்கத்திலும் வணக்கச் சொற்களையுடைய எசுர் மந்திரங்கள் பல் வேறு வகைகளாகக் கூறப்பட்டன. இப் பத்தாவது அநுவாகத்தில் இருக்கு வடிவான மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

*சந்தம் ஆஸ்தாரபங்தி, ரிஷி புலகர், உருத்திரன் தேவதை.*

விரும்பியவற்றை அளித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கின்ற மந்திரங்கள்.

द्रापे अन्धसस्पते दरिद्रन्नीललोहित । एषां पुरुषाणामेषां
पशूनां माभेर्माऽरोमो एषाङ्किञ्चनाऽऽममत् । यातें रुद्रशिवातनूश्शि-
वाविश्वाहभेषजी । शिवा रुद्रस्य भेषजी तयानो मृडजीवसे । इमा॒
रुद्राय तवसे कपर्दिने क्षयद्वीराय प्रभरामहे मतिम् । यथानश्शम-
सद्द्विपदे चतुष्पदे विश्वं पुष्टंग्रामे अस्मिन् ॥ १ ॥ अनातुरम् ।
मृडानो रुद्रोतनो मयस्कृधिक्षयद्वीराय नमसा विधेमते । यच्छञ्च
योश्च मनुरायजे पिता तदश्यामतवरुद्रप्रणीतौ । मानो महान्तमुत
मानो अर्भकं मान उक्षन्तमुतमान उक्षितम् । मानो वधीः

पितरं मोतमातरं प्रियामानस्तनुवः ॥ २ ॥ रुद्ररीरिषः ।
मानस्तोकेतनये मान आयुषि मानोगोषु मानो अश्वेषु रीरिषः ।
वीरान्मानो रुद्रभामितो वधीर्हविष्मन्तो नमसा विधेमते । आराते
गोघ्न उतपूरुषघ्ने क्षयद्वीराय सुम्नमस्मेते अस्तु । रक्षाच नो अधिच
देवब्रूह्यधाचनश्शर्म यच्छद्विबर्हाः । स्तुहि ॥ ३ ॥ श्रुतङ्ग-
र्तसदं युवानं मृगन्नभीममुपहत्नुमुग्रम् । मृडाजरित्रे रुद्रस्तवानो
अन्यन्ते अस्मन्निवपन्तु सेनाः । परिणो रुद्रस्य हेतिर्वृणक्तु परि-
त्वेषस्य दुर्मतिरघायोः । अवस्थिरामघवद्भ्यस्तनुष्व मीढ्वस्तोकाय
तनयाय मृडय । मीढुष्टमशिवतम शिवोनस्सुमनाभव । परमे वृक्ष
आयुधन्निधाय कृत्तिं वसान आचरपिनाकम् ॥४॥ बिभ्रदाऽऽगहि ।
विकिरिद विलोहित नमस्ते अस्तु भगवः । यास्ते सहस्रं हेतयो-
ऽन्यमस्मन्निवपन्तुताः । सहस्राणि सहस्रधा बाहुवोस्तवहेतयः ।
तासामीशानो भगवः पराचीनामुखाकृधि ॥ ५ ॥

---

முதலாவது இருக்கு மந்திரம்.

மக்கள் முதலானோர்களும், பசு முதலானவைகளும் கெடாதிருக்கும்படி வேண்டல்.

द्रापे अन्धसस्पते दरिद्रन्नीललोहित । एषां पुरुषाणामेषां पशूनां
माभेर्माऽरो मो एषाङ्किञ्चनाऽऽममत् ।

பதவுரை.

| | |
|---|---|
| द्रापे ! | பாவிகளைக் கிலேசப்படுத்துகின்றவனும், |
| अन्धसस्पते ! | உணவுப் பொருட்கு இறைவனும், |
| दरिद्रत् ! | வறியவனும், |
| नीललोहित ! | கறுத்த கழுத்தும், சிவந்த திருமேனியு முடையவனே ! |

| | |
|---|---|
| एषां पुरुषाणां | புதல்வன் முதலான இந்த மக்கட் கூட்டங்களேயும் |
| एषां पशूनां | பசு, எருமை முதலானவற்றின் இம்மந்தைகளேயும் |
| मा भेः | பயப்படுத்தாதே. |
| एषां | மற்றும், இவைகளுக்குள் |
| किंचन | ஒன்றேனும் |
| मा अरः | கெடாததாகுக. |
| मो आममत् | வியாதி வாய்ப்பட்டொழியாததும் ஆகுக. |

சாயணபாடியக் கருத்து

உருத்திர! எனது பிள்ளேகள் பேரன்மார்கள் முதலான கூட்டத்தாரையும், பசுக்கள் முதலானவைகளேயும் பயமுறுத்தாமலும், பிணிகளால் கெடாமலும் பாதுகாத்தருள்வாயாக என்பதாம்.

இவ்வாற்ருல், உலக வடிவாய் உருத்திரனேப் போற்றிக்கொண்டு அதன் பின் பயமின்மை வேண்டப்படுகின்றது.

'த்ராபே' என்பது, தாழ்ந்த யாதனு தேகத்தைக் கொடுத்தலாலேனும் வறுமையாலேனும் துன்புறுத்தல், அல்லது, உபசம்மாரத்தால் துன்புறுத்தல், அல்லது, பயப்படுத்தல் என்னும் பொருள்களேயுந் தரும். 'தரித்ரன்' என்பதற்கு, ஒன்றையும் ஏற்றுக் கொள்ளாமையும் பொருளாம். நீலலோஹிதம், என்பதால், பெண்மை பாதியன் என்பதுமாம். மாபே! என்பதற்கு துன்புறுத்தாதே என்பதுமாம் என்க.



இரண்டாவது இருக்கு மந்திரம்.

சந்தம் அநுஷ்டுப், தேவதை கந்தனுகிய உருத்திரன், கந்தன் ரிஷி.
மங்கள வடிவத்தால் நலஞ் செய்ய வேண்டுமெனல்.

या॑ते रुद्र शिवातनूश्शिवा विश्वाहं॑भेषजी । शिवा रुद्रस्य॑ भेषजीतया॑
नो मृडजी॒वसे॑ ।

பதவுரை.

| | |
|---|---|
| हे रुद्र ! | உருத்திரனே! |
| विश्वाह भेषजी | எந்நாளும், பிணி வறுமைகட்கு மருந்தாயிருத்தலால் |
| शिवा | மங்களமும், |

| | |
|---|---|
| रुद्रस्य | உருத்திரனுடன் கலப்பதற்கு |
| भेषजी | ஞான மருந்தாந் தன்மையால் |
| शिवा | மங்களமும் உள்ள |
| ते | உனக்கு |
| या शिवातनूः | யாதொரு மங்களத் திருமேனியுண்டோ, |
| तया | அதனால் |
| नः | எம்மை |
| मृड | சுகப்படுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து

உருத்திர! நோய், வறுமை முதலியவைகளை நீக்கி யருளுவதாலும், பிறப்பைப் போக்குவதாலும், உன்னுடன் ஒன்றுபடும் முத்தியைக் கொடுப்பதாலும் மங்களத்தைச் செய்யும் உனது திருமேனியால் அத்தகைய மங்களத்தைச் செய்வாயாக என்பதாம்.

ஈண்டு, 'ருத்திர:' என்னுஞ் சொல், கிரியா நிமித்த முடையதாமாதலின் சம்சாரமாகிய நோயை நீக்குவது எனப் பொருள்படுதலின் அதனாலும் மங்களத் திருமேனியை யுடையானெனல் குறிப்பிக்கப்பட்டமை காண்க.

---

மூன்றாவது இருக்கு மந்திரம்.

எப்பொழுதும் பூசித்துக்கொண்டிருக்கவேண்டுமென்று பிரார்த்தித்தல்.

மண்டவியர் ரிஷி, அனுஷ்டுப் சந்தம், உருத்திரன் தேவதை.

इमाꣳ रुद्राय तवसे कपर्दिने क्षयद्वीराय प्रभरामहे मतिम् । यथा न-
श्शमसद्द्विपदे चतुष्पदे विश्वं पुष्टंग्रामे अस्मिन्ननातुरम् ।

பதவுரை.

| | |
|---|---|
| तवसे | யாம் வேண்டியவற்றை யளிக்கும் தவ வன்மையை யுடையவனும் |
| कपर्दिने | சடைமுடியை யுடையவனும் |
| क्षयद्वीराय | மாறுபட்ட தோற்றம் ஒழிதற்குக் காரணனுமாகிய |
| रुद्राय | உருத்திரனுக்கு, |
| यथा | உள்ளபடியே |
| नः | எம்முடைய |

| | |
|---|---|
| द्विपदे | பிள்ளைகள் பேரன்மார் முதலான இருகாற் பிரசைகளும் |
| चतुष्पदे | பசு, எருமை முதலான நாற்காற் பிராணிகளும் |
| शम् | சுகமாக |
| असत | இருப்பதற்கும். மற்றும், |
| अस्मिन् ग्रामे | இக் கிராமத்திலுள்ள |
| विश्वं | உயிர்களனைத்தும் |
| अनातुरं | பீடையில்லாமல் இருத்தற் பொருட்டும் |
| इमां मतिं | எப்போதும் துதித்துப் பூசை செய்துகொண்டிருப்பேனாக, என்னும் இப் புத்தியை |
| प्रभरामहे | இனிது வளர்ப்போமாக. |

### சாயணபாடியக் கருத்து.

எம்முடைய குடும்பத்தார்களும், எமது ஆடு மாடுகள் முதலானவைகளும், இக் கிராமத்திலுள்ள எல்லா வுயிர்களும், நோய் வறுமை முதலிய துன்பப்பட்டுழலாமல் இருப்பதன் பொருட்டு உருத்திரனை எப்போதும் பூசிப்போம் என்னும் உறுதிப்பாட்டைக் கைக்கொள்வோமாக என்பதாம்.

உருத்திர பூசையால், எமது சுற்றமும், உலகமும் எவ்வாறு இன்புறுமோ அவ்வாறு செய்யும் உருத்திர பூசை விடயமாகிய புத்தியைப் பாதுகாத்துக் கொள்வோமாக என்பதுமாம்.

---

### நான்காவது இருக்கு மந்திரம்

சுகத்தை வேண்டல்.

मृडानो रुद्रोतनोमयस्कृधिक्षयद्वीराय नमसा विधेमते । यच्छञ्चयोश्च
मनुरायजे पिता तदश्याम तव रुद्रप्रणीतौ।

### பதவுரை.

| | |
|---|---|
| हे रुद्र ! | உருத்திரனே ! நீ |
| नः | எம்மை |
| मृड | இவ்வுலகில், சுகப்படுத்துவாயாக. |
| उत | மற்றும், |
| नः | எம்மை |
| मयः कृधि | பரலோகத்திலுஞ் சுகப்படுத்துவாயாக. |

| | |
|---|---|
| क्षयद्वीराय ते | எமது பாவத்தைப் போக்கிய உனக்கு |
| नमसा | வணக்கத்தால் |
| विधेम | வழிபாடு செய்கின்றேன். |
| पिता मनुः | உலகைப் பாதுகாக்கும் யாதொரு பிரமன் |
| शं | சுகத்தையும், |
| योश्च | துன்ப நீக்கத்தையும் |
| यत् आयजे | அடைந்தனனோ, |
| तत् च | அவ்வனைத்தையும், |
| हे रुद्र ! | உருத்திர ! |
| तव | உன்னுடைய |
| प्रणीतौ | பிரியம் மிகுந்திருக்குமிடத்து |
| अश्याम | யாமும் அடைவோம். |

சாயணபாடியக் கருத்து.

உருத்திர! உனது அருளிருக்கின், பிரமன் அடைந்த சுகத்தை யாமும் அடைவோம் என்பதாம்.

உருத்திர! நீ, படைப்புத் தொழிலில் பிரமனை நியமித்தாய், இப்போது எனது துன்பைப் போக்கிச் சுகத்தைக் கொடுப்பாயாக என்பதுமாம். ஈண்டு மநு, என்பதால் மநுவையே கொள்வர் சிலர்.

---

ஐந்தாவது இருக்கு மந்திரம்.

சகதிச் சந்தம், தேவராத ரிஷி, நந்திவடிவாகிய உருத்திரன் தேவதை.

சுற்றத்தாரைப் பாதுகாக்கும்படி வேண்டல்.

मानो महान्तमुतमानो अर्भकं माम उक्षन्तमुतमान उक्षितम् । मानो वधीः
पितरं मोतमातरं प्रियामानस्तनुवो रुद्ररीरिषः ।

பதவுரை.

| | |
|---|---|
| हे रुद्र ! | உருத்திரனே ! நீ |
| नः | எம்முடைய |
| महान्तं | கிழவர்களைத் |
| मा रीरिषः | துன்புறுத்தாதே. |

| | |
|---|---|
| उत | மற்றும், |
| नः अर्भकं | எமது குழந்தைகளையும் |
| मा (रीरिषः) | துன்புறுத்தாதே. |
| उत | மற்றும், |
| नः उक्षन्तं | குழந்தையை யுண்டாக்கத்தக்க எமது காளைப் பருவத்தனையும் |
| उक्षितं | கருப்பத்திலுள்ள குழந்தையையும் |
| मा (रीरिषः) | துன்புறுத்தாதே. |
| नः | எமது |
| पितरं | பிதாவையும் |
| मा (रीरिषः) | துன்புறுத்தாதே. |
| मातरं | மாதாவையும் |
| मा (रीरिषः) | துன்புறுத்தாதே. |
| नः | மற்றும், எங்களுடைய |
| प्रिया तनुवः | பிரியமுடைய உடம்புகளையும் |
| मा (रीरिषः) | துன்புறுத்தாதே. |

### சாயணபாடியக் கருத்து.

எமது, பாட்டன், குழந்தை, உடன்பிறந்தார் முதலான சுற்றத்தார்களையும், எமது உடம்புகளையும், அதாவது எமது மனைவி முதலியோர்களின் உடம்புகளையும் பிணி முதலியவைகளால் பீடிக்காதருள்வாயாக என்பதாம்.

---

### ஆறுவது இருக்கு மந்திரம்.

பகவான்ரிஷி, சகதிச்சந்தம், பகவான் தேவதை.

குழந்தை முதலியவைகளைத் துன்புறுத்தாதவாறு வேண்டல்.

मानस्तोके तनयेमान आयुषि मानोगोषु मानो अश्वेषु रीरिषः । वीरान्मानो

रुद्रभामितो वधीर्हविष्मन्तो नमसा विधेमते ।

### பதவுரை.

| | |
|---|---|
| हे रुद्र! | உருத்திரனே ! நீ |
| नः | எம்முடைய |
| तोके | பொதுவாகிய மக்களிடத்தும் |

| | |
|---|---|
| तनये | ஆண் குழந்தைகளிடத்தும் |
| मा रीरिषः | துன்பத்தைச் செய்யாதே. |
| नः | எமது |
| आयुषि | ஆயுளில் |
| मा (रीरिषः) | துன்பஞ் செய்யாதே. |
| नः | எமது |
| गोषु | பசுக்களிடத்திலும் |
| मा (रीरिषः) | துன்பஞ் செய்யாதே. |
| नः | எமது |
| अश्वेषु | குதிரைகளிடத்தும் |
| मा रीरिषः | துன்பஞ் செய்யாதே. |
| भामितः | கோபமுடையனாய் |
| नः वीरान् | வீரமுடைய எமது ஏவலாளரைக் |
| मावधीः | கொன்று விடாதே. |
| हविष्मन्तः | யாம் அவிகளை யுடையவர்களாய் |
| ते | உனக்கு |
| नमसा | வணக்கத்தால் |
| विधेम | வழிபாடு செய்கின்றோம். |

சாயணபாடியக் கருத்து.

உருத்திர! உனக்கு, வணக்கத்தால் வழிபாடு செய்கின்றோம். நீ, எமது குழந்தைகளை, பிணி முதலியவைகளால் துன்புறுத்தாதே என்பதாம்.

எமது குழந்தைகள் தவறு செய்யினும் பொறுத்துக்கொண்டு துன்புறுத்தா தருள்வாயாக என்பதுமாம்.

---

ஏழாவது இருக்கு மந்திரம்.

அத்திரி ரிஷி, திருஷ்டுப் சந்தம், சம்புதேவதை.

உக்கிரவடிவவைக் காட்டாது அருளேனல்.

आरात्ते गोघ्न उत पूरुषघ्ने क्षयद्वीराय सुम्नमस्मे ते अस्तु । रक्षा च नो अधि च देवब्रूह्यधा च नश्शर्म यच्छ द्विबर्हाः ।

பதவுரை.

| | |
|---|---|
| गोघ्ने | பசுவைக் கொல்லுகின்றவனும், |
| उत | மற்றும் |

ஹோமம்)

| | |
|---|---|
| पूरुषघ्ने | பிள்ளை, பேரன்மார் முதலான மனிதர்களைக் கொல்கின்றவனும் |
| क्षयद्वीराय | வீரர்களைக் கொல்கின்றவனுமாகிய |
| ते | உன்னுடைய கோரவடிவம் |
| आरात् अस्तु | எமக்குத் தூரமாக இருக்குக. |
| सुम्नम् | உனது மங்கள வடிவம் |
| अस्मे | என்னிடத்தில் இருந்தருள் செய்க. |
| नः | எம்மைப் |
| रक्ष | பாதுகாப்பாயாக. |
| हे देव ! | தேவனே ! |
| अधिब्रूहि | தேவர்களிடத்தில் எம்மை உயர்த்திக் கூறுவாயாக, |
| अधाच | மற்றும், |
| द्विबर्हाः | இரண்டுலகையும் வளர்க்கும் நீ |
| नः | எமக்குச் |
| शर्म यच्छ | சுகத்தைக் கொடுப்பாயாக. |

**சாயணபாடியக் கருத்து.**

உருத்திர ! உனக்கு, முற்கூறப்பட்ட இருவகைத் திருமேனிகளுள், கோரமாகிய திருமேனி எமக்குத் தூரமாகுக, மங்களத் திருமேனி இங்கு வருக என்பதாம்.

உருத்திர ! நீ செய்கின்ற துன்பங்களை, எம்மிலிருந்து வேறானவர்களிடத்திற் செய்தருள்வாயாக என்பது கருத்து.

---

**எட்டாவது இருக்கு மந்திரம்.**

*திருஷ்டுப் சந்தம், வையாக்கிரரிஷி, உருத்திரதேவதை.*

**சுகப்படுத்துமாறு வேண்டல்,**

स्तुहि श्रुतं गर्तसदं युवानं मृगन्नभीम मुपहत्नुमुग्रम् । मृडा जरित्रे रुद्रस्तवानो अन्यन्ते अस्मन्निवपन्तु सेनाः ।

**பதவுரை.**

| | |
|---|---|
| (हे मदीयवचः !) | எனது வாக்கே ! நீ, |
| गर्तसदं | உள்ளக் கமலத்தில் நீங்காதிருக்கின்றவனும் |

| | |
|---|---|
| युवानं | கட்டிளமையுடையவனும் |
| भीमं मृगं न | பயங்கரமாகிய சிம்மத்தைப் போல் |
| उपहत्नुमुग्रं | பிரளய காலத்தில் உக்கிரமுடையவனும் |
| श्रुतं | கீர்த்தியுடையவனுமாகிய உருத்திரனைத் |
| स्तुहि | துதிப்பாயாக. |
| हे रुद्र ! | உருத்திரனே ! |
| स्तवानः | எனது வாக்கால் துதிக்கப்பெற்ற நீ |
| जरित्रे | நாடோறுங் கெடுதலடையும் இவ் வுடம்பில் |
| मृड | எம்மைச் சுகப்படுத்துவாயாக. |
| ते सेनाः | உனது சேனை |
| अस्मत् अन्यं | எம்மில் வேருகிய எமது பகைவனை |
| निवपन्तु | நாசஞ் செய்க. |

### சாயணபாடியக் கருத்து.

யான், உருத்திரனைத் துதிப்பேனுக. உருத்திர ! நீ என்னைச் சுகப்படுத்துவாயாக என்பதாம்.

கர்தசதம், என்பதற்கு = தேரின் மீதிருக்கின்றவன், அல்லது, உளத்திலிருக்கின்றவன், அல்லது, உலகை எரிக்கும் பேரொளியிலிருக்கின்றவன், அல்லது, சுடுகாட்டிலிருக்கின்றவன் எனவும், ஜரித்ரே, என்பதற்கு = துதிக்கின்ற எம்மை எனவுங் கொள்ளலாமென்க.

---

### ஒன்பதாவது இருக்கு மந்திரம்.

திருஷ்டுப் சந்தம், ரிஷியும் தேவதையும் உருத்திரனே.

ஆயுதத்தை விடாது சுகஞ்செய்யுமாறு வேண்டுதல்.

परि॑णो रु॒द्रस्य॑ हे॒तिर्वृ॑णक्तु॒ परि॑त्वे॒षस्य॑ दुर्म॒तिर॑घा॒योः । अव॑ स्थि॒रा म॒घव॑द्भ्य

स्तनुष्व॒ मीढ्व॑स्तो॒काय॒ तन॑याय मृडय ।

### பதவுரை.

| | |
|---|---|
| रुद्रस्य | உருத்திரனுடைய |
| हेतिः | ஆயுதம் |
| नः | எம்மை |

ஹோமம்)

| | |
|---|---|
| परिवृणक्तु | எவ்விடத்தும் எம்மை கொல்லாது விட்டுவிடுக. |
| त्वेषस्य | முனிவுற்றவனும் |
| अघायोः | கொல்ல விரும்பியவனுமாகிய உருத்திரனுடைய |
| दुर्मतिः | உக்கிர புத்தியும் |
| (नः परिवृणक्तु) | (எம்மை நீக்கிவிடுக.) |
| स्थिरा | பகைவனைக் கொல்ல வேண்டு மென்னும் உறுதிப் பாட்டையும் |
| मघवद्भ्यः | அவிகளையுடைய வேள்வித்தலைவர்களிலிருந்து |
| अवतनुष्व | விலக்கிக்கொள்வாயாக. |
| हे मीढ्वः ! | விரும்பியவற்றை யளிப்போய் ! நீ |
| तोकाय | எனது புதல்வனுக்கும் |
| तनयाय | அவனுடைய புத்திரனுக்கும் |
| मृडय | சுகத்தைக் கொடுப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

உருத்திரனுடைய ஆயுதமும், உருத்திரனுடைய உக்கிர புத்தியும், அதாவது நிக்கிரக சங்கற்பமும் எம்மை விலக்கி விடுவதாகுக என்பது. எனது, பிள்ளை பேரன்மார்களுக்குச் சுகமளிக்க என்பதாம்.

ஈண்டு உருத்திரனுடைய நிக்கிரகத்திற்குப் பாத்திரனுக யான் ஆகக்கூடாது. பயமின்றி அவிகளைக் கொண்டு வேள்வி செய்வேனுக என்பது கருத்தாம்.

பத்தாவது இருக்கு மந்திரம்.

பஞ்சபதா திருஷ்டுப் சந்தம், வைராஜரிஷி, தேவதை சம்பு.

தன் முன் தோன்றியருளுமாறு வேண்டல்.

मीढुष्टमशिवतम शिवोनस्सुमना भव । परमे वृक्ष आयुधन्निधाय कृत्तिं वसान आचरपिनाकं बिभ्रदागहि ।

பதவுரை.

| | |
|---|---|
| हे मीढुष्टम ! | வேண்டுவோர்க்கு வேண்டியவற்றை யளிப்போய்! |
| हे शिवतम ! | பொறுமை மிக்குடையோய் ! நீ |
| नः | எமக்கு, |
| शिवः | பொறுமையுடையவனும் |

| | |
|---|---|
| सुमनाः | அன்பார்ந்த திருவுள்ள முடையவனும் |
| भव | ஆவாயாக. |
| आयुधं | உனது ஆயுதத்தை |
| परमे वृक्षे | உயர்ந்த தருவின்மீது |
| निधाय | வைத்துவிட்டு |
| कृत्तिं वसानः | புலித்தோலை மாத்திரம் அணிந்து கொண்டு |
| आचर | எமக்கருகில் வருவாயாக. |
| पिनाकं बिभ्रत् | வரும்போது, பிநாகம் என்னும் தநுவை மாத்திரம் எடுத்துக் கொண்டு |
| आगहि | வருவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

வேண்டியவற்றை யெல்லாம் அளிப்போய்! கருணை நிறைந்த திருவுள்ளத்தோடு பொறுமை மிக்குடையனாய், திரிசூல முதலிய ஆயுதங்களை எமக்குத் தெரியாமல் உயர்ந்த ஆலமரம் முதலியவைகளில் வைத்து விட்டு, புலித் தோலை யணிந்துகொண்டு, அம்பை எடுக்காமல், தநுவை மாத்திரம் எடுத்துக் கொண்டு எமக்கு முன் தோன்றி யருள்வாயாக என்பதாம்.

மீடுஷ்டம; என்பதற்கு நல்ல ஆண்மையன் எனலுமாம்.

---

பதினோராவது இருக்கு மந்திரம்.

அநுஷ்டுப் சந்தம், புலஹரிஷி, சம்பு தேவதை

ஆயுதங்களை, பிறரிடத்துச் செலுத்துமாறு வணங்கல்.

विकिरिद्विलोहित नमस्ते अस्तु भगवः । यास्ते सहस्रं हेतयोऽन्यमस्मन्निवपन्तु ताः ।

பதவுரை.

| | |
|---|---|
| विकिरिद ! | தனங்களை நிறைய அளிப்போனும் |
| विलोहित ! | வெள்ளை நிறமுடையோனும், அல்லது, மிகுந்த செம்மையோனும் |
| भगवः | ஐசுவரியங்களை யுடையவனுமாகிய உருத்திர! |
| ते | உனக்கு |
| नमः अस्तु | எனது வணக்கம் ஆகுக. |
| ते | உன்னுடைய |

| | |
|---|---|
| **याः सहस्रं हेतयः** | ஆயிரக்கணக்கான எந்த ஆயுதங்கள் உளவோ |
| **ताः** | அவையனைத்தும் |
| **अस्मत् अन्यम्** | எம்மில் வேறான பகைவனை |
| **निवपन्तु** | நாசஞ் செய்வனவாகுக. |

சாயணபாடியக் கருத்து.

உருத்திர! உனக்கு வணக்கம். உன்னுடைய ஆயுதங்களனைத்தையும் எமது பகைவன்மீது செலுத்துவாயாக என்பதாம்.

இயற்கையில் துன்புறுத்தாதவைகளும், பிழை செய்யில் துன்பப் படுத்துகின்றவைகளுமான உனது ஆயுதங்களை, எம்பாற் செலுத்தாமல், எமது எதிரியின்மீது ஏவுவாயாக எனவும், விலோஹித, என்றதால் பெண்மை பாதித் திருமேனியன் எனவுங் கொள்ளலாம் என்க.

---

பன்னிரண்டாவது இருக்கு மந்திரம்.

அநுஷ்டுப் சந்தம், நாரதர் ரிஷி, அல்லது, கண்ணுவரிஷி, உருத்திரன் தேவதை.

ஆயுதமெடுத்துத் துன்புறுத்தாமல் ஆளவேண்டுமெனல்

सहस्राणि सहस्रधा बाहुवोस्तव हेतयः। तासामीशानो भगवः पराचीना मुखा कृधि।

பதவுரை.

| | |
|---|---|
| **हे रुद्र!** | உருத்திர! |
| **तव** | உனது |
| **बाहुवोः** | திருக்கரங்களிரண்டிலும் |
| **सहस्रधा** | ஆயிரம் வகைகளாய்ப் பிரிந்துள்ள |
| **सहस्राणि** | ஆயிரக்கணக்கான |
| **हेतयः** | ஆயுதங்களிருக்கின்றனவே, |
| **तासां** | அவைகளின் |
| **मुखा** | நுனிகளை, |
| **ईशानः** | எல்லாம் வல்லவனும் |
| **भगवः** | ஐசுவரியங்களை யுடையவனுமாகிய நீ |
| **पराचीनाकृधि** | எமக்கு எதிர்ப்படாமற் செய்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

உருத்திர! பல்வேறு வகைகளாய் ஆயிரம் வேறுபாடுகளையுடைய எண்ணிறந்த உனது ஆயுதங்களை எம்மீது செலுத்தாமல் அருள் செய்வாயாக என்பதாம்.

பத்தாம் அநுவாகம் முற்றிற்று.

---

## நான்காங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்.

## பதினோராம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் ஆறு பதங்களைக் கொண்டது

---

*பத்தாவது அநுவாகத்தில் இருக்கு வடிவான சில மந்திரங்கள் கூறப்பட்டன. பதினோராம் அநுவாகத்தில் எஞ்சிய இருக்குக்களும், எஞ்சிய எசுர் மந்திரங்களுங் கூறப்படுகின்றன.*

सहस्राणि सहस्रशो ये रुद्रा अधिभूम्याम् । तेषाᳫ सहस्रयोजने ऽवधन्वानि तन्मसि । अस्मिन्महत्यर्णवे ऽन्तरिक्षे भवा अधि । नीलग्रीवाश्शितिकण्ठाश्शर्वा अधः क्षमाचराः । नीलग्रीवाश्शितिकण्ठादिवᳫ रुद्रा उपश्रिताः । ये वृक्षेषु सस्पिञ्जरा नीलग्रीवा विलोहिताः । ये भूतानामधिपतयो विशिखासः कपर्दिनः । ये अन्नेषु विविध्यन्तिपात्रेषु पिबतो जनान् । ये पथां पथिरक्षय ऐलबृदायव्युधः । ये तीर्थानि ॥ १ ॥ प्रचरन्ति सृकावन्तो निषङ्गिणः । य एतावन्तश्च भूयाᳫसश्च दिशो रुद्रा वितस्थिरे । तेषाᳫ सहस्रयोजने ऽवधन्वानि तन्मसि । नमो रुद्रेभ्यो ये पृथिव्यां येऽन्तरिक्षे ये दिवि येषामन्नं वातो वर्षमिषवस्तेभ्यो दशप्राचीर्दश दक्षिणा दशप्रतीची र्दशोदीचीर्दशोर्ध्वास्तेभ्यो नमस्तेनो मृडयन्तु ते यन्द्विष्मो यश्चनो द्वेष्टितं वो जम्भे दधामि ॥ २ ॥

அநுவாகத்தலைப்பு சொற் குறிப்பு எண்களும், பஞ்சாதி எண்களும்.

नमस्ते, नमो हिरण्यबाहवे, नमः सहमानाय नम आव्याधिनीभ्यो, नमो भवाय, नमो ज्येष्ठाय, नमो दुन्दुभ्याय, नमः सोमायच, नमः इरिण्यायच, द्रापे सहस्राण्येकादश ॥ அநுவாகம் 11

नमस्ते, नमो भवायच, द्रापे, सप्तविꣳशतिः ॥ பஞ்சாதி 27

முதலாவது பத்து இருக்குக்களில்

முதலாவது இருக்கு மந்திரம்.

*முதல் நான்கு மந்திரங்களுக்கும் துருவாச ரிஷி.*

*எஞ்சியவைகட்கு, தேவல ரிஷி, அநுஷ்டுப் சந்தம், உருத்திரன் தேவதை*

உருத்திரர்களுடைய வில்லுகள் விழும்படி வேண்டல்.

सहस्राणि सहस्रशो ये रुद्रा अधि भूम्यां तेषाꣳ सहस्रयोजनेऽव धन्वानि तन्मसि ।

பதவுரை.

| | |
|---|---|
| भूम्यां अधि | *பூமியின் மேல்* |
| ये रुद्राः | *எவ்வுருத்திரர்கள்* |
| सहस्रशः | *ஆயிரம் வகுப்புக்களை யுடையவர்களாய்* |
| सहस्राणि | *ஆயிரக்கணக்கானவர் உளரோ,* |
| तेषां | *அவர்களுடைய* |
| धन्वानि | *வில்லுக்களைத்தும்* |
| सहस्रयोजने | *நான் இருக்குமிடத்திலிருந்து ஆயிரம்யோசனை தூரமுள்ள விடத்தில்* |
| अवतन्मसि | *நாண் கயிறு அறுந்துபோய்க் கிடக்கும்படி செய்து கொண்டிருக்கின்றேன்.* |

சாயணபாடியக் கருத்து.

*வணக்கம், துதி, வழிபாடு, வேண்டுகோள் முதலியவைகளால், நான் இருக்குமிடத்திற்கு மிகத் தூரத்தில், உருத்திரனுடைய வில்லுகளை, நாண்*

கயிற்றை அவிழ்த்துப் போடும்படி செய்கின்றேன் என்பதாம். ஒருயோசனை என்பது நான்கு குரோசங் கொண்ட தூரம்.

உருத்திரர்களுடைய வில்லுகள் ஆயிரம் யோசனை தூரத்திலிருப்பினும் நாண் கயிறு அவிழும்படி செய்கின்றேன். அங்ஙனமானால் அருகிலிருக்கின்றவைகட்கு என் சொல்ல வேண்டும் என்பது குறிப்பு.

---

இரண்டாவது இருக்கு மந்திரம்.

ஆயுதமெடுத் துத்துன்புறுத்தாமல் ஆளவேண்டுமெனல்.

अस्मिन्महत्यर्णवे ऽन्तरिक्षे भवाअधि ।

பதவுரை.

| | |
|---|---|
| अर्णवे | கடல்போல் விரிந்ததாய்க் |
| अस्मिन् | காணப்படும் இந்த, |
| महति अन्तरिक्षे | உறுதியான அந்தரிட்ச உலகில் |
| अधि भवाः | வாழ்கின்றவர்களான எவ்வுருத்திரர்களோ. |

சாயணபாடியக் கருத்து.

ஈண்டு, அவர்களுடைய வில்லுக்களனைத்தும் நான் இருக்கு மிடத்திலிருந்து நூறு யோசனை தூரம் வெளியில் நாணற்றுக் கிடக்கும்படி செய்கின்றேன், என்பதைச் சேர்த்துப் பொருள் கொள்க. இவ்வாறே மேல்வரும் எட்டு மந்திரங்களிலுஞ் சேர்த்துக் கொள்க. இவ்வாறு சேர்த்துக் கொள்ளல் வேண்டு மென்பதைக் குறிப்பிடவே பத்தாவது மந்திரத்தால் மீண்டும் அவர்களுடைய வில்லுகள் என்பது முதலிய வாக்கியங் கூறப்பட்டிருக்கின்றது என்க. வானுக்கும் மண்ணிற்கும் நடுவிலுள்ளது அந்தரிக்கமாம்.

அர்ணவே = என்பதால், கடலிலும், அந்தரிக்கத்திலும் ஈசுரர்களாக இருக்கின்றவர்கள் என்பதும் அமையும்.

---

மூன்றாவது இருக்கு மந்திரம்.

பாதாளத்திலுள்ள உருத்திரர்களைப் போற்றல்.

नीलग्रीवाश्शितिकण्ठाश्शर्वा अधः क्ष्माचराः ।

பதவுரை.

| | |
|---|---|
| नीलग्रीवाः | கழுத்தின் கறுப்பை யுடையவர்களும் |
| शितिकण्ठाः | கழுத்தின் வெண்மை யுடையவர்களுமாய் |

ஹோமம்)

अधः क्षमाचराः பூமிக்குக்கீழ் வாழ்கின்றவர்களான

यावन्तः எவ்வளவு உருத்திரர்களுளரோ,

சாயணபாடியக் கருத்து.

'அவர்களுடைய' என்பது முதலியவைகளைச் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டியது முன் போன்றது என்பதாம்.

---

நான்காவது இருக்கு மந்திரம்

சுவர்க்கத்திலுள்ள உருத்திரர்களைப் போற்றல்

नीलग्रीवाः शितिकण्ठा दिवꣳ रुद्रा उपश्रिताः ।

பதவுரை.

दिवं उपश्रिताः சுவர்க்கத்திலிருக்கின்றவர்களோ,

சாயணபாடியக் கருத்து.

சுவர்க்கத்திலிருக்கின்றவர்கள் என்பது மாத்திரம் உரையில் விசேடம். மற்றவை முன் போன்றன. அவர்களுடைய என்பது முதலியவற்றைச் சேர்த்துப் பொருள் கொள்ளலும் முன் போன்றதே என்பதாம்.

---

ஐந்தாவது இருக்கு மந்திரம்.

தருக்களிலிருக்கின்ற உருத்திரர்களைப் போற்றல்

ये वृक्षेषु सस्पिञ्जरा नीलग्रीवा विलोहिताः ।

பதவுரை.

सस्पिञ्जराः பசும்புல்லை யொத்த நிறமுடையவர்களும்

नीलग्रीवाः கறுத்த கழுத்தை யுடையவர்களும்

विलोहिताः மிகுந்த சிவப்புடையவர்களுமாய்

वृक्षेषु தருக்களில்

ये எவ்வுருத்திரர்கள் இருக்கின்றார்களோ.

சாயணபாடியக் கருத்து

அவர்களுடைய என்பது முதலிய வாக்கியங்களைச் சேர்த்துப் பொருள் கொள்ளல் முன் போன்றது என்பதாம்.

'விருக்ஷம்' என்பது தாவரசங்க உயிர்கள் ஆதலின் உலகின் பீடைகளைப் போக்குகின்றவர்கள் என்பதும் பொருள் படுமெனக்க,

ஆறாவது இருக்கு மந்திரம்.

உடம்பினுள்ளிருந்துகொண்டு பிடித்தாட்டும் பூதங்கட்குத் தலைவரான உருத்திரர்களைப் போற்றல்.

ये भूतानामधिपतयो विशिखासः कपर्दिनः ।

பதவுரை.

| | |
|---|---|
| विशिखासः | மொட்டையர்களும் |
| कपर्दिनः | சடைமுடி யுடையவர்களும் |
| भूतानां अधिपतयः | பூதங்கட்குத் தலைவர்களுமாக |
| ये | எவ்வுருத்திரர்கள் இருக்கின்றார்களோ, |

சாயணபாடியக் கருத்து.

'அவர்களுடைய' என்பது முதலிய வாக்கியங்களைச் சேர்த்துப் பொருள் கொள்ளல் முன் போன்றது என்பதாம்.

பூதம் = தேகத்திற்குள்ளிருந்து ஆட்டுவது, அதாவது பீடை யுண்டாக்கும் ஒருவித கண விசேடம்.

---

ஏழாவது இருக்கு மந்திரம்.

உணவுப்பொருள் நீர் முதலியவைகளிலுள்ள உருத்திரர்களைப் போற்றல்.

ये अन्नेषु विविध्यन्ति पात्रेषु पिबतो जनान् ।

பதவுரை.

| | |
|---|---|
| अन्नेषु | உண்ணும் உணவுப் பொருள்களுள் மறைந்திருந்து கொண்டும் |
| पात्रेषु | குடிக்கும் நீர் முதலியவைகளில் மறைந்திருந்து கொண்டும் |
| पिबतो जनान् | (அவற்றை) அருந்துகின்ற மனிதர்களை |
| ये विविध्यन्ति | எவ்வுருத்திரர்கள் பீடிக்கின்றார்களோ. |

சாயணபாடியக் கருத்து.

அவர்களுடைய, என்பது முதலிய வாக்கியங்களைச் சேர்த்துப் பொருள் கொள்ளல் முன் போன்றது என்பதாம்.

---

எட்டாவது இருக்கு மந்திரம்.

மார்க்கத்திலுள்ள உருத்திரர்களைப் போற்றல்

ये पथां पथिरक्षय ऐलबृदाय व्युधः ।

ஹோமம்)

பதவுரை.

| | |
|---|---|
| पथिरक्षयः | உலகியல் வழிகள் வைதிக வழிகளுள் சிலவற்றைப் பாதுகாக்கின்றவர்களும் |
| पथां (रक्षयः) | எல்லா நெறிகளையும் பாதுகாக்கின்றவர்களும் |
| ऐलबृदाः | உணவளித்து பாதுகாக்கின்றவர்களும் |
| यव्युधः | பகைவரை விலக்குகின்றவர்களுமான |
| ये | எவ்வுருத்திரர்களுளரோ, |

சாயணபாடியக் கருத்து.

'அவர்களுடைய' என்பது முதலிய வாக்கியங்களைச் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டியது முன்போல் என்பதாம்.

இலௌகிக வைதிக நெறிகளிற் செல்கின்றவர்களுட் சிலருக்கு உணவுப் பொருளையும் ஆயுளையுங் கொடுக்கின்றவர்கள், சிலர்கட்கு அவ்விரண்டையுங் கவர்ந்து கொள்கின்றவர்கள், சிலர்கட்கு அன்னத்தை யளித்து ஆயுளை யளிக்காதவர்கள், சிலர்கட்கு ஆயுளை யளித்து அன்ன மளிக்காதவர்கள் என்னும் வேறுபாடுடைய உருத்திரர்கள் என்பது திரண்ட பொருளாம்.

---

ஒன்பதாவது இருக்கு மந்திரம்.

தீர்த்தங்களிலிருக்கின்ற உருத்திரர்களைப் போற்றல்

ये तीर्थानि प्रचरन्ति सृकावन्तो निषङ्गिणः ।

பதவுரை.

| | |
|---|---|
| सृकावन्तः | கூரிய ஆயுதங்களைக் கைக்கொண்டவர்களும் |
| निषङ्गिणः | வாளைக் கைக்கொண்டவர்களுமாய் |
| ये | எவ்வுருத்திரர்கள் |
| तीर्थानि | காசி முதலிய தீர்த்தங்களைப் பாதுகாத்தற் பொருட்டுத் |
| प्रचरन्ति | திரிகின்றார்களோ. |

சாயணபாடியக் கருத்து.

'அவர்களுடைய' என்பது முதலிய வாக்கியங்களைச் சேர்த்துப் பொருள் கொள்ளல் முன் போல் என்பதாம்

சிலர்கட்கு தீர்த்த பயனைக் கொடுக்கவும், சிலர்கட்கு அதைத் தடுக்கவும் திரிகின்றவர்கள் என்பதுமாம்.

பத்தாவது இருக்கு மந்திரம்.

திக்குக்களிலுள்ள உருத்திரர்களைப் போற்றல்

य एतावन्तश्च भूयाꣳसश्च दिशो रुद्रा वितस्थिरे । तेषाꣳ सहस्रयोजनेऽवधन्वानि तन्मसि ।

பதவுரை.

| | |
|---|---|
| य एतावन्तश्च | முற்கூறிய இவ்வளவு உருத்திரர்களும் |
| भूयाꣳसश्च | இதனினும் மிகுதியானவர்களுமான |
| (ये) रुद्राः | எவ்வுருத்திரர்கள் |
| दिशः वितस्थिरे | எல்லாத் திசைகளிலும் நுழைந்திருக்கின்றார்களோ, |
| तेषां धन्वानि | அவர்களுடைய வில்லுகளை |
| सहस्रयोजने | ஆயிரம் யோசனை தூரத்தில் |
| अवतन्मसि | நாணற்றுக் கிடக்கச் செய்திருக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

ஆயிரம் வகைகளாக ஆயிரக்கணக்கான என்பது முதல் முற்கூறிவந்த உருத்திரர்களும், இவர்களினும் அதிகரான உருத்திரர்களுமாக யாவர்கள் உள்ளார்களோ, அவர்களுடைய வில்லுகளும் எம்மிலிருந்து மிகத் தூரமாகிய விடத்தில் நாணற்று விழும்படி செய்துள்ளேன் என்பதாம்.

இத்துடன் மூன்றுவது ஓமம் முடிந்துவிட்டது. வேள்வித்தலைவன், 'ருத்ரேப்ய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இவ்வளவென்று அளவிட முடியாதவர்களாய் திசைகளில் வியாபித்துள்ள உருத்திரர்கள் என்பது கருத்து.

---

நான்காம் விநியோகம்

பின்செய்யும் மூன்றனுள் முதல் ஹோமம்

மூன்று எசுர் மந்திரங்களுள் முதலாவது எசுர்.

பூமியிலுள்ள உருத்திரர்களைப் போற்றல்

नमो रुद्रेभ्यो ये पृथिव्यां येषामन्नमिषवः तेभ्यो दश प्राचीर्दश दक्षिणा दश प्रतीचीर्दशोदीचीर्दशोर्ध्वास्तेभ्यो नमस्ते नो मृडयन्तु ते यं द्विष्मो यश्च नो द्वेष्टि तं वो जम्भे दधामि ॥

பதவுரை.

| | |
|---|---|
| ये | எவ்வுருத்திரர்கள் |
| पृथिव्यां | மண்ணுலகில் இருக்கின்றார்களோ, அவர்களுள் |
| येषां | எவர்களுக்கு |
| अन्नं | உணவுப்பொருள் |
| इषवः | அம்புகளோ, |
| तेभ्यः रुद्रेभ्यः | அவர்களின் பொருட்டு |
| दश प्राचीः | கிழக்கு முகமாய் பத்து விரல்கள் நிற்கும்படி கை குவித்து |
| नमः | வணங்குகின்றேன். |
| दश दक्षिणा नमः | மற்றும், பத்துவிரல்களும் தெற்கு முகமாய் நிற்கும்படியும் கைகுவித்து வணங்குகின்றேன் |
| दश प्रतीचीः नमः | பத்துவிரல்களும் மேற்கில் நிற்கும்படியாகவும் கை குவித்து வணங்குகின்றேன் |
| दश उदीचीः नमः | பத்துவிரல்களும் வடக்கில் நிற்குமாறும் கை குவித்து வணங்குகின்றேன் |
| दश ऊर्ध्वाः नमः | பத்துவிரல்களும் மேலே நிற்கும் வண்ணமும் கைகுவித்து வணங்குகின்றேன் |
| ते | அவ்வுருத்திரர்கள் |
| नः | எம்மைச் |
| मृडयन्तु | சுகப்படுத்துவார்களாக. |
| यं | எவனை |
| द्विष्मः | யாம் வெறுக்கின்றேமோ, |
| यश्च | எவன் |
| नः | எம்மை |
| द्वेष्टि | வெறுக்கின்றனோ, |
| तं | அவனை |
| वः | (உருத்திரர்காள்!) உங்களுடைய |
| जंभे | அகன்றவாயிற் |
| दधामि | போட்டுவிடுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

பூமியிலிருந்து கொண்டு, பத்தியமிலாத உணவருந்தல், விருப்பால் மிக அருந்தல், அருந்தத்தகாததை யருந்தல் முதலியவைகளின் வாயிலாகத் துன்

புறுத்துகின்றார்களோ, அவர்களின் பொருட்டு வணக்கம். அவர்கள், எமது பகைவரை நீக்கி எமக்குச் சுகந் தருவார்களாக என்பதாம்.

அன்னமுண்டும், அன்னமுண்ணுதும், அன்னத்தைத் திருடியும், மற்றும் பலவகையாக அன்ன நிமித்தம் துன்பப்படுத்துகின்றவர்கள் என்பது கருத்து. ஜம்பே = பல்லில்.

இம் மந்திரத்தால், வேட்போன் வலம் வந்து முன்போல் நின்றுகொண்டு முகத்திற்குச் சமமாய் மூங்கிலைப் பிடித்துக்கொண்டு தாரையாகப் பாலை விடும்போது 'ஸ்வாஹா' என்பதுடன் ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதை யுணர்க.

---

ஐந்தாம் விநியோகம்

இரண்டாவது ஹோமம்

இரண்டாவது எசுர் மந்திரம்.

அந்தரிக்ஷத்திலுள்ள உருத்திரர்களைப் போற்றல்.

नमो॑ रु॒द्रेभ्यो॒ येऽन्तरि॑क्षे॒ येषां॒ वात॒ इषं॑वस्तेभ्यो॒ दश॒ प्रा॒चीर्दश॒॑ दक्षि॒णा
दश॑ प्र॒तीची॒र्दशोदी॑ची॒र्दशो॒र्ध्वास्तेभ्यो॒ नम॒स्ते नो॑ मृडयन्तु॒ ते यं द्वि॒ष्मो
यश्च॑ नो॒ द्वेष्टि॒ तं वो॒ जम्भे॑ दधामि ॥

பதவுரை.

| | |
|---|---|
| ये अन्तरिक्षे | பூமிக்கும் வானுக்கும் நடுவில் (அந்தரிக்க வுலகில்) எவ்வுருத்திரர்களிருக்கின்றார்களோ, அவர்களுள் |
| येषां | எவர்கட்கு |
| वात: | வாயுக்கள் |
| इषव: | அம்புகளோ, |

சாயணபாடியக் கருத்து.

அவர்களின் பொருட்டு, என்பது முதலியவைகளை முன்போற் சேர்த்துப் பொருள் கொள்க. புயற்காற்று முதலிய வாயுக்களால் துன்புறுத்துகின்ற உருத்திரர்கள் என்பதாம்.

இம் மந்திரத்தால் முன்போல் இரண்டாவது (2) ஹோமஞ் செய்தல் வேண்டும் என்க.

---

ஆறும் விநியோகம்.

மூன்றுவது ஹோமம்

மூன்றுவது எசுர் மந்திரம்.

வானுலகிலுள்ள உருத்திரர்களைப் போற்றல்.

नमो॑ रु॒द्रेभ्यो॒ ये दि॒वि येषां॑ व॒र्षमिष॑वः तेभ्यो॒ दश॒ प्राची॒र्दश॑ दक्षि॒णा दश॑ प्र॒तीची॒र्दशोदी॑ची॒र्दशो॒र्ध्वास्तेभ्यो॒ नम॒स्ते नो॑ मृडयन्तु॒ ते यं द्वि॒ष्मो यश्च॑ नो॒ द्वेष्टि॒ तं वो॒ जम्भे॑ दधामि ॥

பதவுரை.

| | |
|---|---|
| ये दिवि (स्थिताः) | வானுலகில் எவ்வுருத்திரர்களிருக்கின்றார்களோ, அவர்களுள் |
| येषां | எவர்கட்கு |
| वर्षं | மழைகள் |
| इषवः | அம்புகளோ, |

சாயணபாடியக் கருத்து.

'அவர்களின் பொருட்டு' என்பது முதலியவைகளைச் சேர்த்துப் பொருள் கொள்ளல் முன் போன்றது. மழையின்மையாலும், மிகு மழையாலும் துன்புறுத்துகின்ற உருத்திரர்கட்கு வணக்கம் என்பதாம்.

இம் மந்திரத்தால் முன்போல் மூன்றுவது ஹோமஞ் செய்தல் வேண்டும். இவைகட்கு வசம் வருதல் இல்லை, மூன்றிற்கும் 'ருத்ரேப்ய இதம்' என்று தியாகங்கள் செய்தல் வேண்டும்.

இத்துடன் பின் செய்யும் மூன்று 'சித்பக்னிஹோமங்களும்' முடிந்து விட்டன.

பிறகு, வேட்போன் இம் மூன்று எசுர் மந்திரங்களை, வேள்வித் தலைவன் ஓதும்படி செய்வித்தல் வேண்டும்.

அதன் பின், பால் விட்ட மூங்கிலையும் எருக்கம் இலையையும், பசுமாடுகள் நடமாடாத விடத்திற் போட்டு விடல் வேண்டும். பிறகு, இருவரும் கையில் தண்ணீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

உருத்திராத்தியாயம் ஐந்தாவது பிரபாடகம் முடிந்தது.

---

## பரிசேடம்.

வேட்போன், உலகத் தீயில், காட்டுக் கோதுமைப் பொங்கல் செய்து கா-5, பிர-5, அநு-7, 'यो रुद्रो अग्नौ' என்பது முதலிய மந்திரத்தால், முன் சத ருத்திரீய ஹோமங்கள் செய்த செங்கலின்மீது போட்டுவிட்டு, கையில் நீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேள்வித்தலைவன், மூன்று அம்புகளுடன் ஒரு வில்லையும் வேட்போனிடங் கொடுத்தல் வேண்டும். அவன், அதை வாங்கிக்கொண்டு மகாக்கினி சயனத்தின் மேற்கில் கிழக்கு முகமாய் வில்லில் அம்பைவைத்துத் தொடுப்பவன் போன்று நிற்கவேண்டும். வேள்வித்தலைவன், சயனத்திற்குக் கிழக்கே மேற்கு முகமாய் நின்றுகொண்டு, அவ் வில்லையும் சயனத்தையும் பார்த்துக்கொண்டு, மேற்படி ஐந்தாங் காண்ட மந்திரமாகிய 'यत्ते रुद्रपुरः' என்பது முதலிய மந்திரத்தால் கை குவித்துக்கொண்டு போற்றல் வேண்டும்.

பிறகு வேட்போன், வட பக்கச் சிறகின் வட பக்கத்தில் தெற்கு முகமாய் நின்றுகொண்டும், வேள்வித்தலைவன் தெற்குச் சிறகின் தெற்குப் பக்கத்தில் வடக்கு முகமாக நின்றுகொண்டும் முன்போல், 'यत्ते रुद्र दक्षिणा' என்பது முதலிய முந்திய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முன்போலவே போற்றல் வேண்டும்.

பிறகு, வேட்போன், கிழக்கில் மேற்கு முகமாகவும், வேள்வித்தலைவன் அப்பிரதக்ஷிணமாய் வந்து மேற்கில் கிழக்கு முகமாகவும் முன்போல் நின்றுகொண்டு, 'यत्ते रुद्र पश्चात्' என்பது முதலிய முந்திய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முன்போலவே கை குவித்துக்கொண்டு போற்றுதல் வேண்டும்.

பிறகு, வேட்போன் தெற்குச் சிறகிற்குத் தென் பக்கமாய் வடக்கு முகமாகவும், வேள்வித்தலைவன், வடக்குச் சிறகிற்கு வட பக்கமாய்த் தெற்கு முகமாகவும் முன்போலவே நின்று கொண்டு, 'यत्ते रुद्रोत्तरात्' என்பது முதலிய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முன்போலவே கை குவித்துக்கொண்டு போற்றுதல் வேண்டும்.

அதன் பிறகு, இருவரும் அப்பிரதட்சிணமாகவே வந்து கிழக்கில் மேற்கு முகமாக வேட்போனும், மேற்கில் கிழக்கு முகமாக வேள்வித்தலைவனும் முன்போன்றே நின்றுகொண்டு, 'यत्ते रुद्रोपरि' என்பது முதலிய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முன்போலவே கை குவித்துக்கொண்டு போற்றல் வேண்டும்.

மற்றும், இவ்வைந்து மந்திரங்களை மாத்திரம் வேள்வித்தலைவன் ஓதல் வேண்டும்; வேட்போன் ஓதுதல் இல்லை.

பரிசேடம் முடிந்தது

ஐந்தாம் பிரபாடகம் முற்றிற்று.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## நான்காங் காண்டத்தில் ஏழாம் பிரபாடகம்.

### உபோற்காதம்

இக் காண்டத்தின் நான்காம் பிரபாடகம் பதினோராவது அநுவாகம் வரை யிற் செங்கலடுக்குகள் கூறி முடிந்தன. ஐந்தாம் பிரபாடகத்தில், அச் செங்க லடுக்குக்களாகிய சயனத்தில் ஓமங் கூறப்பட்டது. அதுவே ருத்திராத்யாயம் எனப்படும். ஆறும் பிரபாடகத்தில், அக்கினி சமஸ்காரங் கூறப்பட்டது. அதுவும், ஆறும் பிரபாடகத்தின் ஐந்தாவது அநுவாகம் வரையிலாம். எஞ்சிய சமஸ்கார விசேடங்கள், அதாவது வசோர்த்தாரை முதலியவைகள் இவ் வேழாம் பிரபாடகத்தில் கூறப்படுகின்றன. இதுவே சமகப் பிரசின மெனப் படும். இதினும் ஏழாம் பிரபாடகம் பதினான்காம் அநுவாகத்தோடு மகாக்கினி சயனம் முடிவாகின்றது; பதினைந்தாவது அநுவாகமோ, அசுவமேதத்தின் ஒருவகை யாஜ்யாநு வாக்கியங்களாம். இத்துடன் இந் நான்காங் காண்டமும் முடிவாகின்றது.

ஈண்டு, ஆறும் பிரபாடகத்தின் பிற்பாதி நான்கு அநுவாகங்களில் அசுவ மேதயாக கருமங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இதில், அசுவமேத யாகத்தைக் கூறுவது எவ்வாற்றானுஞ் சம்பந்தமிலாததேயாம்.

இதுபற்றியே, சாயணரும், ஐந்தா மநுவாகத்தில், சிதியின் மீதேறுதல் முதல் மாருத ஹோமம்வரை அங்கவிசேடங்கள் கூறப்பட்டன; இனி, ஆறு வது அநுவாகத்தில் அசுவமேத யாகத்தின் இரதசச்சீகர பாவினி கவச சுவீ கார முதலியன கூறப்படுகின்றன. அதற்கு, அக்கினிப் பிரகரணத்தில் சம் பந்தமின்மையின் இதை எடுத்து அசுவமேதப் பிரகரணத்தில் சம்பந்தப்படுத் திக் கொள்ளவும், என்று பாடியத்திற் கூறியுள்ளார்.

மற்றும், இங்கு, அசுவமேதத்தைக் கூறியதோ, கேவலம் ஓதும் பொருட் டேயாம் என்பதை யுணர்க.

மேலே கூறிய வகையில், ருத்திராத்தியாயத்தின் நடுவில் கூறியதால் அசுவமேதத்திற்கு ஒருவித சம்பந்தமும் இல்லையென்பது வெளிப்படையாம்.

அஃதன்றியும், தைத்திரீய சம்ஹிதையில் அநுட்டான முறையின்றியும் சில மந்திரங்கள் படிக்கப்பட்டிருக்கின்றன; அவைகளை, கல்பசூத்திரங்கள் ஆங்காங்கு எடுத்துச் சம்பந்தவகை பற்றி முன்பின்னாகக் கூட்டி விநியோகப் படுத்துகின்றன.

பிரயோககாரர்களும், மற்றுஞ்சில உரைகாரர்களும் உருத்திராத்தியாயத் திறற் செய்யப்படும் மகாக்கினிசயன ஹோம முதலியவைகட்குப் பிறகு, வசோர்த்தாரையாகிய ஹோமத்தைக் கூறும் சமகப்பிரபாடகத்தையே பிரயோகஞ் செய்திருக்கின்றார்கள்; அதுவே இங்குப் பொருத்த முடையதுமாம். ஆதலின், யாம் ஈண்டு, ஆறாம் பிரபாடகத்தில் அசுவமேதத்தைக் கூறும் நான்கு அநுவாகங்களையும், அவைகளோடு சம்பந்தமுடையதும், ஏழாம் பிரபாடகத்தின் முடிவுமாகிய அசுவமேத சம்பந்தி யாஜ்யா புரோநு வாக்கியத்தைக் கூறும் பதினைந்தாம் அநுவாகத்துடன் சேர்த்துள்ளோம். பாடமுறையினும் அநுட்டான முறையே வலிவுடையதா மென்பது பூருவ மீமாஞ்சையின் முக்கியக் கருத்தாம்; ஆதலின் இதுவே ஈண்டுப் பொருந்துமாறு உய்த்துணர்ந்து கொள்ளற்பாலது.

---

## நான்காங் காண்டம் ஏழாவது பிரபாடக
### விடயச் சுருக்கம்.

परिषेचनमुख्यास्तु संस्काराः षष्ठ ईरिताः ।
वसोर्धारादयः शिष्टाः प्रोच्यन्तेऽस्मिंस्तु सप्तमे ॥ १ ॥
अग्ना विष्णू वसोर्धारा मेकादशभिरादितः ।
अनुवाकैर्जुहोत्येकामाहुतिं संततां घृताम् ॥ २ ॥

சயனத்தைச் சுற்றிலும் நீர் தெளித்தல் முதலிய முக்கிய சமஸ்காரங்கள ஆறாவது பிரபாடகத்திற் கூறப்பட்டன. இவ்வேழாம் பிரபாடகத்தில், எஞ்சிய 'வசோர்த்தாரை' என்பது கூறப்படுகின்றது. அதாவது, முதலில் நான்கு முறை நெய்யெடுத்து ஒரு ஆகுதி செய்தல், பிறகு, பதினொரு அநுவாகங்களாலும் இடையறாது செய்யும் ஒரு நெய் ஹோமமாம். இதுவே அவிர்த்தாரையெனப்படும் என்பது.

# நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்.

இது, சமகப்பிரசின மெனப்படும்.

## முதல் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

### இடைவிடாது செய்கின்ற வசோர்த்தாரை யென்னும் நெய் யோமத்தைக் கூறு மந்திரம்.

*ஈண்டு, பதினொரு அநுவாக மந்திரங்களும் ஒன்று சேர்ந்து ஒரேமந்திர மாகின்றது; ஆதலின், இதனால் ஒரு ஹோமஞ் செய்யப்படுகின்றது.*

*மந்திரம் ஒன்றேயாயினும், வேள்வியைத்தவிர்த்த ஏனைய கருமச்செயல்களைக் கொண்டு பதினொரு அநுவாகங்கள் என அநுவாகங்களின் வேறுபாடுகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. இங்குள்ள வேள்விப்பிரகரணத்தை நோக்கிலோ, இவை ஒரே மந்திரமாம்; இதிற் பாகுபாடென்பது இல்லை. இதில், ச, என்பது (உம்மை) மே என்பது (எனக்கு) என்னும் இரண்டு சொற்களும் மிகுதியாயிருத்தல் பற்றி இது சமகமென வழங்கப் பெறும்.*

*உருத்திராத்தியாயத்தால், மகாக்கினி சயனமாகிய உருத்திரனைச் சாந்தப்படுத்திக்கொண்டு, இச் சமக மந்திரத்தால், விரும்பியவைகள் வேண்டப் படுகின்றன என்பது இதன் சாரம்.*

---

முதலாவது ஹோமம்

மந்திரம் :

अग्ना॑विष्णू स॒जोष॑से॒मा व॑र्धन्तु वां॒ गिरः॑ । द्यु॒म्नैर्वाजे॑भि॒राग॑तम् ।

பதவுரை.

**अग्ना विष्णू** *அக்கினி விஷ்ணுக்களே!*
**सजोषसा (भवतम्)** *நீவிரிருவரும் ஒத்த அன்புடையவர்களாகுக,*
**वां इमा गिरः** *உங்களைத் துதிக்கும் இவ் வாக்குக்கள்*
**वर्धन्तु** *வளர்வனவாகுக.*
**(युवां)** *நீங்களிருவரும்*

| | |
|---|---|
| द्युम्नैः | தனங்களோடும், |
| वाजेभिः | உணவுப் பொருள்களோடும் |
| आगतम् | இங்கு வருவீர்களாக. |

அக்கினியையும் விஷ்ணுவையும், ஈசுரனும் சத்தியும் என்பர் சிலர். இவர்களே மேல் வேண்டப்படுகின்றவைகளைக் கொடுத்தருள்கின்றவர்கள் என்பதை யுணர்க.

### சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இம்மந்திரத்துடன், 'சுவாஹா' என்னுஞ் சொல்லையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு, சுருவில் நான்கு முறை நெய்யெடுத்து ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'அக்நா விஷ்ணுப்யாமிதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். இதன் விரிவை, கா-5, பிர-7, அநு-3ல் காண்க.

---

## இரண்டாவது ஹோமம்

வசோர்தாரை யென்னும் ஒரு நெய்யோமத் தொடக்கம்.

மந்திரம் :

वाजश्चमे प्रसवश्चमे प्रयतिश्चमे प्रसितिश्चमे धीतिश्चमे क्रतुश्चमे
स्वरश्चमे श्लोकश्चमे श्रावश्चमे श्रुतिश्चमे ज्योतिश्चमे सुवश्चमे प्राणश्चमे
ऽपानः ॥ १ ॥ चमे व्यानश्चमेऽसुश्चमे चित्तञ्चम आधीतञ्चमे
वाक्चमे मनश्चमे चक्षुश्चमे श्रोत्रञ्चमे दक्षश्चमे बलञ्चम ओजश्चमे
सहश्चम आयुश्चमे जराचम आत्माचमे तनूश्चमे शर्मचमे वर्मचमे
ऽङ्गानिचमेऽस्थानिचमे परूꣳषिचमे शरीराणिचमे ॥ २ ॥

### பதவுரை

| | |
|---|---|
| वाजश्च मे | அன்னமும் எனக்கு உண்டாகுக. |
| प्रसवश्च मे | அன்னமிடும் மனதும் எனக்கு உண்டாகுக. |
| प्रयतिश्च मे | புனிதமும் எனக்கு உண்டாகுக. |
| प्रसितिश्च मे | அன்னத்தில் மிக விருப்பமும் எனக்குஉண்டாகுக. |

சமகம்)

| | |
|---|---|
| पीतिश्च मे | அன்னத்தை யேற்றுக்கொள்ளும் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| क्रतुश्च मे | அன்னத்திற்குக் காரணமாகிய வேள்வியும் எனக்கு உண்டாகுக. |
| स्वरश्च मे | ஸ்வரமும் (சந்தமும்) எனக்கு உண்டாகுக. |
| श्लोकश्च मे | புகழும் எனக்கு உண்டாகுக. |
| श्रावश्च मे | இன்சொல்லும் எனக்கு உண்டாகுக. |
| श्रुतिश्च मे | சொல்வதைக் கேட்கும் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| ज्योतिश्च मे | சொல்லின் விளக்கமும் எனக்கு உண்டாகுக. |
| सुवश्च मे | சுவர்க்கமும் எனக்கு உண்டாகுக. |
| प्राणश्च मे | பிராணனும் எனக்கு உண்டாகுக. |
| अपानश्च मे | அபானனும் எனக்கு உண்டாகுக. |
| व्यानश्च मे | வியானனும் எனக்கு உண்டாகுக. |
| असुश्च मे | வாயுவும் எனக்கு உண்டாகுக. |
| चित्तञ्च मे | சிந்தனையிற் சிறந்த சித்தமும் எனக்கு உண்டாகுக. |
| आधीतञ्च मे | சித்தத்தா லுணரப்பட்ட பொருளும் எனகரு உண்டாகுக. |
| वाक्च मे | சொல்லாற்றலும் எனக்கு உண்டாகுக. |
| मनश्च मे | நல்ல மனதும் எனக்கு உண்டாகுக. |
| चक्षुश्च मे | கூரிய கண்களும் எனக்கு உண்டாகுக. |
| श्रोत्रञ्च मे | நன்கு கேட்கும் செவிகளும் எனக்கு உண்டாகுக. |
| दक्षश्च मे | ஞானேந்திரியங்களின் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| बलञ्च मे | கருமேந்திரியங்களின் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| ओजश्च मे | வன்மைதரும் வீரியமும் எனக்கு உண்டாகுக. |
| सहश्च मे | பகைவரை யடக்குந் திறமையும் எனக்கு உண்டாகுக. |
| आयुश्च मे | நீண்ட ஆயுளும் எனக்கு உண்டாகுக. |
| जरा च मे | நரை வரும்வரை உள்ளவாழ்நாளும் எனக்கு உண்டாகுக. |

| | |
|---|---|
| आत्माच मे | பரமான்மாவின் இலாபமும் எனக்கு உண்டாகுக. |
| तनूश्च मे | அழகிய உடம்பும் எனக்கு உண்டாகுக. |
| शर्मच मे | இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| वर्मच मे | உடலைப் பாதுகாக்குங் கவசமும் எனக்கு உண்டாகுக. |
| अङ्गानिच मे | நிறைந்த அவயவங்களும் எனக்கு உண்டாகுக. |
| अस्थानिच मे | அங்கங்குள்ள எலும்புகளும் எனக்கு உண்டாகுக. |
| परूंषिच मे | விரல்களிலுள்ள கணுக்களும் எனக்கு உண்டாகுக. |
| शरीराणिच मे | மற்றுமுள்ள அவயவ விசேடங்களும் எனக்கு உண்டாகுக என்பது. |

ஈண்டு, மேல்வரும் பத்தாமநுவாகத்திலுள்ள 'कल्पताम्' 'உண்டாகுக' என்பதை, ஒவ்வொன்றோடுஞ் சேர்த்துப் பொருள் கூறப்பட்டிருக்கின்றது. மேலும் இவ்வாறேவரும்.

அக்கினி (உருத்திர) விஷ்ணுக்களே! நீங்கள், மேலே வேண்டப் பெற்றவைகளை, இவ் வேள்வியால் எமக்கு உண்டாகும்படி அருள் செய்வீர்களாக என்பது கருத்து. இவ்வாறே மேலும் உய்த்துணர்க.

முதலாவது அநுவாகம் முடிந்தது.

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## இரண்டாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் பதினைந்து பதங்களைக் கொண்டது

ज्यैष्ठ्यंश्च म आधिपत्यश्चमे मन्युश्चमे भामश्चमेऽमश्चमेऽम्भश्चमे जेमाचमे महिमाचमे वरिमाचमे प्रथिमाचमे वर्ष्माचमे द्राघुयाचमे वृद्धश्चमे वृद्धिश्चमे सत्यश्चमे श्रद्धाचमे जगच ॥ १ ॥ मे धनश्चमे वशश्चमे त्विषिश्चमे क्रीडाचमे मोदश्चमे जातश्चमे जनिष्यमाणश्चमे सूक्तश्चमे सुकृतश्चमे वित्तश्चमे वेद्यश्चमे भूतश्चमे भविष्यच्चमे

சமகம்)

सुगंश्चमे सुपथंश्चम ऋद्धंश्चम ऋद्धिश्चमे क्लृप्तंश्चमे क्लृप्तिश्चमे मति-

श्चमे सुमतिश्चमे ॥ २ ॥

---

### பதவுரை.

| | |
|---|---|
| ज्यैष्ठ्यञ्चमे | மிக மேம்பாடுடைய தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| आधिपत्यञ्च मे | அனைவருக்குந் தலைவனாந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| मन्युश्च मे | நேரிற் கண்டதாலெழும் மனத்தின் உள் முனிவும் எனக்கு உண்டாகுக. |
| भामश्च मे | உடம்பின் செயலுடன் வெளியிலெழுங் கோபமும் எனக்கு உண்டாகுக. |
| अमश्च मे | பகைவனால் இதுவென்று காண முடியாமையும் எனக்கு உண்டாகுக. |
| अम्भश्च मे | குளிர்ச்சி இன்சுவையுடன் கூடிய தண்ணீரும் எனக்கு உண்டாகுக. |
| जेमा च मे | வெற்றிபெறும் ஆற்றலும் எனக்கு உண்டாகுக. |
| महिमा च मे | பெருமையும், வெற்றியாற்பெற்ற தன முதலிய சம்பத்துடைமையும் எனக்கு உண்டாகுக. |
| वरिमा च मे | போற்றத்தக்க தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| प्रथिमा च मे | பரந்த மனை நிலம் முதலியவைகளை யுடையதாந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| वर्ष्मा च मे | பிள்ளை பேரன்மார்களும் எனக்கு உண்டாகுக. |
| द्राघुया च मे | கெடாத புத்திர பவுத்திர பரம்பரையும் எனக்கு உண்டாகுக. |
| वृद्धञ्च मे | மிகுந்த தனமும் அன்னமும் எனக்கு உண்டாகுக. |
| वृद्धिश्च मे | கல்வி முதலியவற்றால் மேம்பாடுடைமையும் எனக்கு உண்டாகுக. |
| सत्यञ्च मे | மெய்மை கூறுதலும் எனக்கு உண்டாகுக. |
| श्रद्धा च मे | பரலோகம் உண்டென்னும் நம்பிக்கையும் எனக்கு உண்டாகுக. |
| जगच्च मे | தாவர சங்கமங்களான உலகமும் எனக்கு உண்டாகுக. |

धनञ्च मे — பொன் முதலிய தனமும் எனக்கு உண்டாகுக.

वशश्च मे — அனைத்தையும் அடக்கிக் கொள்ளுந் தன்மையும் எனக்கு உண்டாகுக.

त्विषिश्च मे — உடம்பின் அழகும் எனக்கு உண்டாகுக.

क्रीडा च मे — சதுரங்க ஆட்டமும் எனக்கு உண்டாகுக.

मोदश्च मे — அதனால் வருங் களிப்பும் எனக்கு உண்டாகுக.

जातञ्च मे — முன் பிறந்த சந்ததியும் எனக்கு உண்டாகுக.

जनिष्यमाणञ्च मे — பிறக்கப் போகுஞ் சந்ததியும் எனக்கு உண்டாகுக.

सूक्तञ्च मे — இருக்கு மந்திரத் தொகுதியும் எனக்கு உண்டாகுக.

सुकृतञ्च मे — அதனால் வரும் புண்ணியமும் எனக்கு உண்டாகுக.

वित्तञ्च मे — முன் தனத்தைப் பெறுதலும் எனக்கு உண்டாகுக.

वेद्यञ्च मे — இனிமேல் தனத்தை யடையுந் தன்மையும் எனக்கு உண்டாகுக.

भूतञ्च मे — முன்னர் நில முதலியவற்றை யடையுந் தன்மையும் எனக்கு உண்டாகுக.

भविष्यच्च मे — பிறகு நில முதலியவற்றை யடையுந் தன்மையும் எனக்கு உண்டாகுக.

सुगञ्च मे — இனிது செல்லத்தக்க சுற்றத்தார் கிராமமும் எனக்கு உண்டாகுக.

सुपथञ्च मे — கள்ளர் பயமிலாத வழியும் எனக்கு உண்டாகுக.

ऋद्धञ्च मे — ஆசரித்த கருமத்தின் பயனும் எனக்கு உண்டாகுக.

ऋद्धिश्च मे — அநுட்டிக்கப்படும் சத்திர யாகப் பயனும் எனக்கு உண்டாகுக.

क्लृप्तञ्च मे — வேண்டிய அளவு பொருளும் எனக்கு உண்டாகுக.

क्लृप्तिश्च मे — அதற்குரிய ஆற்றலும் எனக்கு உண்டாகுக.

मतिश्च मे — அரிய யூகமும் எனக்கு உண்டாகுக.

सुमतिश्च मे — அரசாங்கத்திற்குரிய நுண்ணிய அறிவும் எனக்கு உண்டாகுக.

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## மூன்றாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் எட்டுப் பதங்களைக் கொண்டது

शश्च॑मे मय॑श्चमे प्रि॒यञ्च॑मेऽनुका॒मश्च॑मे॒ काम॑श्चमे सौमन॒सश्च॑मे
भ॒द्रञ्च॑मे॒ श्रेय॑श्चमे॒ वस्य॑श्चमे॒ यश॑श्चमे॒ भग॑श्चमे॒ द्रवि॑णञ्चमे यन्ता च॑मे
ध॒र्ता च॑मे॒ क्षेम॑श्चमे॒ धृति॑श्चमे॒ विश्व॑ञ्च ॥ १ ॥ मे॒ मह॑श्चमे सं॒विच्च॑मे॒
ज्ञात्र॑ञ्चमे॒ सूश्च॑मे प्र॒सूश्च॑मे॒ सीर॑ञ्चमे ल॒यश्च॑म ऋ॒तञ्च॑मे॒ऽमृत॑ञ्चमेऽयक्ष्म-
ञ्चमे॒ऽनाम॑यच्चमे जी॒वातु॑श्चमे दीर्घायु॒त्वञ्च॑मेऽनमि॒त्रञ्च॑मे॒ऽभ॑यञ्च॑मे
सु॒गञ्च॑मे॒ शय॑नञ्चमे सू॒षा च॑मे सु॒दिन॑ञ्चमे ॥ २ ॥

---

### பதவுரை.

| | |
|---|---|
| शञ्च मे | இவ்வுலக இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| मयश्च मे | பரலோக இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| प्रियञ्च मे | நேரில் விரும்பத்தக்க பொருளும் எனக்கு உண்டாகுக. |
| अनुकामश्च मे | பொருளையடைந்ததால் வரும் இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| कामश्च मे | பொருளை அநுபவித்தலால் வரும் இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| सौमनसश्च मे | மனநலந்தருஞ் சுற்றமும் எனக்கு உண்டாகுக. |
| भद्रञ्च मे | இவ்வுலகில் நலந்தருவதும் எனக்கு உண்டாகுக. |
| श्रेयश्च मे | மேலுலகில் நலந்தருவதும் எனக்கு உண்டாகுக. |
| वस्यश्च मे | வாழ்தற்குரிய வீடு முதலியதும் எனக்கு உண்டாகுக. |
| यशश्च मे | கீர்த்தியும் எனக்கு உண்டாகுக. |
| भगश्च मे | நற்பாக்கியமும் எனக்கு உண்டாகுக. |
| द्रविणञ्च मे | தனமும் எனக்கு உண்டாகுக. |

| | |
|---|---|
| यन्ताच मे | நன்னெறியிற் செலுத்தும் ஆசிரியன் முதலானோரும் எனக்கு உண்டாகுக. |
| धर्ताच मे | பாதுகாக்குந் தந்தை முதலானோரும் எனக்கு உண்டாகுக. |
| क्षेमश्च मे | உள்ள தனத்தைப் பரிபாலிக்கும் ஆற்றலும் எனக்கு உண்டாகுக. |
| धृतिश्च मे | ஆபத்தினுற் கலங்காமையும் எனக்கு உண்டாகுக. |
| विश्वञ्च मे | அனைவருக்கும் இனிமையாயிருத்தலும் எனக்கு உண்டாகுக. |
| महश्च मे | பூசையும் எனக்கு உண்டாகுக. |
| संविच्च मे | வேதசாத்திரங்களின் உணர்ச்சியும் எனக்கு உண்டாகுக. |
| ज्ञात्रञ्च मे | பிறருக்கு அறிவுறுத்தும் ஆற்றலும் எனக்கு உண்டாகுக. |
| सूश्च मे | பிள்ளை முதலானோர்களை நடாத்தும் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| प्रसूश्च मे | ஏவலாளர் முதலானோரைச் செலுத்தும் ஆற்றலும் எனக்கு உண்டாகுக. |
| सीरञ्च मे | பயிரிடும் வளமும் எனக்கு உண்டாகுக. |
| लयश्च मे | அதன் தடைகள் நீக்கமும் எனக்கு உண்டாகுக. |
| ऋतञ्च मे | யாகம் முதலிய நற்கருமமும் எனக்கு உண்டாகுக. |
| अमृतञ्च मे | அதன் பயனும் எனக்கு உண்டாகுக. |
| अयक्ष्मञ्च मे | காச முதலிய இராஜ நோயில்லாமையும் எனக்கு உண்டாகுக. |
| अनामयच्च मे | காய்ச்சல் முதலிய சிறு நோயின்மையும் எனக்கு உண்டாகுக. |
| जीवातुश्च मे | நோயற்று வாழ்வதற்குரிய மருந்தும் எனக்கு உண்டாகுக. |
| दीर्घायुत्वञ्च मे | காலகருமங்களை யநுசரியாத மரணமிலாமையும் எனக்கு உண்டாகுக. |
| अनमित्रञ्च मे | பகையிலாமையும் எனக்கு உண்டாகுக. |
| अभयञ्च मे | பயமின்மையும் எனக்கு உண்டாகுக. |
| सुगञ्च मे | நல்லொழுக்கமும் எனக்கு உண்டாகுக. |

சமகம்)

| | |
|---|---|
| शयनञ्च मे | நல்ல படுக்கை, தலையணை முதலியதும் எனக்கு உண்டாகுக. |
| सुषाच मे | நீராடல் முதலிய காலைக் கடனைச் செய்யுந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| सुदिनञ्च मे | வேள்வி, ஈகை முதலியவற்றைச் செய்யும் நல்ல நாளும் எனக்கு உண்டாகுக. |

மூன்றாவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்.

### நான்காவது அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் பதினொன்று பதங்களைக் கொண்டது.

ऊर्क्चमे सूनृताचमे पयश्चमे रसश्चमे घृतञ्चमे मधुचमे सग्धि-
श्चमे सपीतिश्चमे कृषिश्चमे वृष्टिश्चमे जैत्रञ्चम औद्भिद्यञ्चमे रयिश्चमे
रायश्चमे पुष्टञ्चमे पुष्टिश्चमे विभुच ॥ १ ॥ मे प्रभुचमे बहुचमे
भूयश्चमे पूर्णञ्चमे पूर्णतरञ्चमेऽक्षितिश्चमे कूयवाश्चमेऽन्नञ्चमेऽक्षुच्चमे
व्रीहयश्चमे यवाश्चमे माषाश्चमे तिलाश्चमे मुद्गाश्चमे खल्वाश्चमे
गोधूमाश्चमे मसुराश्चमे प्रियङ्गवश्चमेऽणवश्चमे श्यामाकाश्चमे नीवा-
राश्चमे ॥ २ ॥

---

பதவுரை

| | |
|---|---|
| ऊर्क्च मे | உணவுப் பொருளும் எனக்கு உண்டாகுக. |
| सूनृताच मे | பிரியமாகிய சொல்லும் எனக்கு உண்டாகுக. |
| पयश्च मे | பாலும் எனக்கு உண்டாகுக. |
| रसश्च मे | பாலாடையும் எனக்கு உண்டாகு. |
| घृतश्च मे | நெய்யும் எனக்கு உண்டாகுக. |
| मधुच मे | தேனும் எனக்கு உண்டாகுக. |
| सग्धिश्च मे | சுற்றத்தாருடன் உண்ணலும் எனக்கு உண்டாகுக. |

| | |
|---|---|
| सपीतिश्च मे | சுற்றத்தோடு கூடிக் குடித்தலும் எனக்கு உண்டாகுக. |
| कृषिश्च मे | உழுது பயிரிடுதலும் எனக்கு உண்டாகுக. |
| वृष्टिश्च मे | மழையும் எனக்கு உண்டாகுக. |
| जैत्रञ्च मे | நல்ல பூமியும் எனக்கு உண்டாகுக. |
| औद्भिद्यञ्च मे | மரங் கொடி செடிகளின் உற்பத்தியும் எனக்கு உண்டாகுக |
| रयिश्च मे | பொன்னும் எனக்கு உண்டாகுக. |
| रायश्च मे | இரத்தினங்களும் எனக்கு உண்டாகுக. |
| पुष्टञ्च मे | இரத்தினம் முத்து முதலியவைகள் நிறைந்த சம்பத்தும் எனக்கு உண்டாகுக. |
| पुष्टिश्च मे | உடம்பின் வலியும் எனக்கு உண்டாகுக. |
| विभुच मे | தானியமுடைமையும் எனக்கு உண்டாகுக. |
| प्रभुच मे | மிகுந்த தானிய சம்பத்தும் எனக்கு உண்டாகுக. |
| बहुच मे | எண்ணிறந்த தானியங்களும் எனக்கு உண்டாகுக. |
| भूयश्च मे | மதிப்பற்ற தானியங்களும் எனக்கு உண்டாகுக. |
| पूर्णञ्च मे | சொல்ல முடியாத தானியங்களும் எனக்கு உண்டாகுக. |
| पूर्णतरञ्च मे | நினைக்கொணாத தானியங்களும் எனக்கு உண்டாகுக. |
| अक्षितिश्च मे | அறிதற்கரிய தானியங்களும் எனக்கு உண்டாகுக. |
| कूयवाश्च मे | அருவருக்கத்தக்க தானியங்களும் எனக்கு உண்டாகுக. |
| अन्नञ्च मे | நல்ல உணவுப்பொருளும் எனக்கு உண்டாகுக. |
| अक्षुच्च मे | பசி நீங்கலும் எனக்கு உண்டாகுக. |
| व्रीहयश्च मे | நெற்களும் எனக்கு உண்டாகுக. |
| यवाश्च मे | வற்கோதுமையும் எனக்கு உண்டாகுக. |
| माषाश्च मे | உழுந்துகளும் எனக்கு உண்டாகுக. |
| तिलाश्च मे | எள்ளுகளும் எனக்கு உண்டாகுக. |
| मुद्गाश्च मे | பயறுகளும் எனக்கு உண்டாகுக. |
| खल्वाश्च मे | பெரும்பயறும் எனக்கு உண்டாகுக. |

சமகம்)

| | |
|---|---|
| गोधूमाश्च मे | கோதுமைகளும் எனக்கு உண்டாகுக. |
| मसुराश्च मे | மசுரா: என்னும் ஒருவகைத் தானிய விசேடமும் எனக்கு உண்டாகுக. |
| प्रियङ्गवश्च मे | * திணைகளும் எனக்கு உண்டாகுக. |
| अणवश्च मे | சிறுநெற்களும் எனக்கு உண்டாகுக. |
| श्यामाकाश्च मे | சாமைகளும் எனக்கு உண்டாகுக. |
| नीवाराश्च मे | † செந்நெல்லும் எனக்கு உண்டாகுக. |

நான்காவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## ஐந்தாவது அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் நாற்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

अश्माचमे मृत्तिकाचमे गिरयश्चमे पर्वताश्चमे सिकताश्चमे वनस्पतयश्चमे हिरण्यञ्चमेऽयश्चमे सीसञ्चमे त्रपुश्चमे श्यामञ्चमे लोहञ्चमेऽग्निश्चम आपश्चमे वीरुधश्चम ओषधयश्चमे कृष्टपच्यञ्च ॥ १ ॥ मेऽकृष्टपच्यञ्चमे ग्राम्याश्चमे पशव आरण्याश्च यज्ञेन कल्पन्ताम् वित्तञ्चमे वित्तिश्चमे भूतञ्चमे भूतिश्चमे वसुचमे वसतिश्चमे कर्मचमे शक्तिश्चमेऽर्थश्चम एमश्चम इतिश्चमे गतिश्चमे ॥ २ ॥

---

பதவுரை.

| | |
|---|---|
| अश्माच मे | கருங்கல்லும் எனக்கு உண்டாகுக. |
| मृत्तिकाच मे | நல்ல மண்ணும் எனக்கு உண்டாகுக. |
| गिरयश्च मे | சிறிய குன்றுகளும் எனக்கு உண்டாகுக. |
| पर्वताश्च मे | பெரியமலைகளும் எனக்கு உண்டாகுக. |

---

* ஞாழல், பெண் தொழில் பூக்கின்ற ஒருவகைச் செடி என்பர் சிலர்.

† பயிரிடுவாரின்றி விளைவது.

| | |
|---|---|
| सिकताश्च मे | மணல்களும் எனக்கு உண்டாகுக. |
| वनस्पतयश्च मे | மரங்களும் எனக்கு உண்டாகுக. |
| हिरण्यञ्च मे | பொன்களும் எனக்கு உண்டாகுக. |
| अयश्च मे | இரும்பும் எனக்கு உண்டாகுக. |
| सीसञ्च मे | ஈயமும் எனக்கு உண்டாகுக. |
| त्रपुश्च मे | துத்தநாகமும் எனக்கு உண்டாகுக. |
| श्यामञ्च मे | கரிய இரும்பும் எனக்கு உண்டாகுக. |
| लोहञ्च मे | வெண்கலம் முதலிய உலோகமும் எனக்கு உண்டாகுக. |
| अग्निश्च मे | தீயும் எனக்கு உண்டாகுக. |
| आपश्च मे | நீரும் எனக்கு உண்டாகுக. |
| वीरुधश्च मे | படரும் கொடிகளும் எனக்கு உண்டாகுக. |
| ओषधयश्च मे | மூலிகைகளும் எனக்கு உண்டாகுக. |
| कृष्टपच्यञ्च मे | பயிரிட்டு விளைகின்றவைகளும் எனக்கு உண்டாகுக. |
| अकृष्टपच्यञ्च मे | பயிரிடாது விளையுந் தானியங்களும் எனக்கு உண்டாகுக. |
| ग्राम्याश्च मे | கிராமத்தில் வாழுகின்றவைகளும், |
| आरण्याश्च | காட்டில் வாழுகின்றவைகளுமான, |
| पशवः | பசுக்கள் |
| यज्ञेन | யாகத்தால் ஆராதிக்கத்தக்கவைகள் |
| कल्पन्ताम् | ஆகுக. |

மற்றும்,

| | |
|---|---|
| वित्तञ्च मे | முன்னுள்ள தனமும் எனக்கு உண்டாகுக. |
| वित्तिश्च मे | பின்வரும் தனமும் எனக்கு உண்டாகுக. |
| भूतञ्च मे | ஐசுவரியமுடைய புத்திரன் முதலானோர்களும் எனக்கு உண்டாகுக. |
| भूतिश्च मे | எனது ஐசுவரியமும் எனக்கு உண்டாகுக. |
| वसु च मे | வாழ்விற்குரிய பசு பரி முதலியவைகளும் எனக்கு உண்டாகுக. |
| वसतिश्च मे | வாழ்வதற்குரிய இடமும் எனக்கு உண்டாகுக. |

| | |
|---|---|
| कर्मच मे | தீயோம்பல் முதலிய நற்கருமங்களும் எனக்கு உண்டாகுக. |
| शक्तिश्च मे | கருமஞ் செய்யும் ஆற்றலும் எனக்கு உண்டாகுக. |
| अर्थश्च मे | அதன் பயனும் எனக்கு உண்டாகுக. |
| एमश्च मे | வேண்டியவற்றை யடைதற்குரிய பசு முதலிய வைகளும் எனக்கு உண்டாகுக. |
| इतिश्च मे | அடைய வேண்டியதற்குரிய உபாயமும் எனக்கு உண்டாகுக. |
| गतिश्च मे | வேண்டியவற்றை யடைதலும் எனக்கு உண்டாகுக. |

ஐந்தாவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காம் காண்டம் ஏழாம் பிரபாடகம்.

### ஆறாவது அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் இருபத்தொரு பதங்களைக் கொண்டது

अग्निश्चम इन्द्रश्चमे सोमश्चम इन्द्रश्चमे सविताचम इन्द्रश्चमे सरस्वतीचम इन्द्रश्चमे पूषाचम इन्द्रश्चमे बृहस्पतिश्चम इन्द्रश्चमे मित्रश्चम इन्द्रश्चमे वरुणश्चम इन्द्रश्चमे त्वष्टाच ॥ १ ॥ म इन्द्रश्चमे धाताचम इन्द्रश्चमे विष्णुश्चम इन्द्रश्चमेऽश्विनौचम इन्द्रश्चमे मरुतश्चम इन्द्रश्चमे विश्वेचमे देवा इन्द्रश्चमे पृथिवीचम इन्द्रश्चमेऽन्तरिक्षश्चम इन्द्रश्चमे द्यौश्चम इन्द्रश्चमे दिशश्चम इन्द्रश्चमे मूर्धाचम इन्द्रश्चमे प्रजापतिश्चम इन्द्रश्चमे ॥ २ ॥

---

#### பதவுரை.

| | |
|---|---|
| अग्निश्चम इन्द्रश्च मे | அக்கினியும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| सोमश्चम इन्द्रश्च मे | சோமனும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| सविताचम इन्द्रश्च मे | சவிதாவும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| सरस्वतीचम इन्द्रश्च मे | சரசுவதியும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| पूषाचम इन्द्रश्च मे | பூஷாவும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| बृहस्पतिश्चम इन्द्रश्च मे | பிருகஸ்பதியும் இந்திரனும் எனக்கு அருள் புரிவாராக. |

| | |
|---|---|
| मित्रश्चम इन्द्रश्च मे | மித்திரனும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| वरुणश्चम इन्द्रश्च मे | வருணனும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| त्वष्टाचम इन्द्रश्च मे | துவஷ்டாவும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| धाताचम इन्द्रश्च मे | பிரமனும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| विष्णुश्चम इन्द्रश्च मे | விஷ்ணுவும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| अश्विनौचम इन्द्रश्च मे | அசுவினிகளும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| मरुतश्चम इन्द्रश्च मे | மருத்துக்களும் இந்திரனும் எனக்கு அருள் புரிவாராக. |
| विश्वेच मे देवा इन्द्रश्च मे | விசுவதேவர்களும் இந்திரனும் எனக்கு அருள் புரிவாராக |
| पृथिवीचम इन्द्रश्च मे | பூமியும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| अन्तरिक्षश्चम इन्द्रश्च मे | அந்தரிக்ஷமும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| द्यौश्चम इन्द्रश्च मे | வானும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| दिशश्चम इन्द्रश्च मे | திக்குக்களும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| मूर्धाचम इन्द्रश्च मे | மேல்திக்கும் இந்திரனும் எனக்கு அருள்புரிவாராக. |
| प्रजापतिश्चम इन्द्रश्च मे | பிரசாபதியும் இந்திரனும் எனக்கு அருள் புரிவாராக. |

ஈண்டு, சமயம் நோக்கி, 'எனக்கு' என்னும் வினையெச்சத்தை 'அருள் புரிவாராக' என்று வருவித்துக்கொண்டு நிறைவாக்கியிருக்கிறது.

ஆறுவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## ஏழாவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

अꣳशुश्चमे रश्मिश्चमेऽदाभ्यश्चमेऽधिपतिश्चम उपाꣳशुश्चमेऽन्तर्यामश्चम ऐन्द्रवायवश्चमे मैत्रावरुणश्चम आश्विनश्चमे प्रतिप्रस्थानश्चमे शुक्रश्चमे मन्थीचम आग्रयणश्चमे वैश्वदेवश्चमे ध्रुवश्चमे वैश्वानरश्चम ऋतुग्रहाश्च ॥ १ ॥ मेऽतिग्राह्याश्चम ऐन्द्राग्नश्चमे वैश्वदेवश्चमे मरुत्वतीयाश्चमे माहेन्द्रश्चम आदित्यश्चमे सावित्रश्चमे सारस्वतश्चमे पौष्णश्चमे पात्नीवतश्चमे हारियोजनश्चमे ॥ २ ॥

பதவுரை

| | |
|---|---|
| अंशुश्च मे | அம்சுக்கிரகமும் எனக்கு உண்டாகுக |
| रश्मिश्च मे | சூரிய கிரணங்களாற் கிரகிக்கப்படும் |
| अदाभ्यश्च मे | அதாப்யக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| अधिपतिभ्यश्च मे | ததி (தயிர்)க் கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| उपांशुश्च मे | உபாம்சுக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| अन्तर्यामश्चम | அந்தர்யாமிக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| ऐन्द्रवायवश्च मे | ஐந்திரவாயுக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| मैत्रावरुणश्चम | மைத்திராவருணக் கிரகமும் எனக்குஉண்டாகுக. |
| आश्विनश्च मे | ஆசுவினக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| प्रतिप्रस्थानश्च मे | இரட்டைத் தேவதைகளுக்குச் செய்யும் பிரதிநிர்க் கிராஹ்யமும் எனக்கு உண்டாகுக. |
| शुक्रश्च मे | சுக்கிரக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| मन्थीचम | மந்திக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| आग्रायणश्च मे | ஆக்ராயணஸ்தாலியும் எனக்கு உண்டாகுக. |
| वैश्वदेवश्च मे | வைசுவதேவக் கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| ध्रुवश्च मे | துருவக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| वैश्वानरश्चम | வைசுவாநரக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| ऋतुग्रहाश्च मे | இருதுக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| अतिग्राह्याश्चम | அதிக்கிராகியக்கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| ऐन्द्राग्नश्च मे | ஐந்திராக்கினிக் கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| वैश्वदेवश्च मे | வைசுவதேவக் கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| मरुत्वतीयश्च मे | மருத்வதீயக் கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| माहेन्द्रश्चम | மாஹேந்திரக் கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| आदित्यश्च मे | ஆதித்தியக் கிரகமும் எனக்கு உண்டாகுக. |
| सावित्रश्च मे | சாவித்திரக் கிரகமும் எனக்கு உண்டாகுக |
| सारस्वतश्च मे | சாரசுவதக் கிரகமும் எனக்கு உண்டாகுக |
| पौष्णश्च मे | பௌஷ்ணக் கிரகமும் எனக்கு உண்டாகுக |
| पात्नीवतश्च मे | பாத்னீவதக் கிரகமும் எனக்கு உண்டாகுக |
| हारियोजनश्च मे | ஹாரியோசனக் கிரகமும் எனக்கு உண்டாகுக. |

சாயணபாடியக் கருத்து

ஈண்டு, 'ரச்மிக்கிரஹம்' என்பது ஒன்று இல்லாமையால் 'ஈச்மிபி:' என்னும் மந்திரத்தால் சோமரசம் பிடிக்கப்படும் அதாப்யக்கிரகங் கொள்ளப்பட்டது. 'அதிபதி' என்பதால் ததிக்கிரகங் கொள்ளப்பட்டது, பிரதிப்பிரஸ்தானம் என்பதால் பிரதிநிர்க்கிராஹ்யக்கிரகங் கொள்ளப்பட்டது. துருவஸ்தாலியே அவபயன வேளையில் (மற்றொன்றில் ஊற்றும்போது) வைசுவாநர

சூக்தத்திற் கூறப்பட்டிருத்தலின் 'வைசுவாநர' என்பதால் துருவஸ்தாலி கொள்ளப்பட்டது. முதலில் வைசுவதேவக்கிரகம் என்றதோ, பிராதஸவனத்தில் உள்ளது. இரண்டாவது வைசுவதேவ்யம் என்றது, மூன்றுவது சோமரச ஹோமத்தில் உள்ளது. சாரசுவதக்கிரகத்தை அபிஷேசனம் என்னும் விகிருதியிற் காண்க. அது அங்குக் கூறப்பட்டிருத்தலின் என்க. இவ்வாறே பௌஷ்ணக்கிரகமும் விகிருதியிலுள்ளதென்று கொள்க என்பதாம்.

கிரஹம் என்பது சோமரசத்தை, பாத்திரங்களில் பிடித்து வைத்தல்.

ஏழாவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## எட்டாவது அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் பதினாறு பதங்களைக் கொண்டது.

इध्मश्चमे बर्हिश्चमे वेदिश्चमे धिष्णियाश्चमे स्रुचश्चमे चमसा-
श्चमे ग्रावाणश्चमे स्वरवश्चम उपरवाश्चमेऽधिषवणेचमे द्रोणकल-
शश्चमे वायव्यानिचमे पूतभृच्चम आधवनीयश्चम आग्नीध्रञ्चमे
हविर्धानञ्चमे गृहाश्चमे सदश्चमे पुरोडाशाश्चमे पचताश्चमेऽवभृ-
थश्चमे स्वगाकारश्चमे ॥ १ ॥

பதவுரை

| | |
|---|---|
| इध्मश्च मे | வேள்வித் தீயை வளர்க்கும் விறகுகளும் எனக்கு உண்டாகுக |
| बर्हिश्च मे | தருப்பைகளும் எனக்கு உண்டாகுக |
| वेदिश्च मे | வேதிகையும் எனக்கு உண்டாகுக |
| धिष्णियाश्च मे | திஷ்ணியங்கள் என்னும் ஹோதாக்கள் முதலானோர்களின் மேடைகளும் எனக்கு உண்டாகுக |
| स्रुचश्च मे | சுருகு முதலியவைகளும் எனக்கு உண்டாகுக |
| चमसाश्च मे | சோமரசம் பருகும் பாத்திரங்களும் எனக்கு உண்டாகுக |
| ग्रावाणश्च मे | சோமக்கொடியை இடிக்குங் கற்களும் எனக்கு உண்டாகுக |
| स्वरवश्च मे | யூபம் என்னுந் தடியை வெட்டும்போது விழும் சிராய் பொடியும் எனக்கு உண்டாகுக |

| | |
|---|---|
| उपरवाश्च मे | மண்ணில் பதிக்கும் வளைகளும் (உபரவங்களும்) எனக்கு உண்டாகுக |
| अधिषवणेच मे | சோமக்கொடியை வைத்து இடிக்கும் இரண்டு பலகைகளும் எனக்கு உண்டாகுக |
| द्रोणकलशः | துரோணகலசம், |
| वायव्यानि | வாயவ்யங்கள், |
| पूतभृत् | பூதபிருத், |
| आधवनीयश्च मे | ஆதவனீயம் என்னும், சோமரசம் வைக்கும் பாத்திர விசேடங்களும் எனக்கு உண்டாகுக |
| आग्नीध्रञ्च मे | ஆக்னீந்திரனுடைய மண்டபமும் எனக்கு உண்டாகுக |
| हविर्धानञ्च मे | அவிகளை வைக்கும் மண்டபமும் எனக்கு உண்டாகுக |
| गृहाश्च मे | பத்தினியின் சாலையும் எனக்கு உண்டாகுக |
| सदश्च मे | சபா மண்டபமும் எனக்கு உண்டாகுக |
| पुरोडाशश्च मे | புரோடாசமும் எனக்கு உண்டாகுக |
| पचताश्च मे | * சாமித்திரசாலையும் எனக்கு உண்டாகுக |
| अवभृथश्च मे | முடிவு நீராடலும் எனக்கு உண்டாகுக |
| स्वगाकारश्च मे | சம்புவாகம் என்னும், சமித்து முதலியவற்றை தீயிற் கொளுத்தலும் எனக்கு உண்டாகுக. |

இவையாவும் சோமயாகத்தின் அங்க விசேடங்கள்.

எட்டாவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## ஒன்பதாவது அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்குமேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

अग्निश्चमे घर्मश्चमेऽर्कश्चमे सूर्यश्चमे प्राणश्चमेऽश्वमेधश्चमे पृथिवीचमेऽदितिश्चमे दितिश्चमे द्यौश्चमे शक्करीरंगुलयो दिशश्चमे यज्ञेन कल्पन्तामृक्चमे सामचमे स्तोमश्चमे यजुश्चमे दीक्षाचमे तपश्चम ऋतुश्चमे व्रतञ्चमेऽहोरात्रयोर्वृष्ट्या बृहद्रथन्तरेचमे यज्ञेन कल्पेताम् ॥ १ ॥

---

* சாமித்திரசாலை = கடாவைக் கொல்லுமிடம்.

பதவுரை.

| | |
|---|---|
| अग्निश्च मे | செங்கலடுக்காகிய தீயும் எனக்கு உண்டாகுக |
| घर्मश्च मे | பிரவர்க்கியம் என்ற கர்மாவும் எனக்கு உண்டாகுக |
| अर्कश्च मे | அர்க்கம் என்னும் யாகமும் எனக்கு உண்டாகுக. |
| सूर्यश्च मे | சூரிய யாகமும் எனக்கு உண்டாகுக. |
| प्राणश्च मे | பிராணாயஸ்வாஹா என்று செய்யப்படும் ஆகுதியும் எனக்கு உண்டாகுக. |
| अश्व मे धश्व मे | அசுவமேதயாகமும் எனக்கு உண்டாகுக. |
| पृथिवीच मे | பூமி தேவதையும் எனக்கு உண்டாகுக. |
| अदितिश्च मे | அதிதி தேவதையும் எனக்கு உண்டாகுக. |
| दितिश्च मे | திதி தேவதையும் எனக்கு உண்டாகுக. |
| द्यौश्च मे | சுவர்க்க தேவதையும் எனக்கு உண்டாகுக. |
| शक्करीः | சக்குவரிகள் என்னுஞ் சந்தங்களும் எனக்கு உண்டாகுக. |
| अङ्गुलयः | விராட் புருஷனுடைய விரல்கள் போன்ற அவயவ விசேடங்களும், |
| दिशश्च | திக்குக்களும் |
| यज्ञेन | இவ்வேள்வியால் |
| मे कल्पन्ताम् | எனக்கு உண்டாகுக. |

மற்றும்,

| | |
|---|---|
| ऋक्च मे | அடி, தளை, முதலியவைகளோடு (வடமொழிச் சந்தங்களோடு) கூடிய மந்திரங்களும் எனக்கு உண்டாகுக. |
| सामच मे | இருக்கு மந்திரத்தையே சுரங்களுடன் சேர்த்துப் பாடும் சாம மந்திரங்களும் எனக்கு உண்டாகுக. |
| स्तोमश्च मे | தனித்துப்பாடும் சாம ஆவிருத்தியாகிய துதிகளும் எனக்கு உண்டாகுக. |
| यजुश्च मे | கருமங்களை விதிக்கும் மந்திரமும் எனக்கு உண்டாகுக. |
| दीक्षाच मे | தீட்சையும் எனக்கு உண்டாகுக. |
| तपश्चम | உண்ணாமை முதலிய தவமும் எனக்கு உண்டாகுக |
| ऋतुश्च मे | வேள்வியின் அங்கமாகிய இருதுகாலமும் எனக்கு உண்டாகுக. |
| व्रतश्च मे | பசுவின் ஒரு முலைப்பாலுண்ணுதல் முதலிய விரதமும் எனக்கு உண்டாகுக. |

மற்றும்,

| | |
|---|---|
| अहोरात्रयोः | பகலிரவு பெய்யும் |
| वृष्ट्या | மழையால் வளரும் பயிர்களும் |

| | |
|---|---|
| बृहद्रथंतरंच | பிருகத் ரதந்தரம் என்னுஞ் சாமப்பாடலும் |
| यज्ञेन | இவ்வேள்வியால் |
| मे कल्पेताम् | எனக்கு உண்டாகுக. |

ஒன்பதாவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்
## பத்தாவது அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் நாற்பது பதங்களைக் கொண்டது.

गर्भाश्चमे वत्साश्चमे त्र्यविश्चमे त्र्यवीचमे दित्यवाट्चमे दित्यौ-
हीचमे पञ्चाविश्चमे पञ्चावीचमे त्रिवत्सश्चमे त्रिवत्साचमे तुर्यवाट्चमे
तुर्यौहीचमे पष्ठवाच्चमे पष्ठौहीचम उक्षाचमे वशाचम ऋषभश्च ॥१॥मे
वेहच्चमेऽनड्वाञ्चमे धेनुश्चम आयुर्यज्ञेन कल्पतां प्राणो यज्ञेन कल्पता-
मपानो यज्ञेन कल्पतां व्यानो यज्ञेन कल्पतां चक्षुर्यज्ञेन कल्पतां
श्रोत्रं यज्ञेन कल्पतां मनो यज्ञेन कल्पतां वाग्यज्ञेन कल्पता मात्मा
यज्ञेन कल्पतां यज्ञोयज्ञेन कल्पताम् ॥ २ ॥

### பதவுரை.

| | |
|---|---|
| गर्भाश्च मे | சினைப் பசுக்களும் எனக்கு உண்டாகுக. |
| वत्साश्च मे | கன்றுகளும் எனக்கு உண்டாகுக. |
| त्र्यविश्च मे | ஒன்றரை வருடத்திய கன்றும் எனக்கு உண்டாகுக. |
| त्र्यवीश्च मे | அத்தகைய கடாரிக் கன்றும் எனக்கு உண்டாகுக. |
| दित्यवाटच मे | இரண்டு வருடத்திய காளைக் கன்றும் எனக்கு உண்டாகுக. |
| दित्यौहीच मे | அத்தகைய கடாரிக் கன்றும் எனக்கு உண்டாகுக. |
| पञ्चाविश्च मे | இரண்டரை வருடத்திய காளைக் கன்றும் எனக்கு உண்டாகுக. |
| पञ्चावीचमे | அத்தகைய கடாரிக் கன்றும் எனக்கு உண்டாகுக. |
| त्रिवत्सश्च मे | மூன்று வருடத்திய காளையும் எனக்கு உண்டாகுக. |
| त्रिवत्साच मे | அத்தகைய கடாரியும் எனக்கு உண்டாகுக. |
| तुर्यवाट्च मे | மூன்றரை வருடத்திய காளையும் எனக்குண்டாகுக. |
| तुर्यौहीच मे | அத்தகைய கடாரியும் எனக்கு உண்டாகுக. |

| | |
|---|---|
| पष्ठवाच्च मे | நான்கு வருடத்திய காளையும் எனக்கு உண்டாகுக |
| पष्ठौहीच मे | அத்தகைய கடாரியும் எனக்கு உண்டாகுக. |
| उक्षाच मे | பொலிகின்ற காளையும் எனக்கு உண்டாகுக |
| वशाश्च मे | ஈனாத பசுவும் எனக்கு உண்டாகுக |
| ऋषभश्च मे | பெரிய எருதும் எனக்கு உண்டாகுக. |
| वेहच्च मे | சினையை யழிக்கும் பசுவும் எனக்கு உண்டாகுக. |
| अनड्वाञ्च मे | வண்டிக் காளையும் எனக்கு உண்டாகுக. |
| धेनुश्च मे | பால் கறக்கும் பசுவும் எனக்கு உண்டாகுக. |
| आयुः | நீண்ட ஆயுளும் |
| यज्ञेन | யக்ஞத்தால் |
| में कल्पन्ताम् | எனக்கு உண்டாகுக. |
| प्राणो | பிராணனும் |
| यज्ञेन कल्पन्ताम् | யக்ஞத்தால் எனக்கு உண்டாகுக. |
| अपानो | அபானனும் |
| यज्ञेन कल्पन्ताम् | யக்ஞத்தால் எனக்கு உண்டாகுக. |
| व्यानो | வியானனும் |
| यज्ञेन कल्पन्ताम् | யக்ஞத்தால் எனக்கு உண்டாகுக. |
| चक्षुः यज्ञेन कल्पताम् | கண்ணும் யக்ஞத்தால் உண்டாகுக. |
| श्रोत्रं यज्ञेन कल्पताम् | செவிகளும் யக்ஞத்தால் உண்டாகுக. |
| मनो यज्ञेन कल्पताम् | மனதும் யக்ஞத்தால் உண்டாக. |
| वाक् यज्ञेन कल्पताम् | வாக்கும் யக்ஞத்தால் உண்டாகுக. |
| आत्मा यज्ञेन कल्पताम् | உடம்பும் யக்ஞத்தால் உண்டாகுக. |
| यज्ञो | { மேலே செய்யப்படும் அசுவமேத முதலிய வேள்வியும் |
| यज्ञेन कल्पताम् | இவ்வேள்வியால் இனிதாய் முடிவும் உண்டாகுக. |

பத்தாவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்.

### பதினோராவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் பதினறு பதங்களைக் கொண்டது

एकाचमे तिस्रश्चमे पञ्चचमे सप्तचमे नवचम एकादशचमे
त्रयोदशचमे पञ्चदशचमे सप्तदशचमे नवदशचम एकविꣳशतिश्चमे
त्रयोविꣳशतिश्चमे पञ्चविꣳशतिश्चमे सप्तविꣳशतिश्चमे नवविꣳशति-

श्चम एकत्रिꣳशच्चमे त्रयस्त्रिꣳशच्च ॥ १ ॥ मे चतस्रश्चमेऽष्टौचमे
द्वादशश्चमे षोडशच्चमे विꣳशतिश्चमे चतुर्विꣳशतिश्चमेऽष्टाविꣳशति-
श्चमे द्वात्रिꣳशच्चमे षट्त्रिꣳशच्चमे चत्वारिꣳशच्चमे चतुश्चत्वारिꣳश-
श्चमेऽष्टाचत्वारिꣳशश्चमे वाजश्च प्रसवश्चापिजश्च क्रतुश्च सुवश्च मूर्धाच
व्यश्नियश्चान्त्यायनश्चान्त्यश्च भौवनश्च भुवनश्चाधिपतिश्च ॥ २ ॥

பதவுரை:

| | |
|---|---|
| एकाच मे | ஒன்றும் எனக்கு உண்டாகுக. |
| तिस्रश्च मे | மூன்றும் எனக்கு உண்டாகுக. |
| पञ्चच मे | ஐந்தும் எனக்கு உண்டாகுக. |
| सप्तच मे | ஏழும் எனக்கு உண்டாகுக. |
| नवच मे | ஒன்பதும் எனக்கு உண்டாகுக. |
| एकादशच मे | பதினொன்றும் எனக்கு உண்டாகுக. |
| त्रयोदशच मे | பதின்மூன்றும் எனக்கு உண்டாகுக. |
| पञ्चदशच मे | பதினைந்தும் எனக்கு உண்டாகுக. |
| सप्तदशच मे | பதினேழும் எனக்கு உண்டாகுக. |
| नवदशच मे | பத்தொன்பதும் எனக்கு உண்டாகுக. |
| एकविꣳशतिश्च मे | இருபத்தொன்றும் எனக்கு உண்டாகுக. |
| त्रयोविꣳशतिश्च मे | இருபத்துமூன்றும் எனக்கு உண்டாகுக. |
| पञ्चविꣳशतिश्च मे | இருபத்தைந்தும் எனக்கு உண்டாகுக. |
| सप्तविꣳशतिश्च मे | இருபத்தேழும் எனக்கு உண்டாகுக. |
| नवविꣳशतिश्च मे | இருபத்தொன்பதும் எனக்கு உண்டாகுக. |
| एकत्रिꣳशच्च मे | முப்பத்தொன்றும் எனக்கு உண்டாகுக. |
| त्रयस्त्रिꣳशच्च मे | முப்பத்துமூன்றும் எனக்கு உண்டாகுக. |

மற்றும்,

| | |
|---|---|
| चतस्रश्च मे | நான்கும் எனக்கு உண்டாகுக. |
| अष्टौच मे | எட்டும் எனக்கு உண்டாகுக. |
| द्वादशाच मे | பன்னிரண்டும் எனக்கு உண்டாகுக. |
| षोडशचमे | பதினாறும் எனக்கு உண்டாகுக. |
| विꣳशतिश्चमे | இருபதும் எனக்கு உண்டாகுக. |
| चतुर्विꣳशतिश्च मे | இருபத்துநான்கும் எனக்கு உண்டாகுக. |
| अष्टाविꣳशतिश्च मे | இருபத்தெட்டும் எனக்கு உண்டாகுக. |
| द्वात्रिꣳशच्च मे | முப்பத்திரண்டும் எனக்கு உண்டாகுக. |
| षट्त्रिꣳशच्च मे | முப்பத்தாறும் எனக்கு உண்டாகுக. |

| | |
|---|---|
| चत्वारिंशच्च मे | நாற்பதும் எனக்கு உண்டாகுக. |
| चतुश्चत्वारिंशच्च मे | நாற்பத்து நான்கும் எனக்கு உண்டாகுக. |
| अष्टाचत्वारिंशच्च मे | நாற்பத்தெட்டும் எனக்கு உண்டாகுக. |
| | இவைகள் சந்தங்கள், |
| वाजश्च | அன்னமும் |
| प्रसवः | அன்னுற்பத்தியும் |
| आपिजः | மீண்டும் அன்னுற்பத்தியும் |
| क्रतुश्च | எண்ணும் போக விடயங்களும், அல்லது யாகமும் எனக்கு உண்டாகுக, |
| सुवश्च | சூரியனும் |
| मूर्धा च | சுவர்க்க லோகாபிமான தேவதையும் |
| व्यश्नियश्च | ஆகாசாபிமானி தேவதையும் |
| आन्त्यायनः | பிரளயத்திற்குரென்றும் தேவதையும் |
| अन्त्यश्च | முடிவாகிய தேவதையும் |
| भौवनश्च | உலகமாய்த் தோன்றிய தேவதையும் |
| भुवनश्च | உலகை யுடம்பாகவுடைய தேவதையும் |
| अधिपतिश्च | பரமேசுரனும் இவ்வேள்வியாற் களிப்புறுவார்களாக, |

**சாயணபாடியக் கருத்து**

வேட்போன் அத்திமரத்தாற் செய்ததாயும், ஒருமார் நீண்டதாயுமுள்ள ஒரு சுருக்கில் நெய்யை நிறைத்துக்கொண்டு, அச் சுருக்கின் அடியில் மண்ணைத் தடவிவிட்டு, அச் சுருக்கின் முகத்திலிருந்து, இப் பதினேரு அநுவாக மந்திரத்தையும் ஓதும்வரை இடைவிடாது தாரையாக நெய்யைத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும். இது வசோர்த்தாரை ஹோமம் எனப்படும். முடிவில் 'சுவாஹா' என்பதைச் சேர்த்துக் கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன் 'वाजादिभ्यो देवताभ्य इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஈண்டுச் சூத்திரப்படி, ஹோமஞ் செய்யும்போது, அல்லது, ஹோமம் முடிந்த பிறகு, 'समुद्रादूर्मिः, वय नाम. चत्वारि शृङ्गा' என்பவைகளை முதலாவதாகக் கொண்ட பிராமண மந்திரங்கள் மூன்றாலும், 'त्रिधाहितं' என்பது முதலிய சூத்திர மந்திரங்கள் எட்டாலும், இந்த ஹோமத்தைப் போற்றல் வேண்டும். இதற்குக் கிருத சூக்தம் என்று பெயர்.

இந்த ஹோமம் செய்து மீந்த நெய்யால், உலகத்தீயில் அன்னஞ் சமைத்து மகான்களான ரித்துவிக்குக்க ளென்னும், அத்வரியு, பிரமன், ஹோதா, உத்காதா என்னும் நால்வருக்கும் அன்னமளித்தல் வேண்டும். மற்றும், அவர்களுக்கு நன்கு பால் கறக்கும் பசுக்களையுங் கொடுத்தல் வேண்டும்.

**பதினோராவது அநுவாகமும் முடிந்தது.**

**சமகமும் முற்றிற்று.**



# இருக்குவேத பஞ்ச ருத்திரங்கள்.

வேதமொழி பெயர்ப்பாசிரியர்
காசிவாசி உயர்திரு
சிவானந்த யதீந்திர சுவாமிகளவர்களால்
மொழி பெயர்க்கப்பெற்று

திருவொற்றியூரான் அடிமை என்னும்
சென்னை:
த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களால்
பதிப்பித்து

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

1936.

ஓம்.

உருத்திரபரமேசுராய நமஃ.

# முன்னுரை.

இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும், வேள்விவாயிலாக உருத்திர பரமேசுரனையே வழிபடும் முறையை விதிக்கின்றன. இந்திரன் முதலான தேவர்களின் வழிபாடும் இடையில் இடையில் காணப்படினும், உற்றுநோக்கின் அதுவும் உருத்திர பரமேசுரனது வழிபாடாகவே முடியும்.

இப்பொருளையே,

'वेदेऽस्ति संहिता रौद्री वाच्या रुद्रश्चदेवता'

என்று, மிருகேந்திர ஆகமமுங் கூறுகின்றது.

இதன் விரிவை, அரதத்தாசாரியர் திருவாய் மலர்ந்தருளிய 'சுருதி சூத்தி மாலை, என்னும் நூலிற் காண்க.

வியாச சூத்திரமும் இதன்கண்ணேயே கருத்துடையதாம். இதை, நீலகண்டபாடியத்திற் காண்க.

ஈண்டு, முதன்மைபற்றி இருக்குவேதமும், வேள்விக்கிரியையிற் தலைசிறந்து நின்றமைகொண்டு எசுர்வேதமும், துதியிற்சிறந்தமைபற்றிச் சாமவேதமும், போர்த்தொழிலை அறிவுறுத்தி உலகவாழ்க்கையை வளர்த்தலின் அதர்வணவேதமும் சிறந்தவைகளேயாகின்றன.

அங்ஙனமாயினும்,

यस्मिन्नृचः साम यजूꣳषि यस्मिन्प्रतिष्ठिता रथनाभौ इव आराः
यस्मिंश्चित्तꣳ सर्वमोतं प्रजानां तन्मे मनः शिवसंकल्पमस्तु, (எசுர்.)

என்றற்றொடக்கத்துச் சுருதிவாக்கியங்களில் இருக்குவேதமே முதலாவதாகக் காணப்படுவதாலும், ஏனைய எசுர்வேத சாமவேதங்களில் பெரும்பான்மை இருக்குவேத மந்திரங்களே காணப்படுதலானும், காலத்தை நோக்கினும் இருக்குவேதமே மிகப் பழைமையானதாமென்று அறிஞர்கள் உடன்பட்டிருத்தலானும், இருக்குவேதம் மிகச் சிறந்ததென்பது அறிஞர்கள் ஆய்ந்து அறிதற்பாலதாம்,

மற்றும் இவ் வேதங்களில், உருத்திரபரமேசுரனை நேரே கூறும் பகுதிகள் பலவிருக்கினும் எசுர்வேதத்திலுள்ள 'சதருத்ரீயம்' என்னும் பகுதியே யாவராலும் ஓதப்பெற்று வருகின்றது.

அங்ஙனமாயினும், அத்தகைய சதருத்திரி சாமவேத ருத்திரிகளின் பொருளை நோக்குமிடத்தும், பரமேசுரனது ஐம் முகத்திற்கும் ஐந்து உருத்திரங்களாக அமைந்துள்ள இயற்கைப் பெருமையை ஆராயுமிடத்தும், இருக்குவேதத்திலுள்ள இப் பஞ்சருத்திரங்களே மிகச் சிறந்தனவாகக் காணப்படுகின்றன.

அஃதன்றியும் தெங்நாட்டில், பெரும்பான்மை எசுர்வேதிகளாகவே இருக்கின்றனர். ஆதலின், ஈண்டு, இவைகளை ஓதும் வழக்கமுங் குறைந்திருக்கின்றன. ஏனைய நாடுகளில் இவ் விருக்குவேத பஞ்ச ருத்திரங்களே மிகச் சிறந்தனவாக ஓதப்பெற்றும் வருகின்றன. அது, ஆண்டு இருக்குவேதிகள் மிகுந்துள்ளாராதலி னென்க.

இந்நாட்டிலும், இருக்குவேதிகள் இப் பஞ்சருத்திரங்களைப் பெரிதும் பாராட்டி வருகின்றனர்.

மற்றெவ்வகையாலேனும் ஏனைய ருத்திரிகள் சிறப்புடையவைகளாமெனினும், 'எண்சாண் உடம்பிற்குஞ் சிரசே பிரதானம்' என்றவாங்கே பரமேசுரனது பஞ்சமுகங்கட்கு ஒத்தவைகளாயுள்ள இப் பஞ்சருத்திரங்களே எல்லா ருத்திரிகளினுஞ் சிறந்தன வென்பதில் ஐயமில்லை.

இவ்வாற்றால், இவற்றை, சாயணபாடிய கருத்தைத் தழுவிய பதவுரையுடன் வெளியிட்டனம். மேலும், இருக்குவேதம் வெளிவருவதற்கும் உருத்திர பரமேசுரன், எமக்கும் வெளியிடுவிப்பாருக்கும் அருள்புரிவாராக.

வேதமொழி பெயர்ப்பாசிரியர்.
கா. சிவானந்த யதீந்திர சுவாமிகள்.

## இருக்குவேதம்

### அஷ்டகம்—5. வருக்கம்—30. சூக்தம்—59-ல்

**பன்னிரண்டாவது மந்திரம்.**

त्र्यंबकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम् ।
उर्वारुकमिव बन्धनान्मृत्योर्मुक्षीय मामृतात् ॥

பதவுரை.

(இ-ள்.) सुगन्धि = பரந்த புண்ணியமாகிய கீர்த்தியை யுடையவரும், पुष्टिवर्धनं = உலகத்திற்குக் காரணரும்,— उरु = ஆற்றலுடையவரும்,— त्र्यंबकं = மும்மூர்த்திகளின் பிதாவுமாகிய பரமேசுரரை,— यजामहे = ஆராதிக்கின்றோம். (ஆதலின் பரமேசுர ! நீ),—आमृतात् = முத்தியடையும்வரை.— मृत्योः = மரணம், அல்லது, குடும்பம் என்னு மிவற்றினின்று,— बन्धनात् = பந்தத்தினின்றும்,— उर्वारुकं इव = கக்கரிப்பழம்போன்று,— मुक्षीयं = எம்மை, விடுவித்தருள்வாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவர்களுக்குத் தந்தையும், நற்கீர்த்தியை யுடையவனும், உலக முதற்காரணனும், பேராற்றலுடையவனும், வழிபடுவோரை வளர்ப்போனுமாகிய பரமேசுரனை, வேள்வி வழியாய் ஆராதிக்கின்றோம். அவன், மரணம்வரை, எமது பந்தத்தை, கக்கரிப்பழமானது பழுத்துத் தானே விழுமாறு விடுவிப்பானாக. என்பதாம்.

*இது இருக்குவேதத்தைத் தழுவிய வுரையாம். இனி, தைத்திரீயத்தைத் தழுவிய வுரை வருமாறு :—*

பதவுரை.

(இ-ள்.) सुगन्धि = திருமேனியின் நறுமணத்தை, அல்லது, புண்ணியமாகிய நறுமணத்தை உடையவனும்,— पुष्टिवर्धनं = உடலை, அல்லது, தன முதலியவைகளை வளர்ப்பவனுமாகிய,—त्र्यंबकं = திரியம்பக (முக்கண்ணனாகிய) பரமேசுரனை,— यजामहे = ஆராதிக்கின்றேன். (ஆதலின் யான்),— उर्वारुकं इव = கக்கரிப்பழம் தானே பழுத்து விடுபடுவதுபோல்,— मृत्योः बन्धनात् = குடும்ப பந்தத்தினின்று,— मुक्षीय = விடுபடுவேனாக.— अमृतात् = நித்தியமாகிய சுவர்க்கத்திலிருந்து,— मा मुक्षीय = நீங்கமாட்டேனாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

நறுமணத்தை யுடையவனும், தேகம், தனம் முதலானவைகளை வளர்ப்பவனுமாகிய திரியம்பகேசுர பரமசிவனைப் பூசிக்கின்றேன். ஆதலின் அவனது அருளால் சம்சாரத்தினின்றும் விடுபடுவேன். சுவர்க்கத்திலிருந்து நீங்க மாட்டேன் என்பதாம். ஈண்டு, "பூத்த மரத்தினின்று வெளியில் பூவின் நறுமணம் பரவுமாறு, புண்ணியமாகிய நறு நாற்றம் பரமேசுரனுடைய திருமேனியிலிருந்து வெகு தூரத்திற் கமழ்கின்றது" என்பது சுருதி.

*இது, விவாஹத்தினும் ஓதப்படுகின்றது. மற்றும், இம் மந்திரம் சுக்கில எசுர்வேதத்திலுமுள்ளது. பன்மை—சிறப்பு அது வருமாறு :—*

சுக்ல எசுர்வேதத்திலுள்ள மூன்றும் அத்தியாயத்தின்

**ஆறவது மந்திரம்.**

**त्र्यम्बकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम् ।**

**उर्वारुकमिव बन्धनान्मृत्योर्मुक्षीय माऽमृतात् ॥**

ஆண்மக்கள் வழிபடல்.

(உவட்டர் உரை)

*தெய்வ மணங்கமழ்வோனும், தனம் தானிய முதலானவைகளை வலியுறுத்துகின்றவனுமாகிய முக்கண்ணனை ஆராதிக்கின்றேன். அப் பரமேசுரன், இனிது பழுத்த வெள்ளரிப்பழம், காம்பிலிருந்து விடுபடுவதுபோன்று, எம்மைப் பந்தத்தினின்றும் விடுவிப்பானாக. இவ்வாறே மிருத்துவினின்றும் நீக்குவானாக. மற்றும், எம்மை அமுதத்திலிருந்து (முத்தியிலிருந்து) ஒருகாலும் விடுவிக்காதவனாகுக என்பதாம்.*

வேள்வித்தலைவனது புத்திரி வழிபடும் வகை.

**त्र्यम्बकं यजामहे सुगन्धिं पतिवेदनम् ।**

**उर्वारुकमिवबन्धनादितो मुक्षीयमामुतः ॥**

*தெய்வமணங் கமழ்வோனும், கொழுநனை யுணர்கின்றோனும், அதாவது கொழுநனை யடைவிப்போனு மாகிய முக்கண்ணனை (பரமேசுரனை) ஆராதிக்கின்றேன், அப் பரமேசுரன் அச் சுற்றத்தார்க ளிடத்திலிருந்து, பழுத்த பழம் விடுபடுவது போன்று என்னை விடுவிப்பானாக. கொழுநனுடைய வருக்கங்களிலிருந்து விடுவிக்காதவனாகுக என்பதாம்.*

(மகீதரர் உரை)

*பிதுரு மேதத்தில் புத்திரன் முதலான ஆண்மக்கள் தமது இடதுதுடைகளைத் தட்டிக்கொண்டு மும்முறை அக்கினியை அப்பிரதக்ஷிணம் வரு*

வது போல், தேவாராதனையில், புருடர்கள், முன் மந்திரத்தால் வலது துண்டையைத் தட்டிக்கொண்டு, அப்பிரதக்ஷிணமும், பிரதக்ஷிணமுஞ் செய்தல் வேண்டும் என்று கூறுகின்றது காத்தியாயன சூத்திரம்.

மக்களின் தன்மையின்றிய, அதாவது தெய்வத்தன்மை கமழ்கின்றவனும், தனம் தானியம் முதலானவற்றை வளர்ப்பவனுமாகிய முக்கண்களையுடைய பரமேசுரனை ஆராதிக்கின்றோம். அவனருளால், பழுத்த பழம்போல், அவமிருத்துவினின்றும், மற்றும், பந்தத்தினின்றும் விடுபடுவோமாக. முத்தியிலிருந்து நழுவாதவர்களு மாவோமாக என்பதாம்.

## கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய ஆரண்யகம்

### பத்தாம் பிரபாடகம்

**நாராயண வுபநிடதத்தில் இருபத்திரண்டாம் அநுவாகம்.**

மந்திரம்

नमो हिरण्यबाहवे हिरण्यवर्णाय हिरण्यरूपाय हिरण्यपतये,
अम्बिकापतय उमापतये पशुपतये नमो नमः.

அ-து. நமோஹிரண்ய பாஹவே ஹிரண்ய வர்ணாய ஹிரண்யரூபாய [ஹிரண்யபதயே
அம்பிகாபதய உமாபதயே பசுபதயே நமோநமঃ. என்பது.

**23-வது அநுவாகம்**

ऋतꣳसत्यं परं ब्रह्म पुरुषं कृष्णपिङ्गलम् ।
ऊर्ध्वरेतं विरूपाक्षं विश्वरूपाय वै नमो नमः ॥

அ-து. ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்கலம்,
ஊர்த்வ ரேதம் விரூபாக்ஷம் விச்வ ரூபாய வை நமோநமঃ, என்பது.

**24-வது அநுவாகம்**

सर्वो वै रुद्रस्तस्मै रुद्राय नमो अस्तु ।
पुरुषो वै रुद्रः सन्महो नमो नमः ॥
विश्वं भूतं भुवनं चित्रं बहुधा जातं जायमानं च यत् ।
सर्वो ह्येष रुद्रस्तस्मै रुद्राय नमो अस्तु ॥

அ-து. ஸர்வோ வை ருத்ரঃ தஸ்மை ருத்ராய நமோ அஸ்து.
புருஷோவை ருத்ரঃ சன் மஹோ நமோ நமঃ.

*விஶ்வம் பூதம் புவனம் சித்ரம் பஹுதா ஜாதம் ஜாயமானம் ச யத், ஸர்வோ ஹ்யேஷ ருத்ரஃ தஸ்மை ருத்ராய நமோ நமஃ, என்பது.*

உருத்திர காயத்திரி

तत्पुरुषाय विद्महे महादेवाय धीमहि तन्नोरुद्रः प्रचोदयात् ॥

ईशानः सर्वविद्यानां ईश्वरः सर्वभूतानां ब्रह्माधिपतिः ब्रह्मणोऽधिपतिः ब्रह्मा शिवो मे अस्तु सदाशिवोम्.

*தத்புருஷாய வித்மஹே மஹா தேவாய தீமஹி தந் நோ ருத்ர ப்ரசோதயாத், என்பது.*

*ஈஶாநஃ ஸர்வ வித்யாநாம் ஈஶ்வரஃ ஸர்வ பூதாநாம் ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோதிபதிஃ ப்ரஹ்மா சிவோ மே அஸ்து ஸதா ஶிவோம்.*

உருத்திர இரகசியோபநிடதம்

धर्मो रुद्रो जगद्विष्णुः सर्वज्ञानं पितामहः ।
श्री रुद्र रुद्र रुद्रेति यस्तं ब्रूयाद्विचक्षणः ॥

*அ-து. தர்மோ ருத்ரோ ஜகத்விஷ்ணுஃ ஸர்வ ஞானம் பிதாமஹஃ,*
*ஸ்ரீ ருத்ர ருத்ர ருத்ரேதி யஸ்தம் ப்ரூயாத் விசக்ஷணஃ என்பது.*

कीर्तनात्सर्वदेवस्य सर्वपापैः प्रमुच्यते ।
रुद्रो नर उमा नारी तस्मै तस्यै नमो नमः ॥

*அ-து. கீர்தனாத் ஸர்வ தேவஸ்ய ஸர்வ பாபைஃ ப்ரமுச்யதே*
*ருத்ரோ நர உமா நாரீ தஸ்மை தஸ்யை நமோநமஃ*

உருத்திரனே எல்லாவடிவ னெனல்

रुद्रो ब्रह्मा उमा वाणी तस्मै तस्यै नमो नमः ।
रुद्रो विष्णुरुमा लक्ष्मीस्तस्मै तस्यै नमो नमः ॥

*அ-து. ருத்ரோ ப்ரஹ்மா உமா வாணீ தஸ்மை தஸ்யை நமோநமஃ*
*ருத்ரோ விஷ்ணுருமா லக்ஷ்மீஸ்தஸ்மை தஸ்யை நமோநமஃ*

रुद्रः सूर्य उमा छाया तस्मै तस्यै नमो नमः ।
रुद्रः सोम उमा तारा तस्मै तस्यै नमो नमः ॥

*அ-து. ருத்ரஃ ஸூர்ய உமா ச்சாயா தஸ்மை தஸ்யை நமோநமஃ*
*ருத்ரஃ சோம உமா தாரா தஸ்மை தஸ்யை நமோநமஃ*

रुद्रो दिवा उमा रात्रिस्तस्मै तस्यै नमो नमः ।
रुद्रो यज्ञ उमा वेदिस्तस्मै तस्यै नमो नमः ॥

அ-து. ருத்ரோ திவா உமா ராத்ரிஃ தஸ்மை தஸ்யை நமோநமஃ
ருத்ரோ யக்ஞ உமா வேதிஃ தஸ்மை தஸ்யை நமோநமஃ.

रुद्रो वह्निः उमा स्वाहा तस्मै तस्यै नमो नमः ।
रुद्रो वेद उमा शास्त्रं तस्मै तस्यै नमो नमः ॥

அ-து. ருத்ரே வஹ்நிஃ உமா ஸ்வாஹா தஸ்மை தஸ்யை நமோநமஃ
ருத்ரோ வேத உமா ஶாஸ்த்ரம் தஸ்மை தஸ்யை நமோநமஃ

रुद्रो वृक्ष उमा वल्ली तस्मै तस्यै नमो नमः ।
रुद्रो गन्ध उमा पुष्पं तस्मै तस्यै नमो नमः ॥

அ-து. ருத்ரோ வ்ருக்ஷ உமா வல்லீ தஸ்மை தஸ்யை நமோநமஃ
ருத்ரோ கந்த உமா புஷ்பம் தஸ்மை தஸ்யை நமோநமஃ

रुद्रोऽर्थ अक्षरः सा उमा तस्मै तस्यै नमो नमः ।
रुद्रो लिङ्गं उमा पीठं तस्मै तस्यै नमो नमः ॥

அ-து. ருத்ரோ அர்த்த அக்ஷரஃ ஸா உமா தஸ்மை தஸ்யை நமோநமஃ
ருத்ரோ லிங்கம் உமா பீடம் தஸ்மை தஸ்யை நமோநமஃ

सर्वदेवात्मकं रुद्रं नमस्कुर्यात् पृथक् पृथक् ।
एभिर्मन्त्रपदैरेव नमस्यामीश पार्वती ॥

அ-து. ஸர்வ தேவாத்மகம் ருத்ரம் நமஸ் குர்யாத் பிருதக் பிருதக்.
ஏபிர் மந்த்ரபதை ரேவ நமஸ்யாமீஶ பார்வதீ.

சிவ விஷ்ணு அபேதம்

सर्व देवात्मको रुद्रः सर्वे देवाः शिवात्मकाः ।
रुद्रस्य दक्षिणेपार्श्वे रविर्ब्रह्मा त्रयोऽग्नयः ॥
वामपार्श्वे उमादेवी विष्णुः सोमोपि ते त्रयः ।
या उमा सा स्वयं विष्णुर्यो विष्णुः सहि चन्द्रमाः ॥

அ-து. ஸர்வ தேவாத்மகோ ருத்ரஃ ஸர்வேதேவாஃ ஶிவாத்மகாஃ
ருத்ரஸ்ய தக்ஷிணே பார்ஶ்வே ரவிர் ப்ரஹ்மா த்ரயோக்னயஃ

*வாம பார்ஶ்வே உமா தேவி விஷ்ணுஃ சோமோபபிதே த்ரயஃ*
*யா உமா ஸா ஶ்வயம் விஷ்ணுர் யோ விஷ்ணுஃ ஸ ஹி சந்த்ரமாஃ*

उमा शंकरयोर्योगः संयोगा विष्णुरुच्यते ।
यस्तु तस्मै नमस्कारं कुर्याद्भक्तिसमान्वितः ॥

*அ-து, உமா ஶங்கர யோர் யோகஃ ஸம்யோகம் விஷ்ணுருச்யதே*
*யஸ்து தஸ்மை நமஸ்காரம் குர்யாத் பக்தி ஸமன்விதஃ*

சாயோப நிஷத்

यो ब्रह्मणः पञ्चवक्त्रहन्ता तस्मै रुद्राय नमो अस्तु ।
यो विस्फुलिङ्गेन ललाटजेन सर्वं जगद्भस्मसात्करोति ।
पुनश्च सृष्ट्वा पनरप्यरक्षदेवं स्वतन्त्रं प्रकटीकरोति ।
तस्मै रुद्राय नमोऽस्तु ॥

*அ-து. யோ ப்ரஹ்மணஃ பஞ்ச வக்த்ர ஹந்தா தஸ்மை ருத்ராய நமோ அஸ்து, யோ விஸ்புலிங்கேன லலாட ஜேன ஸர்வம் ஜகத் பஸ்ம ஸாத்கரோதி. புனஶ்ச ஸ்ருஷ்ட்வா புனரப் யரக்ஷதேவம் ஸ்வதந்த்ரம் ப்ரகடீகரோதி. தஸ்மை ருத்ராய நமோ அஸ்து.*

यो वामपादेन जघानकालं घोरं पपेथ हालाहलं दहन्तं ।
दक्षाङ्घ्रिनापस्मृति मुग्रवीर्यं तस्मै रुद्राय नमो अस्तु ॥

*அ-து. யோ வாம பாதேன ஜகான காலம் கோரம் பபேத ஹாலாஹலம் தஹந்தம், தக்ஷாங்க்ரி நாபஸ்ம்ருதி முக்ர வீர்யம் தஸ்மை ருத்ராய நமோ அஸ்து.*

यो वाम पादार्चितविष्णुनेत्रस्तस्मै ददौ चक्रमतीवहृष्टः ।
तस्मै रुद्राय नमो अस्तु ॥

*அ-து. யோ வாமபாதார்சித விஷ்ணு நேத்ரஃ தஸ்மை ததௌ சக்ரமதீவ ஹ்ருஷ்டஃ, தஸ்மை ருத்ராய நமோ அஸ்து.*

यो दक्षयज्ञे सुरसङ्घान् विजित्य विष्णुं बबन्धोऽरगपाशेन वीरः,
तस्मै रुद्राय नमो अस्तु ॥

*அ-து. யோதக்ஷ யக்ஞே சுரஸங்கான் விஜித்ய விஷ்ணும் பபந்தோரக பாஶேன வீரஃ, தஸ்மை ருத்ராய நமோ அஸ்து.*

முற்றிற்று.

# இருக்குவேத பஞ்ச ருத்திரங்கள்

அஷ்டகம்—1. வருக்கம்—26. சூக்தம்—43-ல்

முதலாவது இருக்கு.

இருக்கு 1.

कद्रुद्राय प्रचेतसे * मीढुष्टमाय तव्यसे ।

वोचेम शन्तमं हृदे ॥ १ ॥

பதவுரை.

(இ-ள்.) प्रचेतसे = முற்றுணர்வோனும்,— मीढुष्टमाय = எல்லாநலங்களையும் இனிது அளிக்கின்றவனும்,—तव्यसे = மிகப் பெரியோனும்,—हृदे = உள்ளத்தில் இருக்கின்றவனுமாகிய,—रुद्राय = உருத்திர பரமேசுரன் பொருட்டு,—शन्तमं = மிகுந்த பிரியத்தைக் கொடுக்குந் துதியை,—कत् = எப்போது,—वोचेम = சொல்லுவோம்? எ-று.

சாயணபாடியக் கருத்து

எல்லா முணர்கின்றவனும், வேண்டியவற்றை அருள்கின்றவனும், நெஞ்சில் நீங்காதிருக்கின்றவனுமாகிய உருத்திர மகாதேவனை, யாம் எப்போது அழகிய துதிகளால் துதிப்போமோ? என்பதாம்.

இருக்கு 2.

यथा नो अदितिः करत्पश्वे नृभ्यो यथा गवे ।

यथा तोकाय रुद्रियम् ॥ २ ॥

பதவுரை.

(இ-ள்.) अदितिः = பூமி,— नः = எங்கட்கு,— यथा = எவ்வாறு,— रुद्रियं = உருத்திர சம்பந்தமாதிய மருந்தைச் செய்யவேண்டுமோ,— करत् = அவ்வாறே செய்வதாகுக.—पश्वे = மற்றும், எருமைக்கும்,—नृभ्यः = மக்கட்கும்,—गवे =

* मीढुष्टमाय, என்பது பாடபேதம்.

கோவிற்கும்,—यथा = எவ்வாறு செய்யவேண்டுமோ, அவ்வாறே,—(करत्) = செய்க.— तोकाय = புத்திரனுக்கு — यथा = எவ்வாறு செய்யவேண்டுமோ, (करत्) = (அவ்வாறே) செய்க. எ-று.

சாயணபாடியக் கருத்து.

மருந்துக்க ளனைத்தும், உருத்திர பரமேசுரனது சம்பந்தமுடையவை களா மாதலின், பூமிதேவியார், எமது விலங்குகட்கும், கோக்கட்கும், பசுக்கட்கும், புத்திரர்கட்கும், அவ் வுருத்திரனுடைய மருந்தை உள்ளவாறே செய்தருள்வாராக என்பதாம்.

இருக்கு 3.

यथा नो मित्रो वरुणो यथा रुद्रश्चिकेतति ।
यथा विश्वे सजोषसः ॥ ३ ॥

பதவுரை.

(இ-ள்.) मित्रः = மித்திரனும்.— वरुणः = வருணனும்,—यथा = எவ்வண்ணமாக,—नः = எங்கட்கு அறிவை யுண்டாக்குவார்களோ, அவ்வாறு செய்வார்களாக.—रुद्रः = உருத்திரன்,—यथा = எவ்வாறு,—चिकेतति = எமக்கு அறிவுறுத்துவானோ, அவ்வாறு செய்வானாக.—सजोषसः = ஒத்த பிரியமுடைய,—विश्वे = எல்லாத் தேவர்களும்,—यथा = எவ்வாறு,—चिकेत(ति) न्ति, = அறிவுறுத்துவார்க அவ்வாறே யறிவுறுத்துவார்களாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

மித்திரன், (சூரியன்) வருணன், உருத்திரன், சமான விருப்பமுடையவர் களான விசுவதேவர்கள், எமக்கு உள்ளவாறு அறிவை யுண்டாக்குவார்களாக என்பதாம்.

இருக்கு 4.

गाथपतिं मेधपतिं रुद्रं जलाषभेषजम् ।
तच्छंयोः सुम्नमीमहे ॥ ४ ॥

பதவுரை.

(இ-ள்.) गाथपतिं = துதியைப் பாதுகாக்கின்றவனும்,— मेधपतिं = வேள்வியைப் பரிபாலிக்கின்றவனும், जलाषभेषजं = தண்ணீராகிய மருந்தோடு கூடியிருக்கின்றவனுமாகிய,—रुद्रं = உருத்திர பரமேசுரனைக் குறித்து,—शंयोः =

*பிருகற்பதியின் புத்திர சம்பந்திகளான எல்லா மக்களையும் முன்னிட்டு,* तत् = *அத்தகைய,*—सुम्नं = *மங்களத்தை,*—ईमहे = *யாம் வேண்டிப்பிரக்கின்றோம்.* எ-று.

சாயணபாடியக் கருத்து

பிருகற்பதியின் புத்திரனுடைய சம்பந்தமாயுள்ள மக்களனைவருக்கும், பேரின்பத்தை யளிக்குமாறு, துதியாளரைப் பாதுகாக்கின்றவனும், யாகத்தைப் பரிபாலிக்கின்றவனுமாகிய உருத்திர பரமேசுரனை வேண்டுகின்றோம். என்பதாம்.

இருக்கு 5.

यः शुक्र इव सूर्यो हिरण्यमिव रोचते ।

श्रेष्ठो देवानां वसुः ॥ ५ ॥

பதவுரை.

(இ-ள்.) यः = *எவன்,*—सूर्यः इव = *சூரியனைப்போல்,*—शुक्रः = *பிரகாசிக்கின்றானோ,*—हिरण्यं इव = *பொன்னைப்போல்,*—रोचते = *பிரியனோ,*—देवानां = *தேவர்களுக்குள்,*—श्रेष्ठः = *சிறப்புற்றவனோ,*—वसुः = *வாழ்வதற்குக் காரணனோ, அவனே உருத்திர பரமேசுரன்.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுரன், இரவிபோன்று விளங்குகின்றவனும், பொன்னைப்போல் எல்லா வுயிர்கட்குப் பிரியனும், தேவர்களுக்குட் சிறந்தவனும், வசிப்பதற்குக் காரணனுமாயிருக்கின்றான் என்பதாம்.

இருக்கு 6.

शं नः करत्यर्वते सुगं मेषाय मेष्ये ।

नृभ्यो नारिभ्यो गवे ॥ ६ ॥

பதவுரை.

(இ-ள்.) नः = *எமது,*—अर्वते = *குதிரைக்கும்,*—मेषाय = *எருமைக்கடாவிற்கும்,*—मेष्ये = *எருமைக்கும்,*—नृभ्यः = *ஆண் மக்கட்கும்,*—नारिभ्यः = *பெண் மக்கட்கும்,*—गवे = *பசுவிற்கும்,*—सुगं शं = *நல்ல சுகத்தை,*—करति = *(உருத்திரனே) செய்கின்றான்.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

எம்முடைய, குதிரை, எருமை, எருமைக்கடா, ஆண் மக்கள், பெண் மக்கள், கோ என்பவைகட்கு, உருத்திர தேவனே இன்மை யளிக்கின்றன் என்பதாம்.

இருக்கு 7.

अस्मे सोम श्रियमधि निधेहि शतस्य नृणाम् ।

महि श्रवस्तुविनृम्णम् ॥ ७ ॥

பதவுரை.

(இ-ள்.) सोम ! = *சோமனே ! நீ,*—नृणां = *மக்களுக்கு,*— शतस्य = *போதிய,* श्रियं = *செல்வத்தை,*— अस्मे = *எம்மிடத்து,*— अधिनिधेहि = *நன்கு நிலைக்கவைப் பாயாக.*—तुवि नृम्णं = *வன்மை மிகுந்தவைகளும்,*—महि श्रव: = *நிறைந்தவைக ளுமான உணவுப்பொருள்களையும்,*–(अधिनिधेहि) = *எம்மிடத்து நிலைக்கவைப்பா யாக.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

சோம! நீ, எங்கட்கு வேண்டிய செல்வத்தையும், உணவுப் பொருள்களை யும் எம்மிடத்தில் எப்போதும் இருக்கும்படி செய்தருள்வாயாக. என்பதாம்.

இருக்கு 8.

मा नः सोमपरिबाधो मारातयो जुहुरन्त ।

आ न इन्दो वाजे भज ॥ ८ ॥

பதவுரை.

(இ-ள்.) सोमपरिबाध: = *வேள்வியைச் செய்யாமைகள்,*—न: = *எம்மைத்,* मा जुहुरन्त = *துன்புறுத்தாதவைகளாகுக.*—अरातय: = *(மற்றும்) பகைவர்கள் (எம்மை),*—मा (जुहुरन्त) = *துன்புறுத்தாதவர்களாகுக.*—इन्दो ! = *சோமனே ! நீ* न: = *எமக்கு,*—वाजे = *ஆற்றலை, அல்லது,உணவுப் பொருளை,*—आभज = *மிகுதி யாய் அளித்தருள்வாயாக.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

வேள்வியைச் செய்யவில்லையே என்னும் குற்றங்களும், பகைகளும், எம் மைத் துன்புறுத்தாதொழிக. எமக்கு, ஆற்றலை, அல்லது, உணவுப் பொருள்களை நிறையக் கொடுத்தருள்வாயாக என்பதாம்.

இருக்கு ೭.

यास्ते प्रजा अमृतस्य परस्मिन्धामन्नृतस्य ।

मूर्धा नाभा सोम वेन आभूषन्तीः सोम वेदः ॥ ९ ॥

பதவுரை.

(இ-ள்.) सोम ! = சோமனே !— अमृतस्य = கேடிலாதவனும்,— परस्मिन् धामन् ऋतस्य = மேலாகிய இடத்தில் அடையத்தக்கவனுமாகிய நீ,–मूर्धा = சிரசுபோன்ற (தலைமையாகிய)—नाभा = வேள்வியின்கண்,–याः = எவர்கள் இருக்கின்றார்களோ, ते प्रजाः = அம் மக்களே,— वेनः = விரும்புவாயாக.— सोम ! = சோமனே ! நீ, आभूषन्तीः = எல்லாவகையாலும் வேள்வியை அலங்கரிக்கின்றவர்களே,— वेदः = அறிந்துகொள்ளுவாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

சாந்தமாகிய உருத்திரபரமேசுரனே ! அதாவது வேள்விக்கரசே ! நீ, தலைமையாகிய வேள்வியின்கண், அணியுற்றிருக்கின்ற மக்களிடத்து அன்புவைத்தருள்வாயாக. மற்றும், அவர்களைத் தெரிந்துகொண்டருளுவாயாக என்பதாம்.

இருபத்தேழாம் வருக்கம் முதலாம் மண்டலம்

எட்டாம் அனுவாகம் முற்றிற்று.

முதலாம் உருத்திரம் முடிந்தது.

---

## அஷ்டகம்—1. வருக்கம்—4. சூக்தம்—114-ல்

---

இருக்கு 1.

इमा रुद्राय तवसे कपर्दिने क्षयद्वीराय प्र भरामहे मतीः ।

यथा शमसद्द्विपदे चतुष्पदे विश्वं पुष्टं ग्रामे अस्मिन्ननातुरम् ॥ १ ॥

பதவுரை.

(இ-ள்.) तवसे = பெரியோனும்,— कपर्दिने = கற்றைச் சடையையுடையவனும்,—क्षयद्वीराय = வீரர்கள் ஒடுங்குதற்கு இடமானவனும், அல்லது, பெருஞ்செல்வர்களாய் வீரமுற்ற மருத்துக் கணங்களைப் புத்திரர்களாக உடையவனுமாகிய,—रुद्राय = உருத்திர மகாதேவனின் பொருட்டு,—द्विपदे = எமது மக்க

ளுக்கும்,—चतुष्पदे = *எமது கோ முதலானவைகட்கும்,*— यथा शं असत् = *உரோகங்கள் சாந்தியாய் நலமாகும் வண்ணம்,*— इमाः मतीः = *அழகிய இத் தோத்திரங்களை,*— प्रभरामहे = *நன்கு செய்கின்றோம்.*— अस्मिन् ग्रामे = *(ஆதலின்) இக் கிராமத்தில்,*— विश्वं = *அனைத்தும்,*— अनातुरं = *பிணிகளற்றவைகளாய்,*— पुष्टं = *இனிது வளர்வனவாகுக.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

எமது கிராமத்திலுள்ள, பசு, எருமை முதலான மிருகங்களும், எமது மக்களும், பிணியிலாதவர்களாய் வளரவேண்டுமென்று உருத்திரனை இனிது துதிக்கின்றோம் என்பதாம்.

இருக்கு 2.

मृळा नो रुद्रोत नो मयस्कृधि क्षयद्वीराय नमसा विधेम ते ।

यच्छं च योश्च मनुरायेजे पिता तदश्याम तव रुद्र प्रणीतिषु ॥ २ ॥

பதவுரை.

(இ-ள்.) रुद्र! = *உருத்திர பரமேசுர! நீ,*— नः = *எங்கட்கு,*— मृळ = *சுகத்தை யளித்தருள்கின்றவனாகுவை.*— उत = *மற்றும்,*— नः = *எங்கட்கு,* मयः = *இன்பை,*— कृधि = *செய்தருள்வாயாக.*— क्षयद्वीराय = *எல்லா வீரர்களையும் வென்ற, அல்லது, செல்வமிருந்த வீரர்களான மருத்துக்களோடுகூடிய,* ते = *உன்னை,*— नमसा = *அவியாகிய அன்னத்தால், அல்லது, வணக்கத்தால்,* विधेम = *வழிபடுகின்றோம்.*— पिता मनुः = *உண்டாக்கிய மநுவானவர் (எமது மக்களின் பொருட்டு),*—यत् शं च = *எந்தப்பிணியின்மையையும்,*—योः च = *பயநிவிருத்தியையும்,*— आयेजे = *தேவர்களிடத்திலிருந்து கொண்டுவந்து தந்தனரோ,*— तत् = *அவற்றை,*— रुद्र! = *உருத்திரபரமேசுர!*— तव = *உனது,* प्रनीतिषु = *கடைக்கண் நோக்குக ளிருக்குமிடத்து,*— अश्याम = *யாம் அடைவோம்.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுர! நீ, எமக்குச் சுகமளிப்போனாயிருந்து இன்பையே யளிப்பாயாக. உன்னை, அவியால் (தேவ வுணவால்) வழிபடுகின்றோம். எம்மை யுண்டாக்கியவர், எம் பொருட்டு, தேவர்களிடத்திலிருந்து கொண்டுவந்து தந்தருளிய, பிணியிலாமை, பயமின்மை யிரண்டையும், உனது அருணோக்கிருக்கில் யாம் அடைந்து கொள்ளுவோம் என்பதாம்.

இருக்கு 3.

अश्याम ते सुमतिं देवयज्यया क्षयद्वीरस्य तव रुद्र मीढ्वः ।

सुम्नायं निद्विशो अस्माकमा चरारिष्टवीरा जुहवाम ते हविः ॥ ३ ॥

பதவுரை.

(இ-ள்.) मीढ्वः = வேண்டியவற்றை வழங்கும்,-रुद्र ! = உருத்திர பரமேசுர ! क्षयद्वीरस्य = வீரர்களை வென்ற, அல்லது, வீரமான மருத்துக்களை யுடைய, तव = உனது,— सुमतिं = அநுக்கிரகத்தை,—ते = உன்னைப்பற்றிய யாங்கள், देवयज्यया = தேவாராதனையால்,— अश्याम = அடைவோமாக.— अस्माकं = எமது, विशः = பிரசைகளைக் குறித்து,— सुम्नायन् इत् = சுகத்தைக் கொடுக்கின்றவனே யாகி,— आचर = வருவாயாக.— अरिष्टवीराः = துன்புறுத்தப்படாத பிரசைகளை யுடையவர்களான நாங்கள்,— ते = உனக்கு,— हविः = பொங்கல் அப்பம் முதலான அவிகளை,— जुहवाम = ஆகுதி செய்வோமாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

வேண்டுவனவற்றை அநுக்கிரகஞ் செய்யும் உருத்திர பரமேசுர! நீ, எமக்கு அருள் செய்வாயாக. எம்மைச் சேர்ந்தவர்களுக்குச் சுகத்தைக் கொடுப்பாயாக. உனக்கு, யாம் ஆகுதி செய்கின்றோம். என்பதாம்.

இருக்கு 4.

त्वेषं वयं रुद्रं यज्ञसाधं वंकुं कविमवसे निह्वयामहे ।

आरे अस्मद्दैव्यं हेळो अस्यतु सुमतिमिद्वयमस्या वृणीमहे ॥ ४ ॥

பதவுரை.

(இ-ள்.) त्वेषं = ஒளிர்கின்றவனும்,— यज्ञसाधं = வேள்வியை முடிக்கின்றவனும்,—वंकुं = வளைந்த போக்கையுடையவனும்,—कविं = பேரறிவை யுடையவனுமாகிய,—रुद्रं = உருத்திர பரமேசுரனை,— वयं = யாம்,— अवसे निह्वयामहे = இனிது அழைக்கின்றோம்.—दैव्यं = தேவ சம்பந்தியாகிய,—हेळः = முனிவை, अस्मत् आरे = எம்மினின்று வெகுதூரத்தில்,—अस्यतु = எவுவாயாக (நீக்கியருள்வாயாக.)— अस्य = இம் மகாதேவனுடைய,—सुमतिमित् = அருளையே,— आवृणीमहे = வேண்டுகின்றோம். எ-று.

சாயணபாடியக் கருத்து.

பல்வகை நற்குணங்களோடு கூடிய உருத்திர பரமேசுரனை, யாம் அழைக்கின்றோம். அவன், எம்மிடத்தில் முனிவையடையாதவனுகுக. அவனது அருளையே போற்றுகின்றோம் என்பதாம்.

இருக்கு 5.

दिवो वराहमरुषं कपर्दिनं त्वेषं रूपं नमसा नि ह्वयामहे ।

हस्ते बिभ्रद्भेषजा वार्याणि शर्मवर्मच्छर्दिरस्मभ्यं यंसत् ॥ ५ ॥

பதவுரை.

(இ-ள்.) वराहं = சிறந்த உணவை, அல்லது, ஆற்றலை உடையவனு
अरुषं = விளக்கமுடையவனும்,—कपर्दिनं = சடையை யுடையவனும்,—
சோதி வடிவனும்,—रूपं = மறைமுடிகளா லறியப்படுவோனுமாகிய உ
பரமேசுரனை,—नमसा = அவியால், அல்லது, வணக்கத்தால்,—दिव:— வி
விருந்து (வருமாறு)—निह्वयामहे = இனிது அழைக்கின்றோம்.—हस्ते =
வுருத்திர பரமேசுரன், தனது திருக்கரத்தில்,—वार्याणि = அனைவரும்
வதும்,— भेषजा = பிணி நீக்குதற்குரியவைகளுமானவற்றைக் கையிற்கொ
ணாய் வந்து,—अस्मभ्यम् = எமக்கு,—शर्म = பிணியின்மையாகிய ஆரோக்கிய
யும்,—वर्म = கவசத்தையும்,— छर्दि: = வீட்டையும்,— यंसत् = அளித்தரு
ளுக; எ-று.

சாயணபாடியக் கருத்து.

சோதியும் சுடருமாகியவனும், மறைமுடியில் மன்னுகின்றவனு
உருத்திரபரமேசுரனை, தேவ வுணவால் வழிபடுகின்றோம். அவன், எ
பிணி நீக்குதற்குரியவைகளைத் தாங்கியவனாய் வந்து, சுகம், வீடு, பாது
என்பவற்றை எமக்குக் கொடுத்தருள்வானாக என்பதாம்.

இருக்கு 6.

इदं पित्रे मरुतामुच्यते वचः स्वादोः स्वादीयो रुद्राय वर्द्धनम् ।

रास्वा च नो अमृत मर्तभोजनं त्मने तोकाय तनयाय मृळ ॥ ६ ॥

பதவுரை.

(இ-ள்.) मरुतां = 49, மருத்துக்கட்கு,—पित्रे = பிதாவாகிய,—रुद्राय =
திர பரமேசுரனுக்கு,—स्वादो: = சுவையினும்.—स्वादीय: = மிகுந்த சுவை
யதும்,—वर्द्धनं = களிப்பை யுண்டாக்குவதுமாகிய,—इदं वच: = இத் து
கியத்தை,— उच्यते = சொல்லுகின்றனம்,—अमृत ! = நாசமற்றோய் !—
जनं = மக்கள் உண்ணுதற்குரிய வுணவை,— रास्व = கொடுப்பாயாக.—
மற்றும், என்னையும்,—न: तोकाय च = எமது புத்திரனையும்,— तनयाय =
னுடைய புத்திரனையும் சுகப்படுத்துவாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

நாற்பத்தோன்பது மருத்துக்களையும், தனக்குப் புத்திரர்களாகவுடைய உருத்திர பரமேசுரனை இனிது துதிக்கின்றனம். உருத்திர! எங்கட்குவேண்டிய வுணவைக் கொடுப்பதுடன், எம்மையும், எமது புத்திரர்களையும், புத்திரர்களுடைய புத்திரர்களையும் நலம்பெறச் செய்வாயாக. என்பதாம்.

இருக்கு 7.

मा नो॑ म॒हान्त॑मु॒त मा नो॑ अर्भ॒कं मा न॒ उक्ष॑न्तमु॒त मा न॑ उक्षि॒तम् ।
मा नो॑ वधीः पि॒तरं॒ मोत मा॒तरं॑ मा नः॑ प्रि॒यास्त॒न्वो॑ रुद्र रीरिषः ॥ ७ ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र ! = *உருத்திர பரமேசுர !*— नः = *எங்களுக்குள்,*—महान्तं = *முதியோராயுள்ளாரை,*— मावधीः = *துன்புறுத்தாதே.*— उत = *மற்றும்,* नः = *எங்களுடைய,*— अर्भकं = *குழந்தையை,*— मावधीः = *துன்புறுத்தாதே,* नः = *எங்களுக்குள்ளிருக்கும்,* —उक्षन्तं = *தருணரையும்'* —मावधीः = *துன்புறுத்தாதே.*—उत = *மற்றும்,*—नः = *எமது,*—उक्षितं = *கருப்பையிலுள்ள சிசுவையும்,* मावधीः = *துன்புறுத்தாதே.*—नः = *எமது* —पितरं = *தந்தையையுந்,*—मावधीः = *துன்புறுத்தாதே.*—उत = *மற்றும்,*—मातरं = *தாயையும்.*—मावधीः = *துன்புறுத்தாதே.*—नः = *எமது*—प्रिया:+तन्वः = *நண்பரின் குழந்தைகளையும்,*—मा रीरिषः = *துன்புறுத்தாதே.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுர! எம்மைச்சேர்ந்த, பாலர், தருணர், சிசு, மாதா, பிதா, நண்பர் முதலானோர்களைத் துன்புறுத்தாதருள்வாயாக. என்பதாம்.

இருக்கு 8.

मा न॑स्तो॒के तन॑ये॒ मा न॑ आ॒यौ मा नो॒ गोषु॒ मा नो॒ अश्वे॑षु रीरिषः ।
वी॒रान्मा नो॑ रुद्र भामि॒तो व॑धीर्ह॒विष्म॑न्तः॒ सद॒मित्त्वा॑ हवामहे ॥ ८ ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र ! = *உருத்திர பரமேசுர !* — नः = *எமது,*— तोके = *புத்திரனுக்கு,*— मा रीरिषः = *துன்பை யுண்டாக்காதே.*— तनये = *பௌத்திரனுக்கும்,* (मा रीरिषः) = *துன்பை விளைவியாதே.*— नः आयौ = *எமது மனிதரிடத்தும் (மனிதர் கட்கும்,)*— (मा रीरिषः) = *துன்பைத் தோற்றுவியாதே.*— नः गोषु = *எமது*

பசுக்கட்டும்,—(मा रीरिषः) = துன்பைச் செய்யாதே.—नः अश्वेषु = எமது குதிரை கட்டும்,— मा रीरिषः = துன்பை யுண்டாக்காதே.—नः = எமது,—वीरान् = வீரர்களை,— भामितः = முனிவுகொண்டு,— मावधीः = துன்புறுத்தாதே.— हविष्मन्तः = யாம், அவிகளைக் கைக்கொண்டவர்களாய்,— सदं इत् = எப்போதும், त्वा = நின்னை,— हवामहे = அழைக்கின்றேம். எ-று.

ஈண்டு, ஏழாம்வேற்றுமைகள் நான்காம்வேற்றுமைப் பொருளில் நின்றன.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுரன், எமது புத்திர பௌத்திரர்களையும், கோக்கள் குதிரைகளையுந் துன்புறுத்தாதருள்வானாக. மற்றும், எமது மனிதர்களையும், வீரர்களையுந் துன்புறுத்தாதவனாகுக. அவிகளைக் கைக்கொண்டவர்களாய் எப்போதும் உருத்திர பரமேசுரனை யாமும் அழைக்கின்றவர்களாவோமாக என்பதாம்.

இருக்கு 9.

उप॑ ते॒ स्तोमा॑न्पशु॒पा इ॒वाक॑रं॒ रास्वा॑ पितर्मरुतां सु॒म्नम॒स्मे ।
भ॒द्रा हि ते॑ सुम॒तिर्मृ॑ळ॒यत्त॒माथा॑ व॒यमव॒ इत्ते॑ वृणीमहे ॥ ९ ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र ! = உருத்திரபரமேசுர !— ते = உனக்கு,— स्तोमान् = துதியாகிய மந்திரங்களை,—पशुपाः इव = பசுக்களைப் பாதுகாக்கின்றவரைப் போன்று, उप आकरं = அருகில் சமர்ப்பிக்கின்றேம்.— मरुतांपितः ! = மருத்துக்களுக்குப் பிதாவே !— अस्मे = எங்களுக்கு,— सुम्नं = சுகத்தைக்,—रास्व = கொடுத்தருள்வாயாக.— ते = உனது,— सुमतिः = அநுக்கிரகபுத்தியும்,— मृळयत्तमा = பெரும் நலத்தை மிகக் கொடுப்பதாம்.—भद्रा = ஆதலின், போற்றத்தக்கதாகிய,—हि = இக்காரணத்தால்,— अथ = பின்னர், —वयं = யாம்,— ते = உனது,—अवः इत् = பாதுகாப்பையே (அருளையே),— वृणीमहे = வேண்டுகின்றேம். எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுர ! யாம், உனக்குத் தோத்திர மந்திரங்களை யருப்பிக்கின்றேம். உனது அநுக்கிரகம், எமக்கு மிகுந்த சுகத்தைக் கொடுப்பதாமாதலின் அதை மிகவும் வேண்டுகின்றேம் என்பதாம்.

இருக்கு 10.

आरे ते॑ गो॒घ्नमु॒त पू॑रुष॒घ्नं क्षय॑द्वीर सु॒म्नम॒स्मे ते॑ अस्तु ।
मृ॒ळा च॑ नो॒ अधि॑ च ब्रूहि दे॒वाधा॑ च नः॒ शर्म॑ यच्छ द्वि॒बर्हाः॑ ॥ १० ॥

பதவுரை.

(இ-ள்.) हे क्षयद्वीर ! = பகைவரை யடைக்கும் உருத்திர பரமேசுர ! ते = உன்னிடத்திலுள்ள,— गोघ्नं = பசுக்களைக் கொல்லத்தக்க ஆயுதங்களும், उत+पुरुषघ्नं = மற்றும், புருடர்களைக் கொல்லத்தக்க ஆயுதங்களும்,—आरे = எமக்குத் தூரமாய்ச் செல்வனவாகுக.— अस्मे = எம்மிடத்து,— ते = நினது (நீ அருள்செய்யும்).— सुम्नं = சுகமானது,— अस्तु = இருக்குக.— मृळ = மற்றும், களிப்படைவாயாக.—देव ! = பிரகாசமுடைய உருத்திர ! நீ,—अस्मान् = எமக்கு, अधिब्रूहि = ஆசிர்வாதங் கூறுவாயாக.— अध च = பின்னரும்,— नः = எமக்கு, द्विबर्हा = இருவகையிலும்,— शर्म = சுகத்தை,— यच्छ = கொடுத்தருள்வாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுர ! நீ, உன்னிடத்திலுள்ள கொடிய ஆயுதங்களை, எம்மினின்றும் நீக்கி விடுவாயாக. மற்றும், நலமருள்வாயாக. அஃதன்றியும், இனிய வசனங்களைக் கூறி யருள்வாக என்பதாம்.

இருக்கு 11.

अवो॑चाम॒ नमो॑ अस्मा अवस्यवः॑ शृणोतु॒ नो हवं॑ रुद्रो॒ म॒रुत्वा॑न् ।

तन्नो॑ मित्रो॒ वरु॑णो मामहन्तामदि॑तिः सिन्धुः॑ पृथिवी॒ उ॒त द्यौः ॥ ११ ॥

பதவுரை.

(இ-ள்.) अवस्यवः = உணவுப் பொருளை, அல்லது, பாதுகாப்பை விரும்புகின்ற யாங்கள் (நினக்கு),—नमः = வணக்கம் என்னும் சொல்லை,— अवोचाम = சொல்லுகின்றோம்.— अस्मै = இவ் வுருத்திர பரமேசுரனுக்கு,— नमः = அவ் வணக்கம் உரியதாகுக.— मरुत्वान् = மருத்துக்களைப் புத்திரர்களாகவுடைய, रुद्रः = உருத்திர பரமேசுரன்,— नः = எமது,— हवं = அழைப்பை,— शृणोतु = கேட்டருள்வானாக.— तत् = எம்மாற் கூறப்பட்ட அத்தகையவைகளையும், नः = எம்முடைய சம்பந்தமானவைகள் அனைத்தையும்,— मित्रः = மித்திரன், वरुणः = வருணன் अदितिः = அதிதி,—सिन्धुः = கடல்,—पृथिवी = தரை,— उत+द्यौः = மற்றும், வான் என்னும் இவர்கள்,—मामहन्ताम् = போற்றுவார்களாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

நலத்தை வேண்டிய யாங்கள் வணக்கங் கூறுகின்றோம். எமது வணக்கம் உருத்திரனுக்கு உரித்தாகுக. மருத்துக்களுக்குப் பிதாவாகிய உருத்திர பர

மேசுரன், நாங்கள் அழைப்பதைக் கேட்டருள்வானாக. யாம் கூறுகின்றதை மித்திரன் முதலானோர்களும் போற்றிக்கொள்வார்களாக. என்பதாம்.

*இருபத்தெட்டாம் வருக்கம் இரண்டாம் மண்டலம்*
**ஒன்பதாம் அனுவாகம் முற்றிற்று**
*இரண்டாவது உருத்திரம் முடிந்தது.*

---

## *இரண்டாம் அஷ்டகம்*

*மண்டலம்—2. வருக்கம்—16. சூக்தம்—33-ல்*

இருக்கு 1.

आ ते पितर्मरुतां सुम्नमेतु मा नः सूर्यस्य संदृशो युयोथाः ।
अभि नो वीरो अर्वति क्षमेत प्रजायेमहि रुद्र प्रजाभिः ॥ १ ॥

பதவுரை.

(இ-ள்.) हे मरुतांपित: ! = *மருத்துக்களைத் தோற்றுவித்த,*—रुद्र ! = *உருத்திர மகேசுரனே !*— ते+सुम्नं = *கொடுக்கத்தகுந்த உனது சுகமானது,*—आ एतु = *(எம க்கு)வருவதாகுக.*—न: = *எங்களை,*—सूर्यस्य = *இரவியின்,*—सं दृश: = *தரிசனத்தி லிருந்து,*— मा युयोथा: = *பிரித்து விடாதே.*— न: = *மற்றும், எமது,*— वीर: = *வீரமுடைய புத்திரர்,*— अर्वति = *பகைவர்களை,*— अभिक्षमेत = *நன்கு அடக்கு வார்களாக. அல்லது,*— अर्वति = *பகைவரிடத்து வீரமிக்க நீ,*— न: = *எம்மாற் செய்யப்பட்ட பிழைகளை,*— अभिक्षमेत = *பொறுத்தருள்வாயாக.*— प्रजाभि: = *யாம் புத்திர பௌத்திரர்களுடன்,*— प्रजायेमहि = *பெருகுவோமாக.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

மருத்துக்களை யீன்ற உருத்திர பரமேசுர! நின்னால் அருள் செய்யத்தக்க சுகமனைத்தும் எமக்கு உண்டாகுக. எம்மிடத்து, சூரிய தரிசனம் எப்போதும் இருக்குமாறு செய்தருள்வாயாக. எமக்கு நல்ல மக்கள் உண்டாவார்களாக. அல்லது, நீ, எமது பிழைகளைப் பொறுத்தருள்வாயாக. நாங்கள் தழைத்தோங்கு வோமாக என்பதாம்.

இருக்கு 2.

त्वादत्तेभीरुद्र शंतमेभिः शतंहिमा अशीय भेषजेभिः ।
व्यस्मद्द्वेषो वितरं व्यंहो व्यमीवाश्चातयस्वा विषूचीः ॥ २ ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र! = உருத்திர பரமேசுர !—त्वा = உன்னால்,—दत्तेभिः = கொடுக்கப்பெற்றவைகளும்,— शन्तमेभि; = பெரு நலத்தைக் கொடுப்பவைகளுமான, भेषजेभिः = மருந்துகளால்,— शतं हिमाः = நூறு வருடகாலம்,— अशीय = (யாம்) நிலைத்திருப்போமாக.— अस्मत् = எமது,— द्वेषः = பகைவரை,— चातयस्व = அடியோடு ஒழிப்பாயாக. अंहः = பாவங்களையும்,—वितरं विचातयस्व = முழுதும் ஒழிப்பாயாக. अमीवाः = பிணிகளையும்,—विचातयस्व = வேருடன் கெடுப்பாயாக. विषूचीः = எல்லா வுடம்புகளிலும் தொடர்ந்துள்ள வியாதிகளையும்,—विचातयस्व = முற்றும் போக்கி யருள்வாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுர ! நீ, கொடுக்கும் மருந்துகளால், நூறுவயதுவரை யாம் வாழ்வோமாக. பகைவர் ஒழிவாராக. பாவங்கள் நீங்குக. பிணிகள் போகுக. என்பதாம்.

இருக்கு 3.

श्रेष्ठो जातस्य रुद्र श्रियासि तवस्तम स्तवसां वज्रबाहो ।

पर्षिणः पारमंहसः स्वस्ति विश्वा अभीतीरपसो युयोधि ॥ ३ ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र ! = உருத்திர பரமேசுர !— जातस्य = தோன்றிய உலகப் பொருள்களுள்,— श्रिया = ஐசுவரியத்தால்,— श्रेष्ठः = சிறந்தவனாக,— असि = இருக்கின்றாய்.—वज्रबाहो ! = வச்சிரமேந்திய கரத்தோய் ! நீ,—तवसां = பெரியவைகளுள்ளும்,—तवस्तमः = மிகப் பெரியவனாக,—असि = இருக்கின்றாய்.—नः = எங்களை,— अंहसः = பாவத்தினுடைய,— पारं = கரையை,— स्वस्ति पर्षि = நலத்தால் ஏறும்படி செய்தருள்வாயாக.— रपसः = பாவத்தின்,— विश्वाः अभीतीः = பிராப்திகளையும்,—युयोधि = நீக்குவாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திரபரமேசுர ! நீ, தோன்றிய உலகில், மிகச் சிறந்தோனும், பெரியோனுமாக இருக்கின்றாய். பாவங்களினின்று எம்மை நீக்கி யருள்வாயாக என்பதாம்.

இருக்கு 4.

मा त्वा रुद्र चुक्रुधामा नमोभिर्मा दुष्टुती वृषभ मा सहूती ।

उन्नो वीराँ अर्पय भेषजेभिर्भिषक्तमं त्वा भिषजां श्रृणोमि ॥ ४ ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र! = உருத்திரபரமேசுர !– त्वा = உனக்கு,– नमोभिः = மாறுகிய வணக்கங்களால்,—माचुक्रुधाम = முனிவை யுண்டாக்கேன்.— दुस्तुती = நலமிலாத் துதியாலும்,— (माचुक्रुधाम) = முனிவையுண்டாக்கேன்.— सहूती = ஏனைய சிறிய தேவர்களுடன் உன்னை அழைப்பதாலும்,— (माचुक्रुधाम = உனக்கு முனிவை யுண்டாக்கேன்).— नः = எங்களுடைய,— वीरान् = புத்திரர்களை,— भेषजेभिः = நினது மருந்துகளால்,—उत् अर्पय = மேம்பாட்டை யடையுமாறு செய்தருள்வாயாக. त्वा = உன்னை,— भिषजां = வைத்தியர்களுக்குள்,— भिषक्तमं = மிகச்சிறந்த வைத்தியனென்று சொல்வதை,—शृणोमि = (யான்) கேட்கின்றேன். எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திரபரமேசுர! உன்னை, மாறுபட்டு வணங்குவதாலும், சிறிய தேவர்களுடன் அழைப்பதாலும் கோபத்தை யுண்டாக்கமாட்டோம். வைத்தியர்களுள், சிறந்த வைத்தியன் நீ யென்று கேட்கப்படுகிறபடியால், நினது மருந்தால் எமது புத்திரர்களை நலமுறச் செய்தருள்வாயாக என்பதாம்.

இருக்கு 5.

हवीमभिर्हवते यो हविर्भिरवस्तोमेभीरुद्रं दिषीय ।
ऋदूदरः सुहवो मानो अस्यै बभ्रुः सुशिप्रो रीरधन्मनायै ॥ ५ ॥

பதவுரை.

(இ-ள்.) यः = யாதொரு உருத்திர பரமேசுரன்,— हविर्भिः = அவிகளோடு கூடி—हवीमभिः = அழைத்தற்குரிய துதிகளால்,—हवते = அழைக்கப் பெறுகின்றனனோ,— (तं) रुद्रं = அவ் வுருத்திரனுக்குச் செய்யும்,— स्तोमेभिः = தோத்திரங்களால்,— अवदिषीय = முனிவைப் போக்குகின்றோம்.— ऋदूदरः = சிறிய வயிற்றையுடையவனும்,— सुहवः = இனிது அழைக்கத்தக்கோனும்,— बभ्रुः = அனைத்தையும் வலியுறுத்துகின்றவனும்,—सुशिप्रः = அழகிய முகத்தை யுடையவனுமாகிய அவ் வுருத்திரன்,— नः = எமது,— अस्यै+मनायै = இப் புத்தியை, मारीरधत् = கெடுக்காதவனுகுக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

தேவ வுணவுடன், தோத்திரங்களால் அழைத்ததற்குரிய உருத்திரபரமேசுரனை, இனிய தோத்திரங்களால் சாந்தப்படுத்துகின்றோம். சிறியவயிற்றையும், அழகிய முகத்தையும் உடைய அவன், இத்தகைய எனது புத்தியைக் கெடுக்கற்க என்பதாம்.

இருக்கு 6.

उन्मा ममन्द वृषभो मरुत्वान् त्वक्षीयसा वयसा नाधमानम् ।

घृणीव च्छायामरपा अशीया विवासेयं रुद्रस्य सुम्नम् ॥ ६ ॥

பதவுரை.

(இ-ள்.) वृषभः = விரும்பியவற்றை யளிக்கின்றவனும்,— मरुत्वान् = மருத்துக்களென்னும் புத்திரர்களுடன் கூடியவனுமாகிய உருத்திர பரமேசுரன், नाधमानं+मा = வேண்டுகின்ற என்னை,— त्वक्षीयसा = இனிமையாகிய (நல்ல) वयसा = அன்னத்தால் (உணவுப் பொருள்களால்)— उत्+ममन्द = மிகக் களிப்படைவித் தருள்வானாக. (மற்றும்)— घृणी = வெயிற்பட்டவன்— छायां इव = நிழலை யடைவதுபோல்,— रुद्रस्य = உருத்திர பரமேசுரனுடைய,— सुम्नं = இன்பத்தை,— अरपाः = அடையாதவனாகிய யான்,— अशीय = அதை, அடைவதன் பொருட்டும்,— आ विवसेयम् = பணிசெய்கின்றேன். எ-று.

சாயணபாடியக் கருத்து.

வேண்டியவற்றை யளித்தருளும் உருத்திரபரமேசுரன், நல்ல வுணவுப் பொருள்களைக் கொடுத்து என்னைக் களிப்புறச்செய்தருள்வானாக. உருத்திரனது இன்பத்தை யடையாதவனாகிய யான், அதை யடைவதற்குப் பணி செய்து கிடக்கின்றேன் என்பதாம்.

இருக்கு 7.

क्व १ स्यते रुद्र मृळयाकुर्हस्तो यो अस्ति भेषजो जलाषः ।

अपभर्ता रपसो दैव्यस्याभीनुमा वृषभ चक्षमीथाः ॥ ७ ॥

பதவுரை.

(இ-ள்.) (हे) रुद्र ! = உருத்திர பரமேசுர !— ते = உனது,— मृळयाकुः = இன்பை யளிப்பதாய்,— स्यः = இருக்கும்,— हस्तः = திருக்கரமானது,— क्व = எங்கே? यः = யாதொரு,— हस्तः = திருக்கரம்,— भेषजः = மருந்தைச் செய்கின்றதும், जलाषः = இன்பை யளிக்கின்றதுமாமோ,— अस्ति = அக் கை இருக்கின்றதன்றோ, அதனால், என்னைப் பாதுகாப்பாயாக.— वृषभ ! = வேண்டியவற்றை யளிப்போய்! நீ— दैव्यस्य = தெய்வத்தின் சம்பந்தமாய் வரும்,— रपसः = பாவத்தை,— अपभर्ता = நீக்குவோனாகி,— मा = எனது பிழைகளை,— नु = விரைவில்,— अभि चक्षमीथाः பொறுத்தருள்வாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திரபரமேசுர! அனைவருக்கும் இன்பை யளித்தருளும், உனது திருக்கரத்தால் என்னைப் பாதுகாத்தருள்வாயாக. மற்றும், எனது பாவத்தைப் போக்கி, எனது பிழைகளையும் பொறுத்தருள்வாயாக என்பதாம்.

இருக்கு 8.

प्र बभ्रवे वृषभाय श्वितीचे महो महीं सुष्टुतिमीरयामि ।

नमस्या कल्मलीकिनं नमोभिर्गृणीमसि त्वेषं रुद्रस्य नाम ॥ ८ ॥

பதவுரை.

(இ-ள்.) बभ्रवे = *உலகைப் பரிபாலிப்போனும், அல்லது, பொன்னிறமுடையோனும்,*— वृषभाय = *விரும்பியவற்றை யளிப்போனும், அல்லது, இடபம் போல் வலிய செய்கையை யுடையோனும்,*— श्वितीचे = *கர்ப்பூர நிறமுடையோனுமாகிய உருத்திர பரமேசுரன்பொருட்டு,*— महः = *பெரிதினும்,*—महीं = *பெரிதும்,*— सुष्टुतिं = *அழகியதுமாகிய துதியை,*—प्र ईरयामि = *இனிது சொல்லுகின்றேன். துதியாள! நீயும்,*—कल्मलीकिनं = *இருளை யகற்றுதற்குரிய வொளியையுடைய உருத்திரனை,*— नमोभिः = *வணக்கங்களால், அல்லது, அவிகளால்,* नमस्य = *ஆராதிப்பாயாக.* (*யாமும்*)—रुद्रस्य = *உருத்திர பரமேசுரனது,*—त्वेषं = *கீர்த்திமலிந்த,*— नाम = *திருநாமத்தை,* गृणीमसि = *கூறுகின்றோம்.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

உலகனைத்தையும் பரிபாலிப்போனும், வேண்டியவற்றை யளித்தருள்வோனும், மிக்க வெண்மை நிறமுடையோனுமாகிய உருத்திரபரமேசுரனை, அழகிய நற்றுதிகளாற்றுதிக்கின்றோம். அவனுடைய திருநாமத்தையுஞ் சொல்லுகின்றோம். துதிப்போய்! நீயும், வணக்கத்தால், அல்லது, தேவவுணவால், அவ்வுருத்திரனையே ஆராதிப்பாயாக என்பதாம்.

இருக்கு 9.

स्थिरेभिरङ्गैः पुरुरूप उग्रो बभ्रुः शुक्रेभिः पिपिशे हिरण्यैः ।

ईशानादस्य भुवनस्य भूरेर्न वा उ योषद्रुद्रादसुर्यम् ॥ ९ ॥

பதவுரை.

(இ-ள்.) स्थिरेभिः = *வன்மையையுடைய,*—अङ्गैः = *அவயவங்களுடன் கூடியவனும்,*— पुरुरूपः = *பல்வகை வடிவங்களை யுடையவனும்,*— उग्रः = *பேரொளி*

*யை யுடையவனும்,—* बभ्रुः = *பரிபாலிப்பவனுமாகிய உருத்திர பரமேசுரன்,* शुक्रेभिः = *அழகுமலிந்த,—* हिरण्यैः = *பொன் அணிகளால்,—* पिपिशे = *இனிது விளங்குகின்றான்.—* अस्य भुवनस्य = *இவ் வுலகை,—* भूरेः = *பரிபாலிக்கின்ற* ईशानात् रुद्रात् = *பரமேசுரனாகிய அவ் வுருத்திரனினின்று,—*असुर्यं = *அவனது பேராற்றலானது,—* न वै उयोषत् = *வேறாகாது.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

எல்லாம் வல்ல உருத்திர பரமேசுரனுடைய பேராற்றலே, ஏனைய ஆற்றல்களுமாம் என்க. சத்தியானது சத்தனைத் தவிர்த்து வேறாகாது எனினும் அமையும் என்பதாம்.

இருக்கு 10.

अर्हन्बिभर्षि सायकानि धन्वार्हन्निष्कं यजतं विश्वरूपम् ।
अर्हन्निदं दयसे विश्वमभ्वं नवा ओजीयो रुद्र त्वदस्ति ॥ १० ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र ! = *உருத்திரபரமேசுர! நீ,—* अर्हन् = *தாங்க, உரியோனாகவேயிருந்து,—* सायकानि = *அம்புகளையும்,—* धन्व *வில்லையும்,—* बिभर्षि = *தாங்குகின்றனை. (அவ்வாறே),—* अर्हन् = *தக்கோனாயிருந்தே,—* यजतं = *போற்றத்தக்கதும்,—* निष्कं = *மங்களகரமுமாகிய,—* विश्वरूपं बिभर्षि = *பல்வகை வடிவைத் தாங்குகின்றனை. (அங்ஙனமே),—* अर्हन् = *உரியவனாகவேயிருந்து,—* अभ्वं = *பெரிய,—* इदं विश्वं = *இவ் விருவகை யுலகையும்,—* दयसे = *பாதுகாக்கின்றனை.—* त्वत् = *உனைத் தவிர்த்து,—* ओजीयः = *வல்லவன்,—* नवै अस्ति = *ஒருவனும் இலன்.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திரபரமேசுர! நீ, எல்லாஞ் செய்வதற்கு உரியோனாதலின், உலகனைத்தையும் அடக்கி ஆளுகின்றனை. உனையன்றி ஒருவரும் வல்லுநர் இலர். ஆதலின் நீயே முத்தொழிற்குரியான் என்பதாம்.

இருக்கு 11.

स्तुहि श्रुतं गर्तसदं युवानं मृगं न भीममुपहत्नुमुग्रम् ।
मृळा जरित्रे रुद्र स्तवानोन्यं ते अस्मन्निवपन्तु सेनाः ॥ ११ ॥

பதவுரை.

(இ-ள்.) (हे स्तोतः = *துதிப்போய்! நீயும்),—* गर्तसदं = *சுரங்கத்தில் வாழ்கின்றதும்,—*युवानं = *கட்டிளமையுடையது மாகிய,—* मृगं न = *சிங்கத்தைப்*

போன்று,—भीमं = பயங்கரமானவனும்,— उपहत्नुं = பகைவரைக் கொல்லுகின்றவனும்,— श्रुतं = கீர்த்தியுடையவனும்,— उग्रं = உக்கிரத்தை யுடையவனுமாகிய, रुद्रं = உருத்திர பரமேசுரனை,— स्तुहि = துதிப்பாயாக.— रुद्र ! = உருத்திர பரமேசுர ! நீ,— स्तवानः = எம்மாற் போற்றப்பெற்றவனு யிருந்து,— जरित्रे = துதிக்கும் எனக்கு,— मृळ = சுகத்தைக் கொடுத்தருள்வாயாக.— ते = உனது, सेनाः = சைன்யங்கள்,— अस्मन् = எம்மினின்றும்,— अन्यं = வேறாகியவனை, निवपन्तु = கொல்லுவன வாகுக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

சிங்கம் போன்று பயங்கரமுடையவனும், பகைவரைக் கோல்லுகின்றவனு மாகிய உருத்திர பரமேசுரனை, துதியாள! நீயும் துதிப்பாயாக. உருத்திர பரமேசுர ! நீ, எம்மாற் றுதிக்கப்பேற்று, எமக்குக் களிப்படைவித் தருள்வாயாக. நினது சேனையானது, என்னில் வேறாயவனை யழிப்பதாகுக என்பதாம்.

இருக்கு 12.

कुमारश्चित्पितरं वन्दमानं प्रति नानाम रुद्रोपयन्तम् ।
भूरेर्दातारं सत्पतिं गृणीषे स्तुतस्त्वं भेषजा रास्यस्मे ॥ १२ ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र ! = உருத்திர பரமேசுர !— वन्दमानं = வாழ்த்துகின்ற, पितरं = பிதாவை,— कुमारः चित् = குமாரன் அடைவது போன்றே,—उपयन्तं = என் பால் வருகின்ற,— त्वं = உன்னை.— प्रतिननाम = வணங்குகின்றேன். (மற்றும்), भूरेः = மிகுதியாக,— दातारं = தனத்தைக் கொடுக்கின்றவனும்,— सत्पतिं = நல்லாரைப் பாதுகாக்கின்றவனு மாகிய வுன்னை,— गृणीषे = துதிக்கின்றேன். स्तुतः त्वं = துதிக்கப்பெற்ற நீ,— अस्मे = எனக்கு,— भेषजानि = மருந்துகளை, रासि = அளித்தருள்வாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

நீ, நிறைந்த ஆயுளையுடையவனாகுதி; என்று வாழ்த்தும் தந்தையை, மகன் இனிது அடைவது போன்று, என்னிடம் அன்போடு எழுந்தருளும் உருத்திர பரமேசுர! உன்னைப் பலவாறாகத் துதிக்கின்றேன். எனக்கு மருந்து முதலியவைகளை யருள்செய்வாயாக என்பதாம்.

இருக்கு 13.

यावो भेषजा मरुतः शुचीनि या शंतमा वृषणो या मयोभु ।
यानि मनुरवृणीता पितानस्ताशं च योश्च रुद्रस्य वश्मि ॥ १३ ॥

பதவுரை.

(இ-ள்.) हे मरुतः = மருத்துக்களே !— वृषणः ! = வேண்டியவற்றை அளிப் போர்காள் !— वः = உங்களிடத்து,— या = எவைகள்,— शुचीनि = சுத்தமான வைகளும்,—शंतमा = பெருங்களிப்பைக் கொடுக்கின்றவைகளும்,—मयोभु = இன் பத்தை யுண்டாக்குதற் குரியவைகளும்,—नः = எம்மைப்,— पिता मनुः = பரிபா லிக்கின்ற மந்திரங்களும்,—अवृणीत = உங்களை மறைத்து நிற்பவைகளுமாயுள்ள, यानि भेषजाः = மருந்துகளுண்டோ ?— ता = அவைகளையும்,— रुद्रस्य = உருத்திர பரமேசுரனது,— शं, च, योः च = பிணிக ளடங்குவதையும் நீங்குவதையும், वश्मि = விரும்புகின்றனன். எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திரனுடைய புத்திரர்களான மருத்துக்களிடத்திலுள்ள, எனக்கு ஆரோக்கிய காரணங்களான மருந்துகளையும் விரும்புகின்றேன். உருத்திர பர மேசுரன், எனது பிணிகளை அடக்கவேண்டும், நீக்கவேண்டும் என்பதையும் யான் விரும்புகின்றேன் என்பதாம்.

இருக்கு 14.

परि॑णो हे॒ती रु॒द्रस्य॑ वृज्याः॒ परि॑त्वे॒षस्य॑ दुर्म॒तिर्म॒हीगा॑त् ।

अव॑स्थिरा म॒घव॑द्भ्यस्तनुष्व॒ मीढ्व॑स्तो॒काय॒ तन॑याय मृळ ॥ १४ ॥

பதவுரை.

(இ-ள்.) रुद्रस्य = உருத்திர பரமேசுரனுடைய.— हेतिः = ஆயுதங்கள், नः = எம்மை,— परिवृज्याः = விட்டு விடுவனவாருக.— त्वेषस्य = பிரகாசமாகிய உருத்திரனுடைய,—मही = பெரிய,—दुः मतिः = துன்பத்தைக் கொடுக்கும் நிக் கிரக புத்தியானது,—अवगात् = எம்மைத் தவிர்த்து புறம்பே செல்லுக.— हे मीढ्व ! = விரும்பியவைகளைப் பொழிவோய் ! (உன்னுடைய)— स्थिरा = உறுதி யான அம்புகளை,—मघ वद्भ्यः = தேவ வுணவையுடைய வேள்வித் தலைவர்களை முன்னிட்டு,— अव तनुष्व = நாணேற்றாதனவாகச் செய்வாயாக.— स्तोकाय = (அவ் வாறே எமது) புத்திரனுக்கும்,— तनयाय = பௌத்திரனுக்கும்,— मृळ = நலஞ் செய்தருள்வாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுர ! உனது, வில் முதலான ஆயுதங்களை எங்களிடத்துச் செலுத்தாதருள்வாயாக. வேள்வித் தலைவர்களிடத்தும் அப் பாணங்களை விடா தருள்வாயாக. எமது புத்திர பௌத்திரர்கட்கும் இன்பை யளித்தருள்வாயாக என்பதாம்.

இருக்கு 15.

एवा बभ्रो वृषभ चेकितान यथा देव न हृणीषे न हंसि ।
हवनश्रुन्नो रुद्रेहबोधि बृहद्वदेम विदथे सुवीराः ॥ १५ ॥

பதவுரை.

(இ-ள்.) बभ्रो ! = உலகைப் பாதுகாப்போய்! அல்லது, பொன்னிறத்தோய்!— वृषभ ! = வேண்டியவற்றைப் பொழிவோய்!— चेकितान ! = அனைத்தையு முணர்வோய்!—देव !—பிரகாச முடையோய்!—रुद्र ! = உருத்திர பரமேசுர! நீ— यथा न हृणीषे = எவ்வாறு முனிவுறுதிருப்பையோ,— न हंसि = மற்றும், துன்புறுத்தமாட்டாயோ,— एव = அவ்வாறு,— (हे रुद्र !) हवनश्रुत् = யாம் அழைப்பதைக் கேட்போனுயிருந்து, इह = ஈண்டு,— नः = எங்கட்கு,—बोधि = அறிவுறுத் தருள்வாயாக. विदथे = வேள்வியில்,— सुवीराः = நற்புத்திரர்களை யுடையவர்களாய்,— बृहत् = மகத்தாகிய நினது துதியை,— वदेम = சொல்லுகின்றோம். எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுர! நீ, எவ்வாற்றால், முனிவுறாது களிப்புறுவையோ, அவ்வாற்றை எங்கட்கு உபதேசித்தருள்வாயாக. வேள்வியில் உன்னை இனிது துதிக்கின்றோம் என்பதாம்.

மூன்றாவது வருக்கம் இரண்டாம் மண்டலம்
**ஒன்பதாம் அனுவாகம் முற்றிற்று**
மூன்றாவது உருத்திரம் முடிந்தது.

---

## ஐந்தாம் அஷ்டகம்

## மண்டலம்—7. வருக்கம்—13. சூக்தம்—46-ல்

---

இருக்கு 1.

इमा रुद्राय स्थिरधन्वने गिरः क्षिप्रेषवे देवाय स्वधाव्ने ।
अषाळ्हाय सहमानाय वेधसे तिग्मायुधाय भरता शृणोतु नः ॥ १ ॥

பதவுரை.

(இ-ள்.) (हे स्तोतारः) = (துதிப்போர்களே! நீவிர்)— स्थिरधन्वने = உறுதியாகிய வில்லை யுடையோனும் — क्षिप्रेषवे = விரைவிற் செல்லும் பாணத்தை

யுடையவனும்,— स्वधान्ने = உணவுப் பொருள்களை யுடையவனும்,—अषाह्लाय = ஒருவராலும் அடக்க முடியாதவனும்,—सहमानाय = பகைவரை யடக்குகின்றவனும்,— वेधसे = விதிக்கின்றவனும்,— तिग्मायुधाय = கூறிய ஆயுதங்களையுடையவனுமாகிய,—रुद्राय देवाय = உருத்திர பரமேசுரன் பொருட்டு,—इमा गिरः = இத்துதிகளை,—भरत = நிறையச் சொல்வீர்களாக.—नः = எமது துதிகளை,— शृणोतु = உருத்திரபரமேசுரன் கேட்டருள்வானாக. எ-று.

### சாயணபாடியக் கருத்து.

எமது துதியாளர்களே! நீவிர், உறுதியாகிய வில்லையும், விரைவிலோடும் அம்பையும், உணவுப் பொருளையு முடையவனும், பிறரால் அடக்கமுடியாதவனும், பகைவரை வெல்லுவோனுமாகிய உருத்திர பரமேசுரனுக்கு, இத்தகைய துதிகளை நிறையச் செய்வீர்களாக. உருத்திரபரமேசுரனும் எமது துதியைக் கேட்டருள்வானாக என்பதாம்.

### இருக்கு 2.

स हि क्षयेण क्षम्यस्य जन्मनः साम्राज्येन दिव्यस्य चेतति ।

अवन्नवन्तीरुपनो दुरश्चरानमीवो रुद्र जासु नो भव ॥ २ ॥

### பதவுரை.

(இ-ள்.) सः हि = உண்மையில், அவ் வுருத்திர பரமேசுரன்,— क्षम्यस्य जन्मनः = மண்ணிலுதித்தவைகளை,—क्षयेण = ஐசுவரியத்துடன் கூடவே,—चेतति = உணர்கின்றனன்.— दिव्यस्य = விண்ணிலுதித்தவைகளையும்,— साम्राज्येन = பாக்கிய இலக்குமியுடன் கூடவே,—चेतति = உணர்கின்றான். (இனிப் பிரத்தியட்சம்)— रुद्र ! = உருத்திர பரமேசுர! நீயும்— अवन्तीः = துதிக்கின்ற,— नः = எங்களைப்,— अवन् = பரிபாலித்து,— दुरः = எமது இல்லிற்கும்,—उपचर = வந்தருள்வாயாக.—नः = மற்றும், எமது,—जासु = மக் (களுக்குள்) களை,—अनमीवः = பிணியிலாதவர்களாக,—भव = செய்வோனாகுதி. எ-று.

### சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுரன், உண்மையில் மண்ணிலுண்டான மக்களை ஐசுவரிய முடையவர்களாகவும், விண்ணிலுண்டானவர்களைச் சாம்பிராச்சிய முடையவர்களாகவும் எண்ணி யருள்கின்றனன். (நேரிற் கூறல்) உருத்திர பரமேசுர! எமது மக்களைப் பிணியிலாதவர்களாகச் செய்வதுடன் எமது வீட்டிற்கும் வந்தருள்வாயாக என்பதாம்.

இருக்கு 3.

या ते दिद्युदवसृष्टा दिवस्परि क्ष्मयाचरति परि सा वृणक्तु नः ।

सहस्रं ते स्वपिवात भेषजामानस्तोकेषु तनयेषु रीरिषः ॥ ३ ॥

பதவுரை.

(இ-ள்.) (हे रुद्र !) = (உருத்திர பரமேசுர !)—ते = உனது சம்பந்தமாய், दिवस्परि = வானிலிருந்து,—अवसृष्टा = வீழ்த்தப்பட்டதாய்,—क्ष्मया = மண்ணுடன் கூடி,—चरति = இருக்கின்ற,—या दिद्युत् = யாதொரு இடியுண்டோ,—सा = அது, नः = எங்களை,— परिवृणक्तु = நீக்கிவிடுவதாகுக. (மற்றும்)— स्वपिवात ! = இனிது போற்றத்தக்கோய் !— ते = உனது,— सहस्रं = ஆயிரக்கணக்கான,— भेषजा = மருந்துகளை,—नः = எமக்கு அளித்தருள்வாயாக.—तोकेषु = (எமது) புத்திரர்களிடத்தும்,— तनयेषु = பௌத்திரர்களிடத்தும்,— मारीरिषः = துன்பத்தைச் செய்யாதருள்வாயாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

மின்னல் வடிவாகிய உருத்திர பரமேசுர! உனது சம்பந்தமாய் வானிலிருந்து விழுகின்ற இடியானது எம்பாற் படாது அகலுக. நினது மருந்துவகைகளை எமக் களித்தருள்வாயாக. எமது புத்திர பௌத்திரர்களைத் துன்புறுத்தாதருள்வாயாக என்பதாம்.

இருக்கு 4.

मा नो वधी रुद्र मापरादा माते भूमप्रसितौ हीळितस्य ।

आनो भज बर्हिषि जीवशंसे यूयं पात स्वस्तिभिः सदा नः ॥ ४ ॥

பதவுரை.

(இ-ள்.) हे रुद्र ! = உருத்திர பரமேசுர !— नः = எம்மை,— मा वधीः = துன்புறுத்தாதருள்வாயாக,—मा परा दाः = மற்றும், குறைவு படுத்தாதே. (மற்றும்) हीळितस्य = முனிவுற்ற,—ते = உனது,—प्रसितौ = வலியகட்டுப்பாட்டில்,—मा भूम = யாம் சிக்கிக்கொள்ளாதவராவோமாக. (மற்றும்)— जीवशंसे = சீவர்களாற் போற்றுகின்ற,— बर्हिषि = வேள்வியில்,— नः = எம்மை,— आभज = (நின்னை வழிபடுவோராகச் செய்தருள்வாயாக.—यूयं = உருத்திரன் முதலான தேவர்களே ! நீவிர்,—नः = எங்களை,—स्वस्तिभिः = மங்களத்துடன்,–सदा पात = எப்போதும் பாதுகாத்தருள்வீர்களாக. எ-று.

சாயணபாடியக் கருத்து.

உருத்திர பரமேசுர! நீ, எம்மைத் துன்புறுத்தாதருள்வாயாக. இழிவு படுத்தாமலும் அருள்வாயாக, மற்றும், உனது பந்தத்துள், யாம் கட்டுப்படாதவர்களாவோமாக. போற்றற்குரிய வேள்வியில், எம்மை வழிபாடுடையவர்களாகச் செய்தருள்வாயாக. எப்போதும் எங்களை மங்களமாய்ப் பரிபாலித்தருள்வாயாக. என்பதாம்.

*ஐந்தாம் அஷ்டகம் பதின்மூன்றும் வருக்கம்*

**முற்றும்.**

நான்காவது உருத்திரம் முடிந்தது.

---

## *அஷ்டகம்—5. வருக்கம்—18. சூக்தம்—7-ல்*

---

**இருக்கு 1.**

सोमारुद्रा धारयेथामसुर्यं१ प्रवामिष्टयोरमश्नुवन्तु ।

दमेदमे सप्तरत्ना दधाना शं नो भूतं द्विपदेशं चतुष्पदे ॥ १ ॥

பதவுரை.

(இ-ள்.) हे सोमारुद्रा! = *சோமருமே! உருத்திரனே! நீவிர்.*—असुर्यं = *அசுரர்களுடைய வன்மையை,*— धारयेथां = *எங்களிடத்து இருக்கச் செய்வீர்களாக.* दमे+दमे = *எமது மனைக ளனைத்திலும் உள்ள,*— इष्टय: = *வேள்விகள்,*— वां = *உங்க ளிருவரையும்,*—अरं = *பரந்து,*—प्राश्नुवन्तु = *இனிது சூழ்ந்து கொள்ளுவனவாகுக.*-सप्तरत्ना दधाना = *எழுவகை இரத்தினங்களை யணிந்துள்ள நீங்களிருவரும்,* न: = *எங்கட்கு,*— शं = *சுகத்தை,*— भूतं = *உண்டாக்குபவர்க ளாகுக.*—द्विपदे = *எமது புத்திரர் முதலானோரிடத்தும்,*—चतुष्पदे = *பசு முதலியவைகளிடத்தும்,* शं भूतं = *சுகத்தை யுண்டாக்குபவர்க ளாவீர்களாக.* எ-று.

சாயணபாடியக் கருத்து.

சோமன், உருத்திர பரமேசுரன் இருவரும், எங்கட்கு அசுரர்களுடைய ஆற்றல் போன்ற ஆற்றலைக் கொடுப்பார்களாக. மற்றும், எமது வீடுகளிற் செய்யப்படும் வேள்விகள் அவ் விருவருக்கும் நிறைவனவாகுக. பலவகை இரத்தினங்களை யணிந்துள்ள அவர்கள் எமது புத்திரர் முதலானோருக்கும், பசு முதலியவைகளுக்கும் இன்பத்தைக் கொடுப்பார்களாக என்பதாம்.

இதில், நம: என்பது முதலிய ஒன்பதும், இடையிலுள்ள எசுருக்குப் பொதுவானவைகள். முதலாவது ஒரு எசுராம். முடிவிலுள்ளன நான்கு எசுர்க்கள். ஐந்தாவது மூன்று சாமங்கட்கும் பொதுவாம்.

ஈண்டு உத்தரீயமுடையார் என்பதற்கு, பிராணிகளைப் பரிபாலிப்பதன் பொருட்டு எழுந்து நிற்கின்ற திருமேனியையுடையவர் என்பர் சிலர்; ஆயினும் 'நம: உஷ்ணீஷிணே' "உத்தரீயமுடையோனுக்கு நமஸ்காரம்" எனப் பிற சுருதியுங் கூறுதலின் இதுவே ஈண்டைக்கியை புடையதாமென்பதுணர்க.

நாணேற்றிய தநுவைத் தாங்கினவர்கட்கும் வணக்கம், என்பது, பிநாகபாணிகளென்பதாம்,

அங்ஙனமே உருத்திராத்தியாயமும்,

"நம இஷுமத்ப்யோ தந்வாயிப்யஶ்ச"

"பாணத்தையுடையவர்கட்கும் தநுவையுடையவர்கட்கும் நமஸ்காரம்" என்று கூறுகின்றது.

"பூணூல் உடையவர்கட்கும் வணக்கம்" என்பது, உருத்திர பரமேசுரனுடைய கணங்கள் பலவகைப்பட்டவர்களாதலின் என்க.

தநுவில் பாணத்தைத் தொடுப்பவர்கட்கும், குறிப்பில் பாணத்தை விடுகின்றவர்கட்கும் வணக்கம் என்பது முதலியவைகளால், உருத்திர கணங்கள் போரிலும், படைகளிலும் மிக வல்லுநர்களென்பதும், யாண்டும் வெற்றியையே யுடையவர்களென்பதும் அறிவுறுத்தினமை காண்க.

"நன்கு கொல்லுமாறு ஆயுதங்களை ஏவுகின்றவர்களுக்கும், நன்கு கொல்லுகின்றவர்களுக்கும் வணக்கம் என்பது,

இதனால் பிரமத கண உருத்திரர்கள் மிக வல்லவர்களென்பதும், அவர்களுடைய ஆயுதங்களும், மிக வன்மையுடையன என்பதும் அறிவுறுத்தப் படுகின்றது.

பவக்கடலினின்று கரை யேறுகின்றவர்கட்கும் வணக்கம், உயிர்களைக் கரையேற்றுகின்றவர்கட்கும் வணக்கம், என்பது, இவ்வாற்றால் துஷ்டர்களை நிக்கிரகிக்கின்ற உருத்திர கணங்கட்கு வணக்கங் கூறப்பட்டவாறும்.

வழிபடத்தக்கவர்களான உருத்திர கணங்கட்கு வணக்கம், பரமேசுரனை வழிபடுகின்றவர்களான உருத்திர கணங்கட்கும் வணக்கம் என்பது,

தமதான்மாவின்கண் நிலையை யுடையவர்கட்கும் வணக்கம், மற்றும், தமது ஆன்மநிலை தவறுங்கால் பரமேசுரனுக்கு அருகிலிருந்து கொண்டிருப்பவர்கட்கும் வணக்கம் என்பதாம். அதாவது பரமேசுரனையே உள்ளத் திருத்துவான் மேற்கொண்டவர்கட்கும் நமஸ்காரம் என்பது பொருள். ஈண்டு இதுவே பாடியத்திற்கும் இயைந்த பொருளாமென்பதும், ஏனையவைகள் அல்லாதவைகளா மென்பது முணர்க.

நியமிப்பவனுக்கும், மற்றும், நியமஞ் செய்கின்ற தேவர்களையும் நியமஞ் செய்கின்றவனுக்கும் வணக்கம், என்பது,

மேற்கூறியவாற்றால் உருத்திர கணங்களை வணங்கிக்கொண்டு, நேரே உருத்திர பரமேசுரன் இரண்டு வாக்கியங்களால் வணங்கப்படுகின்றான் என்பதாம்.

தாபர சங்கமப் பொருள்களைச் செலுத்துவோன் எனல் ஈண்டைக்கி யையாமை காண்க.

அங்ஙனமே துறவறத்தானுகவும், இல்லறத்தானுகவும் இருக்கின்றவனுக்கும் வணக்கம் என்பதும், ஈண்டுப் பொருந்தாததாமெனக.

நன்னெறியையும், தீ நெறியையும் உண்டாக்கினவனுக்கும் வணக்கம், என்பது,

ஈண்டு, உருத்திர பரமேசுரனே எல்லா வித்தைகட்குங் காரணனுதலின், அவனே முத்திக்குச் சாதனமாகிய வைதிக மார்க்கங்களையும், முத்தி நெறியலாத புன்னெறிகளையும் அருளியுள்ளான். இதுவும் மக்களின் நல்வினை தீவினைகளைத் தழுவி, முறையாய் பன்னுளில் முத்திநெறியிற் கூட்டுவிக்கு மென்பது கருதி பரமேசுரனுடைய கருணைச் செயலேயாம் என்பதுணர்க.

விருத்தியுரை முற்றும்.

---

## பத்தாவது மந்திரம்

முற்றிற்று.

---

## பதினோராவது கீத மந்திரம்.

१ २ १ २ १ २ १ २ १
अधिप । ताइ । मित्रप । ताइ । क्षत्रप । ताइ । स्वः पताइ । धन-
२ - - १ २ र र२ १र २ र र१र २र र१र २
पता २ इ । ना २ माः । नमोन्नाय नमोन्नपतय एकाक्षाय चावपन्नादायच
११र१ २ १ २र १२र १ २ १र १२१ २र २१ १ २
नमोनमः । रुद्रायतीरसदे नमः स्थिराय स्थिरधन्वने नमः प्रतिपदायच पट-
१ र २ १२१ २ र १ र २ १ २र र१र २ र र१र १२
रिणेच नमस्त्रियंबकायच । कपर्दिनेच नम आश्रायेभ्यश्च प्रत्याश्रायेभ्यश्च
१ २ १र २ १र २ १ २१र२ ११र १२ १र २ १ २र
नमः ऋव्येभ्यश्च बिरिंफेभ्यश्च नमः संवृतेच विवृतेच । अवज्यामिव धन्वनो
१ र २ १ २र १ र २ १ २ १ २ १ २ १
विते मन्युन्नयामसि मृडतान्न इह अस्मभ्यम । इडा २३ भा । य इदं विश्वं
र २ १ ३ ५
भूतं । युयो ३ । आउ । वा २३ । ना २३४ माः ॥

### மந்திரத்தின் பதவுரை.

| | | |
|---|---|---|
| नमोऽन्नाय | 𑌨𑌮𑍋𑌽𑌨𑍍𑌨𑌾𑌯 | நிலஞ்கிய பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमोऽन्नपतयेच | 𑌨𑌮𑍋𑌽𑌨𑍍𑌨𑌪𑌤𑌯𑍇 𑌚 | நிலத்திற்கு இறைவனாகிய பரமேசுரனுக்கும் வணக்கம். |
| एकाक्षायच नमः | 𑌏𑌕𑌾𑌕𑍍𑌷𑌾𑌯 𑌚 𑌨𑌮𑌃 | ஒன்றாய் நிறைந்துள்ள பரமேசுரனுக்கு, அல்லது ஒன்றாகிய மனமுடைய பரமேசுரனுக்கு, அல்லது ஒன்றாகிய நெற்றிக் கண்ணை யுடைய பரமேசுரனுக்கு வணக்கம். |
| अवपन्नादायच नमः | 𑌅𑌵𑌪𑌨𑍍𑌨𑌾𑌦𑌾𑌯 𑌚 𑌨𑌮𑌃 | உதிர் சருகை யுண்கின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमो रुद्राय च | 𑌨𑌮𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌚 | அஞ்ஞானத்தை நீக்குகின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| तीरसदे नमः | 𑌤𑍀𑌰𑌸𑌦𑍇 𑌨𑌮𑌃 | பவக்கடலின் கரை யென்னும் நித்திய முக்தியில் விளங்குகின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमस्थिराय च | 𑌨𑌮𑌸𑍍𑌥𑌿𑌰𑌾𑌯 𑌚 | திடமாகிய பரமேசுரனுக்கு வணக்கம். |

| | | |
|---|---|---|
| स्थिरधन्वने | ஸ்திரதந்வநே | வன்மை மலிந்த தநுவையுடைய பரமேசுரனுக்கு வணக்கம். |
| नमः प्रतिपदाय | நம: ப்ரதிபதாய | உயிர்களுக்கு அருகிலிருக்கின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| पटरिणे नमः | படரிணே நம: | உயிர்க் கூட்டங்களுள் நிறைந் திருக்கின்ற பரமேசுரனுக்கு வணக்கம். |
| त्रियंबकायच नमः | த்ரியம்பகாயச நம: | முக்கண்ணனுக்கு வணக்கம். |
| कपर्दिने नमः | கபர்திநே நம: | தெளிந்த கங்கைப் பெருக்கைச் சடையிற்றாங்கிய பரமேசுர னுக்கு வணக்கம். |
| नमः क्ष्वेभ्यश्च | நம: க்ஷ்வேப்யஶ்ச | பெரும் வன்மையை யுடைய பிர மத கணங்கட்கும் வணக்கம். |
| विरिंफेभ्यश्च | விரிம்பேப்யஶ்ச | கொடிய வுயிர்களைக் கொல்லு கின்றவர்களுக்கும் வணக்கம். |
| नमः संवृतेच | நம: ஸம்வ்ருதேச | மாயா சத்தியால் தனது திரு மேனியை மறைத்துக்கொள்ளு கின்ற பரமேசுரனுக்கு வணக் கம். |
| विवृतेच | விவ்ருதேச | அருட் சத்தியால் தனது திரு மேனியை வெளிப்படுத்தி யருள்கின்ற பரமேசுரனுக்கு வணக்கம் |

விருத்தியுரை.

"நிலனாகியவனுக்கும், நிலத்திற்கு இறைவனாகியவனுக்கும் வணக்கம்" என்பது,

ஈண்டு, அன்னமென்பது பூமியாம். அன்னத்திற்குப் பதி என்பது பூமிக்கு இறைவனென்பதாம். என்னை? அன்னம் என்னுஞ்சொல் ஈண் டுப் பூமியை யுணர்த்தி நிற்றலினென்க.

இதுபற்றியே சுருதியும்,

"அந்நமஸ்ருஜத்"

"அன்னத்தை யுண்டாக்கி யருளினன்" என்றற் றொடக்கத்து வாக்கி யத்தாலுணர்த்துகின்றது.

அங்ஙனமே,

'பரயிவ்யயிகார' என்றற் றொடக்கத்துப் பிரம சூத்திரமுங் கூறு கின்றது என்பது காண்க.

அல்லது, அன்ன முதலிய எல்லாப் போக்கியப் பொருள்களுமாகிய பரமேசுரனுக்கு வணக்கம். அவற்றை யுண்கின்ற போக்தாவாகியவனுக்கும் வணக்கம் என்பதும் ஈண்டுப் பொருந்துமாறுணர்க.

ஒன்றாய் நிறைந்தவனுக்கு வணக்கம், என்பது,

வியாபகனும் ஒருவனுமுள்ள உருத்திர பரமேசுரனுக்கு வணக்கம் என்பது பொருள்.

பரமேசுரன் ஒருவனே என்பதும், அவன் யாண்டும் நிறைந்துள்ளவன் என்பதும் எல்லா நூல்களினும் மிக வெளிப்படையாமாதலினென்க.

அற்றாகலினன்றே, சுருதியும்,

"ஏக ஏவ ருத்ரோ ந த்விதீயாய தஸ்தே ।
ஸர்வ வ்யாபீ ஸ பகவான் தஸ்மாத் ஸர்வகத: சிவ:"

"உருத்திர பரமேசுரன் ஒருவனே இருவரலர். அவன் யாண்டும் நிறைந்தவன், பகவான் ஆதலின், சிவன் எல்லாவற்றுள்ளுங் கலந்து நிற்கின்றான்" என்று கூறுகின்றது.

கீத பாடியத்திலே, வியாபகமாகிய திருவுளத்தை யுடையவன் என்பது பொருள். அதாவது நிறைந்ததாகிய ஒரு தெய்வீக மனதை யுடையவன் பரமேசுரன் என்றவாறும்.

இதுபற்றியே, சுருதியும்,

"மனோஸ்ய தைவம் சக்ஷுரிதி"

"இப் பரமேசுரனுடைய மனம் தெய்வீக திருஷ்டியாம்" என்று கூறுகின்றது.

அற்றேல், நம்மனோர்களைப்போன்று புலன்களை வேண்டானோ வெனின்?

புலன்களை வேண்டாமலே அனைத்தையு முணர்கின்ற அருள் வலியானாதலின் புலன்களை வேண்டாமலே அனைத்தையு முணர்வன் என்க.

இதைத் தழுவியே சுருதியும்,

"பச்யத்யசக்ஷு: ஸ ச்ருணோத்யகர்ண:"

"கண்ணின்றிப் பார்க்கின்றான், காதின்றிக் கேட்கின்றான்" என்றற் றொடக்கத்து வாக்கியங்களால் இப் பொருளையே வெளியாய்த் தெரிவிக்கின்றது.

அல்லது, ஒன்றாகிய நெற்றிக்கண்ணை யுடையான் என்பதும் பொருந்து மென்றுணர்க.

'உதிர்ந்த சருகுகளை யுண்கின்ற பரமேசனுக்கு வணக்கம்' என்பது, தவமும், பரமேசுரனுடைய பத்துக் குணங்களில் இதுவும் ஒன்று மாதலி னென்க.

இது பற்றியே, சுருதியிலும்,

"ஜ்ஞாநம் விராகமைஶ்வர்யம் தபஸ்ஸத்யம் க்ஷமாத்ருதி꞉ ।
ஸ்ரஷ்ட்ருத்வமாத்மஸம்போதோ ஹ்யதிஷ்டாத்ருத்வமேவ ச"

"ஞானம், விராகம், ஐசுவரியம், தவம், சத்தியம், க்ஷமை, தைரியம், படைத்தல், ஆன்மஞானம், அதிட்டானத்தன்மை" என்பன, பரமேசுரனுடைய ஐசுவரிய குணங்கள் எனக் கூறப்பட்டிருக்கின்றன என்பது காண்க.

அங்ஙனமே வாயுசங்கிதையும்,

"அவ்யயாநி தசைதாநி நித்யம் திஷ்டந்தி ஶங்கரே"

"கேடிலாத இக்குணங்கள் சங்கரனிடத்தில் என்றுமிருக்கின்றன" என்று கூறுகின்றது.

'அஞ்ஞானத்தைப் போக்குகின்றவனுக்கு வணக்கம்' என்பது, தனது ஆன்மானந்தத்தை மறைத்திருக்கின்ற அஞ்ஞானத்தைத் தனது சொரூப ஞானத்தாற் போக்கியருளி அவ்வானந்தத்தைக் கொடுக்கின்றவன் என்பதாம்.

அல்லது, ரௌதி=பேசல், தத்துவமசி, முதலிய மகாவாக்கியங்களை, த்ராவயதி=கொடுக்கின்றவன். அதாவது உபதேசிக்கின்றவன் உருத்திரன் என்பதுமாம்.

அல்லது, எப்போதும் அன்பர்களின் பவத்துன்பங்களைப் போக்குகின்றவன் என்றலுமமையும்.

ஈண்டு, உருத்திரனானவன் மரண காலத்தில் தாரகப்பிரம மந்திரத்தை யருளிச் செய்து அன்பர்களை முத்தியடைவிக்கின்றானென்பதும் உணரற் பாலது.

இதுபற்றியே, சாபாலோபநிடதமும்,

"ப்ராணேஷூத்க்ரமமாணேஷு ருத்ரஸ்தாரகம் ப்ரஹ்ம வ்யாசஷ்டே"

"பிராணன் நீங்குமிடத்து, உருத்திர பரமேசுரன் தாரக மந்திரத்தை உபதேசிக்கின்றான்" என்று கூறுகின்றது.

அற்றேலஃதாகுக ?

" ஊயா஛ு வஂக்ூதிஂ விஷ்ரா ஊயிநஞ உஹெஸ்பாஷ "

" மாயையைப் பிரகிருதியென்றுணர்க, மாயையை யுடையவனை (மாயாவியை) மகேசுரனென்றுணர்க " என்ற சுருதி வாக்கியத்தைத் தழுவி, உருத்திர பரமேசுரனே அஞ்ஞானத்தை யுடையவனாதலின், அவன் அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தை யளித்து இன்புறச் செய்வானெனல் முரணாகாதோவெனின் ? அற்றன்று, மூலப் பிரகிருதிக்கு இருவகைச் சத்திகளுள்ளன ; அவற்றுள், மறைக்கின்ற சத்தியை யுடைய பிரகிருதியே அஞ்ஞானமாம்; அதுவே மக்கட்கு உபாதி யெனப்படும். விட்சேபம், (உண்டாக்கும்) சத்தியையுடையதே மாயை யெனப்படும்; அது ஈசுரனுக்கு உபாதியாம்; என்றிவ்வாறு பிரித்துக்கொள்ளில் முரண் என்ப தெங்ஙனம் ?

' அஞ்ஞானமாகிய கடலின் கரையின்கண் விளங்குகின்ற உனக்கு வணக்கம் ' என்பது,

உருத்திர பரமேசுரன் நித்திய முத்தனாவனெனப் பல சுருதிகளும் முழங்குகின்றன வாதலின் என்பதுணர்க.

அற்றாகலினன்றே, கைவல்யோபநிடதமும்,

" உஊாஸஹாயஂ வாமெஸ்பாஷ "

" உமையுடன் கூடிய பரமேசுரனை " என்று தொடங்கி,

" ஸஊூ ஸாக்ஷிஊஸஃ வாஸ்ராஷ "

' அனைத்திற்குஞ் சாக்ஷியும், அஞ்ஞானத்தைக் கடந்து நிற்கின்றவனுமாகின்றான் ' என்று கூறி முடிக்கின்றது.

அல்லது, தமசு ஆறத்துவா மயமாகிய உலகனைத்திற்கும், பரம் = உன்மனைமுதலிய சகல உலகத்தையுங் கடந்த, சோம லோக மென்னும் பரமேசுரனுடைய வுலகத்தில் விளையாடுகின்றவன் என்பதுமாம்.

" நஊஃ ஷ்ிராய ஷ்ிரயநெந "

" வல்லவனும், வலிமிகுந்த தநுவையுடையவனுமாகிய பரமேசுரனுக்கு வணக்கம் " என்பது,

பகைவரை யடக்கும் முறையில் உறுதியுடையவனும், வலிமிகுந்த ஆயுதத்தை யுடையவனும் என்பது பொருள். பயமிலாதோன் என்பர் சிலர், அஃது இங்கு இயைபிலாததென்றுணரற்பாலது.

உண்மையிலோ, 'ஸ்திரம்' என்பதற்கு அசலம் என்பது பொருளாம். அதாவது கைலையங்கிரியின்கண் வாழ்கின்றவனும், மா மேருவை வில்லாகக் கொண்டவனுமாகிய பரமேசுரன் என்பது கருத்தாம். இதனால், இராவணன் கைலையங்கிரியை யெடுத்து அழிந்தானென்பதையும், திரிபுரர்கள் ஆணவத்தா லழிந்தார்களென்பதையும் ஈண்டு ஊகித்துக்கொள்க.

உயிர்களின் காலடியிலிருக்கின்றவனும், உயிர்க் கூட்டத்தில் இருக்கின்றவனுமாகிய பரமேசுரனுக்கு வணக்கம், என்பது,

ஈண்டுக் காலடியில் என்பதால் யாண்டு நிறைந்திருக்கின்றவன் என்பதும், உயிர்களனைத்தையுஞ் செலுத்துகின்றவன் என்பதுங் கொள்ளக் கிடந்தமை காண்க.

மற்றும், 'பதம்' என்பதற்கு, அதிகாரம், பாதக்குறி, இடம், பாதுகாப்பு, என்பவைகள் பொருள் என்று அமரகோசமுங் கூறுகின்றது என்பதும், இதுவே பாடியத்திற் கூறியுள்ள பொருள் என்பதும் ஈண்டு உணரற்பாலது.

அல்லது, 'பதம்' என்பது சொல்லாமாதலின், எல்லாச் சொற்கும் பொருளாயிருக்கின்றவன் பரமேசுரன் எனினுமமையும்,

முக்கண்ணனுக்கு வணக்கம் என்பது,

ஈண்டு, அம்பகம்=கண், என்று கூறுகின்றது ஹலாயுதம் என்னும் வடமொழிக் கோசம், ஆதலின், சோமன், சூரியன், அக்கினி என்னும் மூன்று கண்களை யுடையவன் பரமேசுரனே என்பதாம்.

இதுபற்றியே மாபாரதமும்,

" சசிஸூர்யாக்நி நேத்ராய "

" சூரியன், சந்திரன், அக்கினி என்னும் மூன்று கண்களையுடையவன் " எனக் கூறுகின்றது.

இதுபற்றியன்றோ, ஒருகால் அம்பிகை பரமேசுரனது கண்களைத் திருக்கரத்தால் மூடிக்கொள்ள, மூன்றுலகங்களும் மறைபட்டன என்பதும் ஒரு உண்மைச் சரிதமாயிற்றென்க.

அல்லது, அம்ப=என்பது வேதமாம். ஆதலின், வேதங் கூறிய அகார, உகார, மகாரங்களாற் கூறப்பட்டவன். அல்லது மூன்று வேதங்களாற் கூறப்பட்டவன் என்பதும் அமையுமென்றுணர்க.

அல்லது, பூ, புவ: சுவ:, (மண், நீர், வான்) என்னும் மூன்றாலும் ஆராதிக்கத்தக்கவன் என்பதொன்று.

அற்றாகலினன்றே, துரோண பருவமும்,

" த்ரிபிராவ: வாயிபி: சைவ த்ர்யம்பக ஸ்த தஸ்ம்ருத: "

"வான், நீர், மண் என்பவைகளைக்கொண்டு ஆராதிக்கப்படுந் தன்மையால் திரியம்பகன் எனப் பெறுகின்றான்" என்று கூறுகின்றது.

மற்றும், ஈண்டு, திரியம்பகன் என்பதால், பரமேசுரனிடத்திலிருந்துண்டாகிய மும்மூர்த்திகளின் மந்திரத்தை யுட்கொண்ட திரியம்பக மந்திரமென்னும், அபமிருத்து நீங்குதற்குக் காரணமாகிய மந்திரசெப ஆராதனையும், சாதுர்மாசிய ஆராதனை முதலியவைகளும் குறிப்பிக்கப்பட்டன என்பதாம்.

இது கொண்டே, அநுசாசன பருவமும்,

" ஸவ்யஜஹஸ்தாதம்ருஜத் ப்ரஹ்மாணம் வாமதோ ஹரிம் ।
ப்ருஷ்டே மஹாதேவம் ஈசான: "

"பரமேசுரன், இடக்கரத்திலிருந்து பிரமனையும், வலக்கரத்திலிருந்து விஷ்ணுவையும், பின்புறத்திலிருந்து மகேசுரனையும் படைத்தனன்" என்று கூறுகின்றது.

தெளிந்த கங்கையைத் தரித்தவனுக்கு வணக்கம் என்பது.

ஈண்டு, (கபர்த்தி) அதாவது க=நீர், பர்=பெருக்கு, நீர்ப்பெருக்கைத் தரித்தவன் எனவே கங்கையின் பெருக்கைத் தாங்கியருளினவன் பரமேசுரன் என்று, அட்டோத்தர சதநாம உரையிற் கூறியுள்ளதும் கவனிக்கற்பாலதாம்.

இதுபற்றியே, இராமாயணமும்,

" பபாத ஜாஹ்நவீ புண்யா புண்யே ருத்ரஸ்ய மூர்த்தநி "

"புண்ணிய கங்காதேவியானவள் புண்ணியவடிவ உருத்திர பரமேசுரனுடைய சிரசின்கண் விழுந்தனள்" என்று கூறுகின்றது.

அல்லது, கங்கையைத் தாங்கிய சடாமுடியினன் என்பதுமாம்.

அல்லது, ஏனைய தேவர்களால் தாங்க முடியாத கங்கையின் வேகத்தை தனது சடையின் கண்ணே மிக எளிதாய்த் தாங்கிக் கொண்டவன், அதாவது பெரும் பிரவாஹத்தை ஒரு துளியெனக் கொண்டருளியவன் என்பதுமாம்.

அது பற்றியே, பாரதமும்,

“ ந ஶக்தஸ்த்ரிஷு லோகேஷு கஶ்சிந்தாரயிதும் நப |
ஆந்ருதே விபுதஶ்ரேஷ்டாந்நீலகண்டாந்மஹேஶ்வராத் ”

“ வேந்த ! தேவர்களுட் சிறந்த நீலகண்டனாகிய மகேசுரனைத்தவிர்த்து மூன்றுலகத்துள்ளும் ஏனைய தேவர்களால் தாங்கமுடியாது என்று கங்கா தேவி கூறுகின்றாள் ” என்று கூறுகின்றது.

ஈண்டு, பரமேசுரனுடைய சிரசிற் படுதலானே கங்கை மிகப் புநிதமாயிற்றென்றும், அத்தகைய கங்கைநீர் உலகைப் புநிதப்படுத்துவதென்பதும் கொள்ளக்கிடந்த பொருளாம்.

இப்பொருளையே கூர்ம புராணமும்,

“ ஸர்வம்ஶியே கலியுகே தோஷாணாம் ஸகல மோசநீ ”

“ இத்தகைய கலியுகத்தில் தோஷங்களை ஒருதலையாப் போக்குவது ” என்றற் றொடக்கத்துச் சுலோகங்களாற் கூறுகின்றது.

இதனாலன்றே, சிவ தருமநூலும்,

“ அபவித்ர: பவித்ரோவா ஸர்வாவஸ்தாம் கதோபிவா |
யஸ்ஸ்மரேத்தேவ ஈஶாநம் ஸ பாஹ்யாப்யந்தரஶ்ஶுசி: ”

“ எந்த அவத்தையுடனிருந்தேனும், புநிதனாயிருந்தேனும், புநிதமற்றவனாயிருந்தேனும் எவன் பரமேசுர தேவனை நினைக்கின்றானோ, அவன் உள்ளும் புறம்பும் புநிதனாகின்றான் ” என்று கூறுகின்றது.

“ பரசிவனை வழிபடுவோர்க்கும் பரமேசுரனால் அநுக்கிரகிக்கப் பெறுவோர்க்கும் வணக்கம் ” என்பது.

இஃது உருத்திர கணங்களைப் பற்றியதாம். பிரமத கணங்கள் எவ்வாறு வழிபடுகின்றார்களோ, அவ்வாறே பரமேசுரனும் அவர்களை பற்றிக் கொண்டருளலின் என்க.

மிக வலியை யுடையவர்கட்கும், கொடிய பிராணிகளைக் கொல்லுகின்றவர்கட்கும் வணக்கம் ” என்பது.

இதுவும் உருத்திர கணங்களைப்பற்றியதாம். இதையே புலாலருந்துவோர்களுக்கும் வணக்கம் என்பர் சிலர்.

தன்னை மறைத்துக் கொள்கின்றவனுக்கும், தன்னை வெளிப்படுத்தியருள்கின்றவனுக்கும் வணக்கம் என்பது.

தனது மாயா சத்தியால் தனது சொரூபத்தை மறைத்துக்கொண்டு திரோபவமாகிய தொழிலைச் செய்கின்றவனும், தனது சிற்சத்தியால் தனது சொரூபத்தை ஆன்மாக்கட்குத் தரிசிப்பித்து அநுக்கிரகஞ் செய்தருள்கின்றவனுமாகிய உருத்திர பரமேசுரனுக்கு வணக்கம் என்பது பொருள்.

இது நேரே பகவான் உருத்திர பரமேசுரனுக்கு வணக்கங் கூறி முடிக்கின்றதாம்,

அற்றாகவின்றே அதர்வண சுருதியும்,

"யமெ வைஷ வ்ருணுதெ தெந லப்யஸ்தஸ்யைஷ
ஆத்மா விவ்ருணுதெ"

"எவன் இப் பரமேசுரனையே பக்தி செய்கின்றானோ, அவனுக்குப் பரமேசுரன் தனது சொரூபத்தை உள்ளவாறு தரிசிப்பிக்கின்றான்" என்று கூறுகின்றது.

## சாமவேத உருத்திரீய சங்கிதை விருத்தியுரை

முற்றும்.

---

சாமவேத உருத்திர சங்கிதை

முற்றிற்று.

---

சுப்ரமண்யோம் ! சுப்ரமண்யோம் ! ! சுப்ரமண்யோம் ! !



# அதர்வண வேதத்திலுள்ள
## உருத்திர மந்திரங்களின்
## சங்கிரகம்.

மந்திரம்—1

भवाशर्वौ मृडतं माभियातं भूतपती पशुपती नमो वाम् ।
प्रतिहितामायतां माविस्राष्टं मानो हिंसिष्टं द्विपदोमा चतुष्पदः ॥

அதர்வ—காண்டம்-11, சூக்தம்-2.

**உரை.**

எல்லா வுயிர்கட்கும் இறைவரும், உயிர்களனைத்தையும் பாதுகாப்பவரு மாகிய பவன் சருவன் என்பவர்களே! அதாவது ஆக்கி அழிக்கின்ற உருத்திர பரமேசுரர்களே! நீவிர், எம்மைச் சுகப்படுத்துவீர்களாக. முனிவோடு படை யெடுக்காதருள்வீர்களாக. கொல்வதன் பொருட்டு விடுத்த பெரும்படையை வழிபடுவோர் மீது விடாதருள்வீர்களாக. எமது, இருகாற் பிராணிகளையும், நாற்காற் பிராணிகளையுங் கொல்லாதருள்வீர்களாக. உங்களிருவருக்கும் வணக் கம் என்பது.

மந்திரம்—2

शुने क्रोष्ट्रेमा शरीराणि कर्तमलिक्लवेभ्यो गृध्रेभ्यो येच कृष्णा अविष्यवः ।
मक्षिकास्ते पशुपते वयांसि ते विघसे मा विदन्त ॥

**உரை.**

நாய்க்கும், நரிக்கும், பயங்தருஞ் செந்நாய் முதலான தீய உயிர்கட்கும், பருந்து முதலியவைகட்கும், எமது உடம்பை உணவாகச் செய்யாதருள்வீர் களாக. மற்றும், பச்சை ஊன் உண்ணும் காக்கை முதலான பறவைகளும் ஈக்களும், பொதுவாகிய பறவைகளும் உணவில் உட்காராதபடி அருள்புரிவீர் களாக என்பது.

மந்திரம்—3

क्रन्दाय ते प्राणाय याश्चते भव रोपयः ।
नमस्ते रुद्र कृण्मः सहस्राक्षायामर्त्य ॥

உரை.

உலகைப் படைப்போய்! ஒலிக்கின்ற மகாப்பிராணவடிவாகிய உனக்கு வணக்கம். உருத்திர! கண்ணைக்கவரும் திருமேனிகொண்ட உனக்கு வணக்கம். இறப்பற்றோய்! ஆயிரக்கணக்கான இந்திரியங்களையுடைய உனக்கு வணக்கம்.

மந்திரம்—4

पुरस्तात्ते नमः कृण्म उत्तरादधरादुत ।
अभीवर्गात् दिवस्पर्यन्तरिक्षाय ते नमः ॥

உரை.

கிழக்கிலுள்ள உருத்திரனுக்கு வணக்கம். வடக்கிலுள்ள உருத்திரனுக்கு வணக்கம். தெற்கிலுள்ள உருத்திரனுக்கு வணக்கம். மேற்கிலுள்ள உருத்திரனுக்கு வணக்கம். மற்றும், சுவர்க்கத்தில் இரவியாயும், அந்தரிக்கத்தில் வாயுவாகவும், பூமியில் அக்கினியாகவும் விளங்கும் உருத்திர பரமேசுர! உனக்கு வணக்கம் என்பதாம்.

மந்திரம்—5

मुखाय ते पशुपते यानि चक्षूंषि ते भव ।
त्वचे रूपाय संदृशे प्रतीचीनाय ते नमः ॥

உரை

உயிர்களைப் பரிபாலிக்கும் உருத்திர பரமேசுர! உனது திருமுகத்திற்கு வணக்கம். உயிர்களைப் படைப்போய்! உனது திருமுகத்திற்கு வணக்கம். மற்றும், இரவி, மதி, தீ என்னும் உனது முக்கண்ணிற்கும் வணக்கம். உனது ஞானேந்திரியங்கட்கு வணக்கம். உனது கருமேந்திரியங்கட்கு வணக்கம். பல்வகை அருட் டிருமேனிகளை எடுத்தருளும் உனக்கு வணக்கம் என்பது.

மந்திரம்—6

अङ्गेभ्यस्त उदराय जिह्वाया आस्याय ते ।
दद्भ्यो गन्धाय ते नमः ॥

உரை.

உருத்திர பரமேசுர ! உனது, திரு அவயவங்கட்கும், திருவயிற்றிற்கும், திருநாவிற்கும், திருமுகத்திற்கும், திருப்பற்களுக்கும், திருமூக்கிற்கும் வணக்கம் என்பது.

மந்திரம்—7

अस्त्रानीलं शिखण्डेन सहस्राक्षेण वाजिना ।
रुद्रेणार्धकघातिना तेन मा समरामहि ॥

உரை

அஸ்திரத்தை எறிவோனும், மிகவிரைவிற் செல்வோனும், மயிலின் இறகைத் தரித்தோனும், ஆயிரங் கண்களை யுடையவனும், பகைவர்முன் சென்று சேனைகளை யழிப்போனுமாகிய உருத்திர பரமேசுரனுடன் யாம் போர் புரியோம் என்பது.

மந்திரம்—8

सनो भव परितृणक्तु विश्वत आप इवाग्निः परिवृणक्तुनो भवः ।
मानोभिमांस्त नमो अस्त्वस्मै ॥

உரை.

அவ்வுருத்திர பரமேசுரன், எல்லாத் துன்பங்களிலிருந்தும் எம்மைப் பாதுகாப்பானாக. எவ்வுருத்திரன், நீரும் தீயும் ஒன்றை யொன்று தடைப் படுத்துவதுபோற், பீடைகளைத்தடுத்து எம்மைப் பாதுகின்றவனும், எவ்வாற்றானும் எம்மைக் கொல்லாதவனுமாவனோ, அவ் வுருத்திரனுக்கு வணக்கம் என்பது.

மந்திரம்—9

चतुर्नमो अष्टकृत्वो भवाय दशकृत्वः पशुपते नमस्ते ।
तवेमे पञ्च पशवो विभक्ता गावो अश्वाः पुरुषा अजावयः ॥

உரை.

உலகைப்படைப்போய்! உனக்கு, நான்கு முறையும், எட்டு முறையும் வணக்கங்கள். உயிர்களைப் பாதுகாப்போய்! உனக்கு, பத்து முறை வணக்கங்கள். மற்றும், உனக்கு, கோ, குதிரை, மனிதன், ஆடு, பள்ளை ஆடு என்னும் ஐவகை வேறுபாடுகளையுடைய பசுக்கள் உள்ளன என்பது.

மந்திரம்—10

तव चतस्रः प्रदिशस्तवद्यौस्तवं पृथिवी तवेद मुग्रोर्वन्तारिक्षम् ।
तवेदं सर्वमात्मन्वद्यत्प्राणत्पृथिवी मनु ॥

உரை

உக்கிரமுடையோய்! நான்கு திசைகளும் உன்னுடையவைகளேயாம். மற்றும், சுவர்க்கம், விரிந்த அந்தரிக்கம், பூமி என்னும் மூவுலகங்களும் உன்னுடைவைகளேயாம். அஃதன்றியும், செயலுடையவைகளாய்க் காணப்படும் உயிர்களும், மண்ணிலுள்ள ஏனைய பிராணிகளும் உன்னுடையவைகளேயாகின்றன என்பது.

மந்திரம்—11

उरुः कोशो वसुधानस्तवायं यस्मिन्निमा विश्वा भुवनान्यन्तः ।
सनो मृड पशुपते नमस्ते परः क्रोष्टारो अभिभाः श्वानः परोयन्त्वघरुद्रो विकेश्यः ॥

உரை.

விரிந்ததும், பாவபுண்ணியங்கட்கிடமும், உள்ளில் எல்லாப் புவனங்களும் இருக்கப் பெற்றதுமாகிய இவ்வண்டகோசம் நின்வசமுடையதாம். அத்தகைய உருத்திர பரமேசுர! நீ எமக்குச் சுகத்தை அருள் செய்வாயாக. உனக்கு வணக்கம். எதிர் நோக்கிவரும் ஊளையிடும் பிராணிகளும், கடிக்கும் நாய் முதலியவைகளும், மயிரை விரித்துப்போட்டுக்கொண்டிருக்கும் பிசாசு முதலியவைகளும், நின்னருளால், எம்மிலிருந்து தூரத்தில் விலகிப் போகுக என்பது.

மந்திரம்—12

धनुर्बिभर्षि हरितं हिरण्ययं सहस्रघ्नि शतवधं शिखण्डिन् ।
रुद्रस्येषुश्चरति देवहेतिस्तस्यै नमो यतमस्यां दिशीऽतः ॥

உரை.

உருத்திர பரமேசுர! நீ, பச்சை நிறமுடையதும், பொன்னொளியை யுடையதும், ஆயிரக்கணக்கான உயிர்களைக் கொல்வதும், மயிலிறகுகளால் அழகுடையதும், நூற்றுக்கணக்கான பிராணிகளைக் கொல்வதுமாகிய உனது தநுவை, பிரளய காலத்தில் திருக்கரத்திற் றாங்கியருளுகின்றனை; அத்தகைய உனது தநுவிற்கு வணக்கம். உருத்திரனுடைய தெய்வத்தன்மை பொருந்திய பாணம் எங்கும் உலாவுகின்றதாம்; அதற்கும் வணக்கம். மற்றும், எம்முடைய இடத்திலிருந்து எத்திசைக்கண் அப்பாணம் இருக்கின்றதோ, அத்திசைக்கும் வணக்கம் என்பது.

மந்திரம்—13

योऽ३ भियातो निलयते त्वां रुद्र निचिकीर्षति ।
पश्चादनुप्रयुङ्क्षे तं विद्धस्य पदनीरिव ॥

உரை.

உருத்திர பரமேசுர! ஏவற் றொழிலால் எம்மைத் துன்புறுத்துகின்றவன், உனக்கெதிரில் நில்லாமல் மறைந்துகொண்டு உன்னையுங் கட்டுவதற்கு விரும்புகின்றான். அவனை, பாணம்பட்டு ஓடிப்போன மான் முதலியவைகளை, அடியைப் பார்த்துக் கண்டுபிடித்துக் கொல்வதுபோல், அடியைப் பார்த்துக் கண்டுபிடித்துக் கொன்றருள்வாயாக என்பது.

மந்திரம்—14

भवारुद्रौ सयुजा संविदानावुभावुग्रौ चरतो वीर्याऽय ।
ताभ्यां नमो यतमस्यां दिशीइतः ॥

உரை.

பவ உருத்திரர்களே! நீவிரிருவரும் ஒன்றாய்க் கூடியிருக்கும் நண்பர்களாவீர்கள். எல்லாவற்றின் இனிய உணர்ச்சியை யுடையவர்கள். உக்கிர முடையவர்கள். அன்பர்கட்கு நலத்தைப் பெருக்குவதன் பொருட்டுத் திரிகின்றவர்கள். இவ் விடத்திலிருந்து வடக்கிலுள்ள கைலையங்கிரியில் வாழ்கின்றவர்கள் உங்கட்கு வணக்கம் என்பது.

மந்திரம்—15

नमस्तेस्त्वायते नमो अस्तु परायते ।
नमस्ते रुद्र तिष्ठत आसीनायोतते नमः ॥

உரை.

உருத்திர பரமேசுர! வந்தருளுகின்ற உனக்கு வணக்கம். திரும்பிப் போயருளுகின்ற உனக்கு வணக்கம். நின்றருளும் உனக்கு வணக்கம். உட்கார்ந்தருளும் உனக்கு வணக்கம் என்பது.

மந்திரம்—16

नमः सायं नमः प्रातर्नमो रात्र्या नमो दिवा ।
भवाय च शर्वाय चोभाभ्यामकरं नमः ॥

உரை

உருத்திர பரமேசுர! உனக்கு மாலைப்போதில் வணக்கம். காலைப்போதில் வணக்கம். இரவில் வணக்கம். பகலில் வணக்கம். பவன் சர்வன் என்னுந் தங்களிருவருக்கும் யான் வணக்கஞ் செய்கின்றேன் என்பது.

மந்திரம்—17

सहस्राक्षमतिपश्यं पुरस्ताद् रुद्रं मस्यन्तं बहुधाविपश्चितम् ।
मोपाराम जिह्वयेयमानम् ॥

உரை.

ஆயிரக்கணக்கான திருக்கண்களை யுடையவனும், நுண்ணிய பொருள்களை நோக்கி யருளுகின்றவனும், பல்வகைக் கிரணங்களை விரிக்கின்றவனும், நுண்ணிய திருநோக்குடையவனும், கிரணங்களின் நுனிகளால் எங்கும் நிறைந்திருக்கின்றவனும் சூரிய மண்டலத்திற் கிறைவனுமாகிய உருத்திர பரமேசுரனை, யான் பகை செய்து கொள்ளமாட்டேன் என்பது.

மந்திரம்—18

श्यावाश्वं कृष्णमसितं मृणन्तं भीमं रथं केशिनः पादयन्तम् ।
पूर्वे प्रतीमो नमो अस्त्वस्मै ॥

உரை.

இருட்டின் பந்தமிலாததும், எழுவகை நிறங்களையுடைய கிரணங்களுடன் கூடியதும், இருட்டைத் தொலைப்பதுமாகிய இரவியின் இரதத்தை (மண்டலத்தை) ஏவுகின்ற உருத்திர பரமேசுரனை, போற்றுகின்றவர்களுக்கு முன்னரே யான் துதிக்கின்றேன். காணப்படும் இரவி மண்டலத்திலுள்ள உருத்திர பரமேசுரனுக்கு வணக்கம் என்பது.

மந்திரம்—19

मानोऽभिस्रा मर्त्यं देवहेतिं मानः क्रुधः पशुपते नमस्ते ।
अन्य त्राऽसाद्दिव्यां शाखां विधूनु ॥

உரை.

உருத்திர பரமேசுர! தேவசம்பந்தமாகிய பாணத்தை, மனிதத் தன்மையையுடைய மனிதரைக் குறித்து விடாதருள்வாயாக. பரிபாலிக்கும் தேவ! எம்மீது முனிவு கொள்ளாதருள்வாயாக. உனக்கு வணக்கம். எமைத் தவிர்த்த ஏனைய விடங்களிலும், வானிலும், விரிந்து நிற்கும் நினது ஆற்றலை விடுத்தருள்வாயாக என்பது.

மந்திரம்—20

मानो हिंसीरधिनो ब्रूही परिणो वृङ्ग्धिमा क्रुधः ।
मात्वया समरा महि ॥

உரை

உருத்திர பரமேசுர! நீ, எம்மைக் கொல்லாது அருள்வாயாக. எமக்குச் சிறந்த உபதேசஞ் செய்வாயாக. உன்னுடைய பரந்த ஆற்றலாகிய பாணத்தினின்று எம்மை வேறுபடுத்தி யருள்வாயாக. எம்மீது கோபஞ் செய்யாதருள்வாயாக. உனக்கு யான் தீயகாரிய மொன்றுஞ் செய்யமாட்டேன் என்பது.

மந்திரம்—21

मानो गोषु पुरुषेषु मागृधोनो अजाविषु ।
अन्यत्रोग्र विवर्तय पियारुणां प्रजां जहि ॥

உரை.

உக்கிரமுடைய உருத்திர பரமேசுர! எமது, கோக்களுள்ளும், ஆடுகளுள்ளும் ஒன்றையுங் கொல்ல விரும்பாதருள்வாயாக. எமது மனிதர்களுள் ஒருவரையுங் கொல்ல விரும்பாதருள்வாயாக. எம்மைத் தவிர்த்த ஏனைய பகைவருடைய பிரசைகளை மாறி மாறிக் கொல்வாயாக என்பது.

மந்திரம்—22

यस्य तक्मा कासिका हेतिरेकमश्वस्येव वृषणः क्रन्द एति ।
अभिपूर्वं निर्णयते नमो अस्त्वस्मै ॥

உரை.

துக்கத்துடன் வாழ்வதும், காயல் முதலான நோய்களில் இளைச்சுவிடு கின்றதும், கொல்லுந் தன்மையையுடையதுமாகிய உருத்திரனுடைய வன்மை, ஆற்றல் மிகுந்த குதிரை, கணைத்துக்கொண்டு முறையாய் ஒவ்வொரு ஒலியைக் காட்டுவதுபோல், ஒவ்வொன்றை யடைகின்றது. அத்தகைய ஆற்றலுள்ள இவ்வுருத்திரனுக்கு வணக்கம் என்பது.

மந்திரம்—23

यो ऽन्तरिक्षे तिष्ठति विष्टभितो ऽयज्वनः प्रमृणन् देवपीयून् ।
तस्मै नमो दशभिः शक्करीभिः ॥

உரை.

அந்தரிக்ஷத்தில் அசைவற்று பல்வகை வடிவுட னிருக்கின்றவனும், தீ யோம்பாமல் தேவர்கட்குப் பகைவரான அசுரர்களை அடியோடு கொன்ற ருள்கின்றவனுமாகிய உருத்திரனுக்கு, பத்து விரல்களுடன் கூட இரண்டு கைகளையுங் குவித்து வணங்குகின்றேன் என்பது.

மந்திரம்—24

तुभ्यमारण्याः पशवो मृगा वने हिता हंसाः सुपर्णाः शकुना वयांसि ।
तव यक्षं पशुपते अप्स्वऽन्तस्तुभ्यं क्षरन्ति दिव्या आपो वृधे ॥

உரை.

வனத்திலுள்ள புலி, மான் முதலானவைகள், விலங்குகள், அன்ன முத லியவைகள், ஏனைய பட்சிகள், விசித்திரமான சிறகுகளையுடைய மயில் முத லானவைகள், பருந்து முதலானவைகள் பெருகும்படி பாதுகாத்தருளும் உனக்கு வணக்கம். எல்லாப் பிராணிகளையும் பாதுகாக்கும் உருத்திர பரமே சுர! போற்றத்தக்க கிரண மண்டலத்தின் நடுவிலிருந்து வானின் மழை யைப் பெய்விக்கின்ற உனக்கு வணக்கம் என்பது.

மந்திரம்—25

शिंशुमारा अजगराः पुरीकया जषा मत्स्या रजसा येभ्यो अस्यसि ।
नते दूरं न परिष्ठास्ति ते भव सद्यः सर्वान् परि पश्यसि भूमिं पूर्वस्माद्धंस्युत्तरस्मिन्समुद्रे ॥

**உரை**

உருத்திர பரமேசுர! நீ, முதலை, பாம்பு, நுண்ணிய பாம்பு போன்ற மீன்கள், பொதுவாக மீன்கள் முதலான நீர்வாழும் பிராணிகள் நிறைந்துள்ள, கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்னும் நான்கு கடல்களின்மீது ஒரு கணப் போதிற் செல்கின்றனை. உருத்திர! நீ, எங்குங் கலந்துள்ளாய். அனைத்தையும் பார்க்கின்றாய். உனக்கு இது தூரமன்று. எங்குமுள்ள பிரமாண்டத்தை ஆக்கி யழித்தருளுகின்றாய். இது உனக்கு ஒரு அதிசயமில்லை என்பது.

**மந்திரம்—26**

**मानो रुद्र तक्मना मा विषणमानः संस्रा दिव्ये नाग्निना ।**
**अन्यत्रासद् विद्युतं पातयैताम् ॥**

**உரை.**

உருத்திர பரமேசுர! நீ, பீடைதருஞ் சுரநோயைக் கொடுத்து எம்மை வாட்டாதருள்வாயாக. விடவாயுவைக் கொண்டு எம்மைத் துன்புறுத்தாதே. வானின் பரந்த இரவியின் வெய்யிலால் எம்மை வாட்டாதே. எமக்கு வேறாகிய விடத்தில் இம் மின்னல்த் தீயை விழும்படி செய்தருள்வாயாக என்பது.

**மந்திரம்—27**

**भवो दिवो भव ईशे पृथिव्या भव आपं प्रउर्वं १ न्तरिक्षम् ।**
**तस्मै नमो यत मस्यां दिशी इतः ॥**

**உரை.**

சுவர்க்கத்திற்கு, உருத்திர பரமேசுரன் இறைவன். பரந்த அந்தரிக்ஷத்திற்கும் உருத்திர பரமேசுரன் இறைவன். மண்ணிற்கும் உருத்திர பரமேசுரன் இறைவன். இவ்வுருத்திரன் கதிரோனாயிருந்து கிரணங்களைக் கொண்டு எங்கும் நிறைந்திருக்கின்றான். இவன், எத்திசையில் சிறப்பாய் விளங்குகின்றானோ, அத்திசையிலுள்ள அவனுக்கு வணக்கம் என்பது.

**மந்திரம்—28**

**भवं राजन् यजमानाय मृड पशूनां हि पशुपतिर्बभूथ ।**
**यः श्रद्धाति सन्ति देवाइति चतुष्पदे द्विपदेऽस्य मृड ॥**

**உரை.**

ஒளிவடிவ உருத்திர பரமேசுர! நீ, இருகால், நாற்காற் பசுக்களைப் பாதுகாப்போனாயிருக்கின்றாய். உனக்கு, எட்டு மங்கள வடிவங்களுள்ளன.

என்றும் அன்போடு யாகத்தால் வழிபடுகின்ற எசமானனுடைய, இருகாற் பிராணிகளான புதல்வன் மனைவி முதலானோரையும், நாற்காற் பிராணிகளான குதிரை முதலானவைகளையும், ஆக்கியருளுந் தேவதேவா ! நீ, இன்பமளித் தருள்வாயாக. இறந்தபின், எசமானனுக்கு (யாகத்தால் வழிபட்டவனுக்கு) முத்தி யின்பத்தைக் கொடுத்தருள்வாயாக என்பது.

மந்திரம்—29

मानो महान्तं मुतमानो अर्भकं मानो वहन्तमुत मानो वक्ष्यतः ।
मानो हिंसीः पितरं मातरं च स्वां तन्वऽरुद्र मारीरिषो न ॥

உரை.

உருத்திர பரமேசுர ! நீ, எம்முடைய பெரிய மனிதர்களைக் கொல்லா தருள்வாயாக. மற்றும், எமது, குழந்தைப் பருவமுடையவர்களையுங் கொல் லாதருள்வாயாக. அன்றியும், எமது, சுமை எடுக்கும் காளைப்பருவ முடைய மனிதர்களையுங் கொன்றுவிடாதருள்வாயாக. கொல்லவரும் வயிரக்கா ரையுங் கொல்லாதருள்வாயாக. எமது, பிதாவையுங் கொல்லாதருள்வாயாக. எமது, மாதாவையுங் கொல்லாதருள்வாயாக. எமது உடம்பையுங் கொல்லா தருள்வாயாக என்பது.

மந்திரம்—30

रुद्रस्यैलबकारेभ्यो संसूक्तगिलेभ्यः ।
इदं महास्येभ्यः श्वभ्यो अकरं नमः ॥

உரை

முதலில் உருத்திரபரமேசுரனாற் செலுத்தப்பட்டவர்களும், பகைவர்கள் மேற்செல்லும்போது, கொல்லு, வெட்டு என்பது முதலான தீய சொற்களைச் சொல்கின்றவர்களும், கிணறு போன்ற பெரிய வாய்களையுடையவர்களுமான சுவர்க்கத்திலுள்ள உருத்திர கணங்கட்கு வணக்கஞ் செய்கின்றேன் என்பது.

மந்திரம்—31

नमस्ते घोषिणीभ्यो नमस्ते केशिनीभ्यः ।
नमो नमस्कृताभ्यो नमः संभुञ्जतीभ्यः ।
नमस्ते देवसेनाभ्यः स्वस्तिनो अभयं चनः ॥

**உரை.**

*உருத்திர பரமேசுர! பேரிரைச்சற் செய்கின்ற உனது கணசேனைகட்கு வணக்கம். பல்வகையாகப் பேசிக்கொண்டிருக்கும் உனது சேனைகட்கு வணக்கம். வணங்கத்தக்க உனது சேனைகட்கு வணக்கம். உண்டுகளிக்கும் உனது கணங்கட்கு வணக்கம். உருத்திரதேவ! எம்மை, எல்லாவகையான பயங்களினின்றும் விடுவித்தருள்வாயாக. முடிவில், இனிய இன்ப நிலையையுந் தந்தருள்வாயாக என்பது.*

**முதல் சூக்தம் முற்றும்.**

---

## *அதர்வண வேதத்திலுள்ள ருத்ர மந்திரங்களின்*
## இரண்டாஞ் சூக்தம்.

---

மந்திரம்—1

**मित्रश्च वरुणश्चेन्द्रो रुद्रश्च चेततु ।**
**देवासो विश्वधायसस्ते माञ्जन्तु वर्चसा ॥**

**உரை.**

*மித்திரன், வருணன், இந்திரன், உருத்திரன், உலகைத் தாங்குந் தேவர்கள் எமக்கு அருள் செய்வார்களாக. மற்றும், அவர்கள், எம்மை அழகால் விளங்கும்படி செய்வார்களாக என்பது.*

மந்திரம்—2

**असौ मणिवर्मं बध्नन्तु देवा इन्द्रो विष्णुः सविता रुद्रो अग्निः ।**
**प्रजापतिः परमेष्ठी विराट् वैश्वानर ऋषयश्चसर्वे ॥**

*கா*—5, *சூ*-5, *ம*-10.

உரை.

*அக்கினி, இந்திரன், விஷ்ணு, சூரியன், விராட் புருடன், வைசுவானரன் பிரசாபதி, பிரமன், இருடிகள், உருத்திரன் என்னுமிவர்கள் எம்மைப் பாதுகாத்தற் பொருட்டு கெடாத கவசத்தைக் கட்டுவார்களாக என்பது.*

மந்திரம்—3

**मित्रश्च वरुणश्चांसौ त्वष्टाचार्यं माचदोषणी महादेवो बाहू ॥**

*கா*—9. *சூ*-22, *ம*-7.

உரை.

மித்திரன் வருணன் என்னுமிருவரும், அண்டத்தின் தோள்களாவர். விசுவகருமன் அரியமன் என்னுமிருவரும் தோல்களாவர். மகாதேவன் கைகளாவன் என்பது.

மந்திரம்—4

योनः स्वोयो अरणः सजात उत निष्ट्यो यो अस्माँ अभिदासति ।
रुद्रः शरव्याग्रे तान्ममामित्रान्विविध्यतु ॥

உரை.

துன்புறுத்தி எமது வீட்டைக் கவர்ந்து கொள்கின்ற எங்குலப் பகைவரையும்; பேசுதற்குங்கூட தகுதியற்ற எங்குலத்தில் மிகத்தாழ்ந்தவராய் எம்மைப் பிடிக்கின்ற பகைவரையும், மரியாதையற்றவர்களானதால், உருத்திரபரமேசுர! நீ, பாணத்தாற் கொன்றுவிடுவாயாக என்பது.

மந்திரம்—5

भूत पतिर्निरजत्विन्द्रश्चेतः सदान्वाः ।
गृहस्य बुध्न आसीनास्तो इन्द्रो वज्रेणाधितिष्ठतु ॥

உரை.

எல்லாப் பிராணிகளையும் பாதுகாத்தருளும் உருத்திர பரமேசுரன், எப்போதும் அழுது கொண்டிருக்கும் பேய்களை எமது வீட்டிலிருந்து வெளிப்படுத்தி யருள்வானாக. மற்றும், உருத்திர பரமேசுரன், வீட்டின் அடியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் பூதங்களை வச்சிரத்தால் தனது வசப்படுத்தி வைப்பானாக என்பது.

மந்திரம்—6

रुद्रावो ग्रीवा अशरैत्पिशाचाः पृष्टीर्वो पिंश्रृणातु यातुधानाः ।
वीरुद्वो विश्वतो वीर्यायमेनसमं जीगमत् ॥

அத. 6-32-2.

உரை.

பூதங்களே! உங்களுடைய கழுத்துக்களை, உலகை அழித்தருளும் உருத்திரன் அறுத்து விடுவானாக. யாது தானர்கள் என்னும் அசுரர்களே! உங்களுடைய இடுப்புக்களை உருத்திரன் அறுத்து விடுவானாக. வன்மை நிறைந்த படர் கொடியே! நீ, எல்லாப் பூத பிரேதங்களையும் எமனுடன் சேர்த்து விடுவாயாக என்பது.

மந்திரம்—7

नमो रुद्राय नमो अस्तु तक्मने नमो राज्ञे वरुणायत्विषीमते ।

नमो दिवे नमः पृथिव्यै नम ओषधीभ्यः ॥

உரை.

உருத்திர பரமேசுரனுக்கு வணக்கம். சுரநோய்க்கு அபிமானி தேவதையின் பொருட்டு வணக்கம். வருணராசனுக்கு வணக்கம். சுவர்க்கத்திற்கு வணக்கம். மண்ணின் பொருட்டு வணக்கம். கொடி செடிகட்கு வணக்கம் என்பது.

மந்திரம்—8

रुद्रस्य मूत्रमस्यमृतस्यय नाभिः ।

विषाणका नामवा असिपितॄणां मूलादुत्थिता वातीकृत नाशनी ॥

அத-6-21-3.

உரை.

உருத்திர பரமேசுரனுடைய வீரியமாகிய வாதரசம், நீண்ட வாழ்நாளினிலை நிறுத்துவதாயிருக்கின்றது. விசேடமான நோய்களை நீக்குவதாயிருக்கின்றது. பிதிர்த் தேவதைகளின் மூலகாரணத்திலிருந்து உண்டாகும் தாது நஷ்டத்தைப் போக்குவதாயிருக்கின்றது என்பது.

மந்திரம்—9

इदमिद्वा उ भेषजमिदं रुद्रस्य भेषजम् ।

येनेषुमेकं तेजनां शतशल्यामप ब्रवत् ॥

அத. 6-44-3.

உரை.

உருத்திர பரமேசுரன், நோய்கட்கு உண்மை மருந்தானதும், திரிபுரத்தை எரித்ததுமாகிய நூற்றுக்கான கணுக்களையுடைய நீண்ட பாணத்தைப் போட்டு விட்டு எம்முடன் திருவாய் மலர்ந்தருள்வானாக என்பது.

மந்திரம்—10

जलाषेणाभिषिञ्चत जालाषेणोपसिञ्चत ।

जलाषमुग्रं भेषजं तेननो मृडजीवसे ॥

அத. 6-44-3.

**உரை.**

உருத்திர பரமேசுர! நீ, எம் மருந்தை நலத்தின் பொருட்டு எங்கு தெளித்து விடுகின்றனையோ, அம் மருந்தை எம்முடைய பிரசைகள் நீண்ட நாள் வாழ்ந்திருத்தற் பொருட்டு நன்றாய்த் தெளித்தருள்வாயாக. அம் மருந்தை எமதுள்ளத்திலுமிருக்கும்படி செய்தருள்வாயாக என்பது.

மந்திரம்—11

**शंचनो मयंश्चनो माचंनः किंचनाममत् ।**
**क्षमारपो विश्वंनो अस्तु भेषजं सर्वंनो भेषजम् ॥**

அத. 6-57-2.

**உரை**

உருத்திர பரமேசுர! எமது பிணியை நலப்படுத்தி யருள்வாயாக. எமக்கும் நலந்தருவாயாக. எமது சுற்றத்தார்க ளனைவரும் பிணியாற் பீடிக்கப் படாதவர்களாகுக. பிணிகளும் அடங்கி யொழிக. உலகத்தார்க்கும் எமக்கு மங் களமாகுக. எல்லாத் தேசத்தவர்களும் நலமடைவார்களாக என்பது.

மந்திரம்—12

**विश्व रूपां सुभगामच्छा वंदामि जीवलाम् ।**
**सानो रुद्रस्यास्तां हेतिं दूरं नयतु गोभ्यः ॥**

அத. 6-57-3.

**உரை.**

அழகுடைய பல்வகை வடிவங்களைக் காட்டுகின்றதும், வாழ்க்கை யளிப் பதுமாகிய சகதேவி என்னும், கொடி செடிகளின் அபிமானி தேவதைக்கு நேரே நின்றுகொண்டு விரும்பிய பயன் வேண்டுமென்று போற்றுகின்றேன். கொடி செடிகட்கு அபிமானி தேவதையால் எறியப்பட்டு நீரிற் கலந்துள்ள பிணியாகிய சத்தியை, எமது பிரசை மாடு முதலானவைகளினின்றும் மிகத் தூரத்திற் கொண்டு போய் எறிந்துவிடுக என்பது.

மந்திரம்—13

**यांते रुद्र इषु मास्यदङ्गेभ्यो हृदयाय च ।**
**इदंतामद्यत्वद्वयं विषूचीं विवृहामसि ॥**

அத. 6-90-1.

**உரை.**

பிணியாளா! உனது, கைகால் முதலான அங்கங்களுக்கும், இருதயத்திற்கும், பிணியின் அபிமானி தேவதையாகிய உருத்திரன், எப்பிணியாகிய பாணத்தை விடுகின்றானோ, அதை இப்போது யான் விலக்குகின்றேன் என்பது.

**மந்திரம்—14**

**यास्ते शतंधमनयोङ्गान्यनुविष्ठिताः ।**
**तासां ते सर्वासां वयं निर्विषाणि ह्वयामसि ॥**

அத. 6-90-2.

**உரை.**

நோயுடையோய்! உனது அங்கங்களில் நூற்றுக்கணக்கான நாடிகளிருக்கின்றன. அவற்றுள், பிணிகளும் நிறைந்திருக்கின்றன. அந் நாடிகளைக் குணப்படுத்த விடமிலாதமருந்தைத் தேடுகின்றேன் என்பது.

**மந்திரம்—15**

**नमस्ते रुद्राऽस्यते नमः प्रतिहितायै ।**
**नमो विसृज्यमानायै नमो निपतितायै ॥**

அத. 6-90-3

**உரை.**

உருத்திர பரமேசா! உன்னால் விடுத்தருளும் பாணத்திற்கு வணக்கம். தநுவில் பூட்டியருளும் பாணத்திற்கு வணக்கம். விட்டருளிய பாணத்திற்கு வணக்கம். குறியைப் பிளக்கின்ற பாணத்திற்கு வணக்கம் என்பது.

**மந்திரம்—16**

**वायुरेनाः समाकरत् त्वष्टा पोषाय ध्रियताम् ।**
**इन्द्र आभ्यो अधिब्रवद्रुद्रो भूम्ने चिकित्सतु ॥**

அத. 6.141-1.

**உரை.**

இப் பசுமாட்டுக் கூட்டங்களை, வாயு ஒன்றாய்ச் சேர்க்குக. துவஷ்டா தேவதை, கோக்கள் பெருகுதற் பொருட்டு பசுக்களை ஏற்றுக்கொள்க. இந்திரன், இப்பசு மந்தைகட்கு நலந்தரும் பேச்சைப் பேசுவானாக. உருத்திரன் பிணி வாராதபடி உபாயஞ் செய்தருள்வானாக என்பது.

மந்திரம்—17

रुद्र जलाष भेषजनीलशिखण्डकर्मकृत् ।
प्राशं प्रतिं प्राशो जह्यरसान्कृण्वोषधे ॥

அத. 2-27-6.

உரை.

நீலமயிற்றோகை அணியனும், மருந்து வடிவனும், உலகை ஆக்கிக் காத்தழிக்குஞ் செயலுடையவனுமாகிய உருத்திர பரமேசுர! நீ, ஆசங்கிக்கும் பிரதிவாதியைக் கொன்றருள்வாயாக. கட்டுக்கொடியே! நீ, பிரதிவாதிகளின் பேச்சுக்களை யடக்கி யருள்வாயாக என்பது.

மந்திரம்—18

यईशे पशुपतिः पशूनां चतुष्पदामुतयो द्विपदाम् ।
निष्क्रीतः सयज्ञियं भागमेतुरास्पोषायजमानं सचन्ताम् ॥

அத. 12-4-52.

உரை.

இருகாற் பிராணிகட்கும், நாற்காற் பிராணிகட்கும் இறைவனுகிய பசுபதியென்னும் உருத்திரன் எல்லாப் பசுக்களையும் தன் வசப்படுத்திக்கொண்டு எக்ஞத்திற்குரிய பசுக்களை அதன்பொருட்டு விட்டருள்வானாக. தனம், பிரசை முதலானவைகள் பெருகச் செய்து எசமானனுக்கு நலத்தையருள் செய்வானாக என்பது.

மந்திரம்—19

ये गोपतिं पराणीयाथाहुर्मादा इति ।
रुद्रस्यास्तां ते हेतिं परियन्त्यचित्या ॥

அத. 12-7-8.

உரை.

வெளிநாட்ட அறிவின்மையால், சூரியனுக்கு, அர்க்கியம் (கால் கழுவுநீர்) பாத்தியம் (குடிநீர்) கொடுக்க வேண்டியதில்லை என்று சொல்கின்றவன், இறந்தபின், உருத்திர பரமேசுரனால் விடப்பட்ட கோரமாகிய பாணத்திற்கு இலக்காகின்றான் என்பது.

மந்திரம்—20

हेतिः शफानुत्खिदन्ती महा देवो ३ पेक्षमाणा ॥

உரை

உருத்திரனுடைய இச்சை வடிவ ஆயுத வன்மையானது, பாவிகளின் மூலை காரணத்தைக் களைந்து கொண்டு அருகே பொருந்து விளங்குகின்றது என்பது.

மந்திரம்—21

मृत्युर्हि कृष्णवर्त्मा ? ग्रो देवः पुच्छं पर्यस्यन्ती ॥

உரை.

காலனாகிய உருத்திர பரமேசுரனுடைய பயங்கர சத்தியானது விடப்பட்டு, பகைவருடைய பிந்திய மூலகாரணத்தைக் களைந்துவிட்டு வழிபடுவோரைக் காவலைச் செய்கின்றது என்பது.

மந்திரம்—22

तस्मै प्राच्या दिशो अन्तर्देशाद्भवमिष्वासमनुष्ठातारमकुर्वन् ॥

உரை.

கிழக்குத் திக்கின் நடுவில், தநுவைத் தாங்கிநிற்கின்றவனும், பாணத்தை விடுகின்றவனுமாகிய உருத்திர பரமேசுரனுக்கு வணக்கம். அப் பாணத்திற்கும் வணக்கம் என்பது.

மந்திரம்—23

भवएनमिष्वासः प्राच्यादिशो अन्तर्देशादनुष्ठातानुतिष्ठति
नैनं शर्वो न भवोनेशानः ॥

உரை.

கிழக்குத் திக்கின் நடுவிலிருந்து கொண்டு, தநுவை எடுத்தருளுகின்றவனும், பாணத்தை விடுத்தருள்கின்றவனுமாகிய உருத்திர பரமேசுரன், தன்னை வழிபடும் வெள்ளிக் கலை வினைப் பயனுக்குப் பொருட்டு பின்றொடர்ந்து நின்றருள்கின்றான். பவன் என்பவனும் வழிபடுவோர்களின் வினைவயையும் கொல்லமாட்டான். சருவன் என்பவனுங் கொல்லமாட்டான். ஈசானனுங் கொல்லமாட்டான் என்பது.

மந்திரம்—24

नास्य पशून्न समानान् हिनस्ति य एवं वेद ॥

உரை.

இவ்வாறு உருத்திர பரமேசுரனுடைய பெருமையை யுணர்ந்தவனுடைய பசுக்களை, உருத்திர பரமேசுரன் கொல்லமாட்டான். துன்புறுத்தவுமாட்டான். மற்றோ, பகைவனுடைய பசுக்களைக் கொல்வன் என்பது.

மந்திரம்—25

तस्मै दक्षिणा यादिशो अन्तर्देशाच्छर्वमिष्वा समनुष्ठातारमकुर्वन् ॥

உரை.

வழிபடுவோரைப் பாதுகாத்தருள்வதன் பொருட்டு தெற்குத்திசையின் நடுவில், சர்வன் என்னும் பரமேசுவரன், தநுவையெடுத்து அம்பைத் தொடுத்துவிட்டுக்கொண்டு நின்றருள்கின்றான் என்பது.

மந்திரம்—26

शर्वएन मिष्वासो दक्षिणायादिशो अन्तर्देशादनुष्ठातानुतिष्ठति
नैनं शर्वो न भवो नेशानः ॥

உரை.

அவ்வாறு தென்திசை நடுவில் நின்று கொண்டிருக்கின்ற உருத்திரன் வழிபடுகின்றவர்களுள் ஒருவரையேனுங் கொல்லமாட்டான். பவன் என்னும் ஈசுரனுங் கொல்லமாட்டான். ஈசுரனனுங் கொல்லமாட்டான் என்பது,

மந்திரம்—27

तस्मै प्रतीच्या दिशो अन्तर्देशात्पशुपतिं मिष्वास मनुष्ठातारमकुर्वन् ॥

உரை.

வழிபடுகின்றவனைப் பாதுகாத்தருள்வதன் பொருட்டு பசுபதியானவன், மேற்குத் திக்கின் நடுவில் தநுவை யெடுத்து அம்பைத் தொடுத்து விட்டுக் கொண்டிருக்கின்றான் என்பது.

மந்திரம்—28

पशुपतिरेनमिष्वासः प्रतीच्या दिशो अन्तर्देशादनु ॥

உரை.

இவனைப் பாதுகாப்பதற்கு பசுபதியாகிய உருத்திரபரமேசுரன், வழிபடுவோரைப் பின்றொடர்ந்து நிற்கின்றான். அவன் வழிபடுவோனைக் கொல்லமாட்

டான். அவ்வாறே சருவனும், பவனும் ஈசானனுங் கொல்லமாட்டார்கள் என்பது.

மந்திரம்—29

तस्मा उदीच्यादिशो अन्तर्देशादुग्रंदेवमिष्वासमनुष्ठा तारमकुर्वन् ॥

உரை.

இவனைப் பாதுகாப்பதற்கு மேற்கித் திக்கின் நடுவில் உக்கிரன் என்னும் பரமேசுரன், தநுவை யெடுத்து அம்பைத் தொடுத்து விட்டுக் கொண்டிருக்கின்றான் என்பது.

மந்திரம்—30

उग्रएनं देव इष्वास उदीच्यादिशो अन्तर्देशादनु० ॥

உரை

உக்கிரன் என்னும் பரமேசுரன் வழிபடுகின்ற இவனைக் கொல்லமாட்டான். பவன், சருவன் என்பவர்களும் இவனைத் துன்புறுத்த மாட்டார்கள் என்பது.

மந்திரம்—31

तस्मै ध्रुवायां दिशो अन्तर्देशाद्रुद्रमिष्वासमनुष्ठातारमकुर्वन् ॥

உரை.

இவனைப் பாதுகாப்பதற்கு, துருவதிக்கின் நடுவில் உருத்திரன் தநுவை யெடுத்து அம்பைத் தொடுத்து விட்டுக்கொண்டு நிற்கின்றான் என்பது.

மந்திரம்—32

रुद्र एनमिष्वासो ध्रुवायां दिशो अन्तर्देशादनु० ॥

உரை.

உருத்திர பரமேசுரன் அவ்வாறு நிற்றலின் இவனைக் கொல்லமாட்டான். பவன் சருவன் என்பவர்களுங் கொல்லமாட்டார்கள் என்பது.

மந்திரம்—33

तस्मा ऊर्ध्वायां दिशो अन्तर्देशान्महादेवमिष्वास मनुष्ठातारमकुर्वन् ॥

உரை.

இவனைப் பாதுகாப்பதற்கு, மேல் திசையின் நடுவில் மகாதேவன், தநுவை எடுத்து அம்பைத் தொடுத்து விட்டுக்கொண்டு நிற்கின்றான் என்பது.

மந்திரம்—34

महादेव एनमिष्वास ऊर्ध्वाया दिशो अन्तर्देशादनु० ॥

உரை.

மகாதேவன் இவனைப் பின்றொடர்ந்து நிற்றலின், இவனைக் கொல்ல மாட்டான். பவன், சர்வன் என்பவர்களுங் கொல்லமாட்டார்கள் என்பது.

மந்திரம்—35

तस्मै सर्वेभ्यो अन्तर्देशेभ्य ईशानमिष्वासमनुष्ठातारमकुर्वन् ॥

உரை.

ஈசானன், இவனைப் பாதுகாத்தருள்வதற்கு எல்லாத் திசைகளுக்குள்ளும், தநுவை எடுத்து அம்பைத் தொடுத்து விட்டுக்கொண்டு இவனைப் பின்றொடர்ந்து நிற்கின்றான் என்பது.

மந்திரம்—36

ईशान एनमिष्वासः सर्वेभ्यो अन्तर्देशेभ्योऽनुष्ठातानुतिष्ठति
नैनं शर्वो न भवोनेशानः ॥

உரை.

இவ்வாறு நின்றருளும் ஈசானன் எல்லாத்திக்குக்களிலும் இவனைக் கொல்லமாட்டான். பவன், சர்வன் என்பவர்களுங் கொல்லமாட்டார்கள் என்பது.

மந்திரம்—37

नास्य पशून्न समानान् हिनस्ति यए वं देव ॥

உரை.

இவ்வாறுணர்ந்தவனுடைய பசுக்களை உருத்திர பரமேசுரன் கொல்லமாட்டான். ஏனைய பசுக்களைக் கொல்வன் என்பது.

மந்திரம்—38

रशिमभिर्नभ आभृतं महेन्द्र एत्यावृतः ।
सधाता सविधर्ता सवायु र्नभ उच्छ्रितम् ।

सोऽर्यमा सवरुणः सरुद्रः स महादेवः ।
सो अग्निः सउ सूर्यः सउएव महायमः ॥

**உரை.**

*உருத்திர பரமேசுரன் தனது மாயையின் தாரதம்மிய வேறுபாட்டால் மறைவாய் எண்ணிறந்த உருவங்களை எடுக்கின்றான். அவைகளாவன :—அவனே உலகைப் படைக்கும் பிரமனாவன். அவனே உலகைப் பாதுகாப்பவனாவன். அவனே சூத்ராத்மா என்னும் வாயுமாவன். அவனே மேலே சத்திய வுலகிலிருக்கின்றவன். அரியமனு மவனேயாகின்றான். வருணனுமவனேயாகின்றான். உருத்திர தேவதையு மவனேயாகின்றான். அவனே மகாதேவனாகின்றான். அவனே அக்கினியாகின்றான். அவனே பெரிய எமனாகின்றான். அவனே சூரியனாகின்றான் என்பது.*

**மந்திரம்—39**

यएतं देव मेकवृतं वेद ।
नद्वितीयोन तृतीयश्च तुर्थो नाप्युच्यते ।
नपंञ्चमो न षष्ठः सप्तमो नाप्युच्यते ।
नाष्टमो न नवमो दशमोना प्युच्यते ॥

**உரை**

*தனது மாயையால் மறைந்துக் கொண்டிருக்கும் உருத்திர பரமேசுரன் ஒருவனே யென்றுணர்ந்தவன், அவன் இரண்டல்லன், மூன்றுமல்லன், நான்குமல்லன் என்கின்றான். மற்றும், ஐந்துமல்லன், ஆறுமல்லன், ஏழுமல்லன் என்கின்றான். மற்றும், எட்டுமல்லன், ஒன்பதுமல்லன், பத்துமல்லன் என்கின்றான் என்பது.*

**மந்திரம்—40**

सरुद्रो वसुवनिर्वसुदेये नमोवाकेवषट्कारोनु संहितः ॥

**உரை.**

*அவ்வுருத்திர பரமேசுரன், வஷட் என்பதுடனும், தனங் கொடுப்பதுடனும், வணக்கத்துடனும், அவியளித்து வழிப்படுகின்றவனுக்கு, பெருநலத்தை நிறுவி யருளுகின்றான் என்பது.*

மந்திரம்—41

तस्येमे सर्वे यातव उपप्रशिषमासते ॥

உரை

செல்லுஞ் செயலையுடைய தேவர்களனைவரும் இவ்வுருத்திர பரமேசுரனுடைய ஆணையைத் தலைமேற்கொண்டு பாதுகாக்கின்றார்கள் என்பது.

மந்திரம்—42

तस्यामू सर्वान क्षत्रावशे चन्द्र मंसासह ॥

அத. 19-59-5.

உரை.

சந்திரனுடன் கூட எல்லாம் இந் நக்ஷத்திரக் கூட்டங்களும், உருத்திர பரமேசுரனுடைய வசமாயிருக்கின்றன என்பது.

மந்திரம்—43

अपश्चादग्धान्नस्य भूयासम् ।

अन्नादामान्नपतये रुद्राय नमो अग्नये ।

सभ्यः सभामे पाहिये च सभ्या संभासदः ॥

அத. 14-1-17.

உரை.

பாதுகாப்போனை யுணர்த்தி யருளுகின்றவனும், நல்ல நண்பனுமாகிய சிறந்த உருத்திர பரமேசுரனை, வணக்கத்தோடு அவியாற் பூசிக்கின்றோம். பூசித்து, வெள்ளரிப்பழம் தனது கொடியிலிருந்து விடுபடுவதுபோல், இம் மிருத்துபந்தத்திலிருந்து விடுபடுகின்றோம். இதைத் தவிர்த்து மற்றெதனாலும் பந்தம் விடுபடுவதில்லை என்பது.

மந்திரம்—44

अर्यमणं यजामहे सुबन्धुं पतिवेदनम् ।

ऊर्वारुकमिव बन्धनात्प्रेतो मुञ्चामि नामुतः ॥

அத. 7-61-1.

**உரை.**

*தீக்குள்ளிருக்கின்றவனும், நீர்க்குள்ளிருக்கின்றவனும், செடிகளுக்குள்ளிருக்கின்றவனும், படரும் கொடிக்குள்ளிருக்கின்றவனும், எல்லாப் புவனங்களின் பிராணிகளையும் ஆக்கிக் காத்தழிப்பதில் வல்லுநனுமாகிய அக்கினிவடிவ உருத்திரனுக்கும் வணக்கம் என்பது.*

அதர்வண வேதத்திலுள்ள

**உருத்திர மந்திரங்களின் சுருக்கம்**

**முடிந்தது.**

